# சீவகசிந்தாமணியில் மகளிர்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

ப. மெர்சி கீர்த்தனா

பதிவு எண்: 1571/2016-2017

நெறியாளர்

முனைவர் சு. விஸ்வநாதன்

தமிழ் உயராய்வு மையம்

மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி, சிவகங்கை




அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தரமதிப்பீட்டில் A+(CGPA 3.64) தகுதியும் மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகம் மற்றும் தன்னாட்சித் தகுதியும் பெற்றது.)

காரைக்குடி - 630 003

டிசம்பர் - 2020

# சீவகசிந்தாமணியில் மகளிர்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

ப. மெர்சி கீர்த்தனா

பதிவு எண்: 1571/2016-2017

நெறியாளர்

முனைவர் சு. விஸ்வநாதன்

தமிழ் உயராய்வு மையம்

மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி, சிவகங்கை




அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தரமதிப்பீட்டில் A+(CGPA 3.64) தகுதியும் மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகம் மற்றும் தன்னாட்சித் தகுதியும் பெற்றது.)

காரைக்குடி - 630 003

டிசம்பர் - 2020

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் சு.விஸ்வநாதன்,** *எம்.ஏ., எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி.,*
உதவிப்பேராசிரியர் மற்றும் தலைவர்,
தமிழ் உயராய்வு மையம்,
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக் கல்லூரி,
சிவகங்கை - 630 561.

**'சீவகசிந்தாமணியில் மகளிர்'** என்ற தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக **ப. மெர்சி கீர்த்தனா** அவர்கள் செய்துள்ள இவ் ஆய்வேடு, சிவகங்கை மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரித் தமிழ் உயராய்வு மையத்தில் அவரால் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இவ் ஆய்வின் மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம்: சிவகங்கை **நெறியாளர்**

நாள்:

**முதல்வர்**

# ஆய்வாளர் உறுதிமொழி

**ப. மெர்சி கீர்த்தனா,**
**பதிவு எண்: 1571/2016-2017**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ் உயராய்வு மையம்,
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி,
சிவகங்கை - 630 561.

**'சீவகசிந்தாமணியில் மகளிர்'** என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ் ஆய்வேடு, என் சொந்த முயற்சியில் உருவானதேயாகும். இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

**(ப. மெர்சி கீர்த்தனா)**

**ஆய்வாளர்**

**உறுதிக் கையொப்பம்**

**முனைவர் சு. விஸ்வநாதன்,**
உதவிப்பேராசிரியர் மற்றும் தலைவர்,
தமிழ் உயராய்வு மையம்,
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி,
சிவகங்கை 630 561.

# நன்றியுரை

சிவகங்கை மன்னர் துரைசிங்கம் அரசு கலைக் கல்லூரியின் நிறுவனர் **மேதகு சண்முக மன்னர்** அவர்களுக்கு என் பணிவான நன்றியினைக் காணிக்கையாக்குகிறேன்.

**“சீவகசிந்தாமணியில் மகளிர்”** என்ற தலைப்பில் ஆய்வு செய்ய அனுமதியளித்த அழகப்பா பல்கலைக்கழகத்தினருக்கு என் நன்றி உரித்தாகும்.

சிவகங்கை மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரித் தமிழ் உயராய்வு மையத்தில் முழுநேர முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்வதற்கு அனுமதியளித்த கல்லூரியின் அன்றைய பொறுப்பு முதல்வர் **முனைவர் ந.அழகுச்சாமி** அவர்களுக்கும், பல்வேறு வசதிகளை ஏற்படுத்திக் கொடுத்த கல்லூரியின் இன்றைய முதல்வர் **முனைவர் பா.ஹேமலதா** அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகும்.

ஆய்விற்குத் தேவையான பல்வேறு நூல்களைக் கொடுத்து உதவியதோடு, விரைந்து ஆய்வினை முடிக்க உதவிசெய்த, சிவகங்கை மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரித் தமிழ் உயராய்வுத்துறையின் **மேனாள் துறைத்தலைவா் முனைவர் வி.கிளாட்சன்** அவர்களுக்கு என் உளம் நிறைந்த நன்றி.

இவ்ஆய்வு முற்றுப்பெற ஒல்லும் வகையெல்லாம் பேருதவி செய்த என் ஆய்வு நெறியாளரும் இன்றைய துறைத்தலைவருமான **முனைவா் சு.விஸ்வநாதன்** அவா்களுக்கு என்றென்றும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வுக் காலங்களில் ஏற்ற உதவிகளைச் செய்த எம் கல்லூரித் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் **முனைவர் கா.சந்தானலெட்சுமி**, **முனைவர் ச.இராமமூர்த்தி, முனைவர் மு.சிதம்பரம், முனைவர் து.ஸ்டாலின்**, **முனைவர் கரு.இராமச்சந்திரன், முனைவர் இரா.தங்கமுனியாண்டி, முனைவர் ம.இராம மனோன்மணி, பேரா வே.சதீஸ், முனைவர் மா. முத்துராமன்**, **முனைவர் ஆ.பாண்டி,**

**பேரா இரா.புவனேஸ்வரி, பேரா அ.உமாராணி**, **முனைவர் சு.கிருஷ்ணமூர்த்தி, முனைவர் க.சண்முகநாதன், பேரா ச.முத்துவேல்**, **முனைவர் ப.அழகு, ஆய்வாளர் சு.சோனைமுத்து** ஆகியோர்க்குப் பெரிதும் நன்றியுடையேன்.

ஆய்விற்குத் தேவையான நூல்களைக் கொடுத்து உதவிய எம் கல்லூரி நூலகர் **முனைவர் அ.வாஞ்சிநாதன்** அவர்களுக்கும் தமிழ் உயர் ஆய்வுத்துறை நூலகப் பொறுப்பாசிரியர் **முனைவர் மு.சிதம்பரம்** அவர்களுக்கும் நூலக உதவியாளர் **திருமதி க.ஆனந்தி** அவர்களுக்கும் மதுரை உலகத் தமிழ்ச்சங்க நூலகா் **திருமதி.வேள்விழி** அவா்களுக்கும் என் நன்றி உரித்தாகும்.

என் கல்வி வளர்ச்சியில் மகிழ்ந்து ஊக்கப்படுத்திவரும் என் தாயார் **திருமதி க**.**செல்வி கிரேஸ்,** மாமா **க.சாமுவேல்** மற்றும் **தோழிகள், தோழர்கள்** அனைவருக்கும் பெரிதும் நன்றியுடையேன்

இவ் ஆய்வேட்டினைச் சிறந்த முறையில் தட்டச்சு செய்து கட்டமைத்துக் கொடுத்த தோழிகளுக்கும் மதுரை **லேசர் பாய்ண்ட்** நிறுவனத்தார்க்கும் என் நன்றி.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அடி. | - | அடிகள் |
| உ.ஆ. | - | உரை ஆசிரியர் |
| க.ஆ. | - | கட்டுரை ஆசிரியர் |
| குறள் | - | திருக்குறள் |
| தொ. | - | தொகுதி |
| தொ.ஆ. | - | தொகுப்பு ஆசிரியர் |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பா. | - | பாடல் |
| மு.நூ. | - | முன்னர் குறிப்பிடப்பட்ட நூல் |
| மேலது. | - | மேலே குறிப்பிடப்பட்டது |

# ஆய்வு அறிமுகம்

தமிழ் இலக்கிய மரபில் காப்பிய இலக்கிய மரபு தனித்த சிறப்பினை உடையதாகும். நெடிய கதைகளில், மக்களின் வாழ்வியலையும், சமயம் சார்ந்த தத்துவங்களையும், அறத்தையும் எடுத்துரைக்கும் முகமாக அமைந்திருப்பது, அவற்றின் தனித்துவமாகும். சீவகசிந்தாமணி என்னும் காப்பியம் கதைத்தலைவன் பெயராலேயே அமைந்துள்ள ஒரு காப்பியமாகும். இது விருத்தம் என்னும் பாவினால் எழுந்த முதற்காப்பியமாக விளங்குகிறது. இந்நூல் பதின்மூன்று இலம்பகங்களையும் மூவாயிரத்திற்கும் மேற்பட்ட செய்யுட்களையும் கொண்டு அமைந்துள்ளது. இக்காப்பித்தின் கதை முழுவதும் இன்பச் சுவையைத் தழுவிய ஒன்றாக அமைந்துள்ளது. முக்தி இலம்பகம் மட்டும் வீடுபேறு அடைவதற்குரிய வழியைக் கூறுவதாக இடம்பெற்றுள்ளது. இக்காப்பியம் மணநூல் என்று சிறப்பிக்கப்படுகிறது. எட்டுப் பெண்களைக் காப்பியத் தலைவனாகிய சீவகன் மணமுடிக்கும் நிகழ்வுகள் தொடர்ச்சியாகக் காட்சிபடுத்தப்பட்டுள்ளன. இவற்றிலிருந்து, மகளிர் குறித்தான செயல்பாடுகள், பண்புகள், திறன்கள் ஆகியன குறித்துப் பதிவாக்கம் பெற்றுள்ளன. அந்தவகையில், சீவகசிந்தாமணியில் பதிவாக்கம் பெற்றுள்ள மகளிர் குறித்தான அனைத்துச் செயல்பாட்டுப் பதிவுகளையும் எடுத்துரைக்கும் வகையில் இவ்ஆய்வு அமைந்துள்ளது.

### ஆய்வுத் தலைப்பு

**‘சீவகசிந்தாமணியில் மகளிர்’** என்பது இவ்ஆய்வின் தலைப்பாக அமைகின்றது.

### கருதுகோள்

சமண சமயம் தமிழகத்தில் சிறப்புற்று மேலோங்கியிருந்த காலத்தில் சமணப் புலவர்கள் பல்வேறு இலக்கியங்களைப் படைத்து அருளினர். பதினெண்கீழ்க்கணக்கு

அறநூல்களுள் சமணசமயம் சார்ந்த நூல்களே அதிகமாகும். ஐஞ்சிறு காப்பியங்களும் சமணக் கருத்துக்களை அடியொற்றியே படைக்கப்பட்டுள்ளன. சீவக சிந்தாமணி, மிகச்சிறந்த நூல் கட்டமைப்பினை உடையது. எட்டுப் பெண்களை சீவகன் மணந்த பாங்கு நூலில் அழகுறப் புனையப்பட்டுள்ளது. மகளிரின் காதல் வாழ்க்கை, பொழுதுபோக்குகள், விளையாட்டுகள், ஒப்பனை முறைகள், வழிபாடுகள், இல்வாழ்க்கை நெறிமுறைகள் முதலியவற்றை நூலில் விளக்கியுள்ள திருத்தக்கத்தேவர் சமணவியல் நோக்கில் மகளிரின் முதுமைக்கால வாழ்க்கை முறைமைகளையும் நோன்பு முறைகளையும் இந்நூலில் பதிவு செய்துள்ளார் என்பதைக் கருதுகோளாகக் கொண்டு இவ்ஆய்வு மேற்கொள்ளப்படுகின்றது.

**ஆய்வு எல்லை**

ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றான சீவகசிந்தாமணியில் இடம்பெற்றுள்ள மகளிர் மற்றும் சமயம் குறித்தான பதிவுகள் மட்டும் இவ்ஆய்வின் எல்லையாக அமைகின்றது.

**முதன்மை ஆதாரம்**

திருத்தக்கத்தேவர் இயற்றிய சீவகசிந்தாமணி (உ.வே.சாமிநாதையர்(உ.ஆ), ஸ்ரீதியாகராச விலாச வெளியீடு, சென்னை. எட்டாம் பதிப்பு, 1969.) என்பது இவ்ஆய்விற்கான முதன்மைச் சான்றாதாராமாக விளங்குகின்றது

**துணைமை ஆதாரங்கள்**

இதுவரை வெளிவந்துள்ள சமணக் காப்பியங்கள், நீதிநூல்கள், இலக்கிய வரலாற்று நூல்கள், சமண சமயக் கோட்பாடுகள் குறித்த நூல்கள், உரையாசிரியர் கருத்துகள், சீவகசிந்தாமணி குறித்த ஆய்வு நூல்கள், ஆய்வுக்கட்டுரைகள் முதலியன இவ்ஆய்விற்கான துணைமை ஆதாரங்களாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறை**

இவ்ஆய்வில் சமுதாயவியல், வரலாற்றியல், ஒப்பியல், உளவியல் ஆகிய அணுகுமுறைகளும், விளக்கமுறைத் திறனாய்வும் பின்பற்றப்பட்டுள்ளன.

**இயல் பகுப்பு**

இவ்ஆய்வானது ஆய்வு அறிமுகம், ஆய்வு நிறைவுரை நீங்கலாகப் பின்வரும் ஆறு இயல்களைக் கொண்டதாக அமைகின்றது. அவை,

1. **கதைப் பின்னலும் மகளிர் பாத்திரங்களும்**
2. **சமூக வாழ்வும் மகளிரும்**
3. **மகளிரும் காதலும்**
4. **மகளிரும் கற்பு வாழ்க்கையும**
5. **மகளிரும் கலைகளும்**
6. **மகளிரும் சமயவாழ்வும்**

என்பனவாகும்.

**இயல் விளக்கங்கள்**

ஆய்வு அறிமுகத்தில் ஆய்வுத்தலைப்பு, ஆய்வின் நோக்கம், ஆய்வின் எல்லை, ஆய்வு அணுகுமுறை, இயல் பகுப்பு, இயல் விளக்கங்கள், துணைநூற்பாட்டியல் குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளன.

**'கதைப் பின்னலும் மகளிர் பாத்திரங்களும்'** என்ற தலைப்பில் அமைந்த முதல் இயலில், சீவகசிந்தாமணி குறித்தான காப்பிய அமைப்பு, காப்பியத்தில் இடம்பெற்றுள்ள கதையமைப்பு, மகளிர் பாத்திரங்கள், மகளிர் பாத்திரங்களின் தனித்தன்மைகள், சிறப்புகள், பண்பு நலன்கள் ஆகியன குறித்து விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**'சமூக வாழ்வும் மகளிரும்'** என்ற தலைப்பில் அமைந்துள்ள இரண்டாம் இயலில், சமூகம் விளக்கம், சமூகத்தில் மகளிர் வாழ்க்கை முறைகள், காப்பியக்

காலத்திய சமூகநிலைப்பாடு, காப்பிய மகளிர் சமூகத்தில் பெற்றிருந்த இடங்கள், மற்றும் மகளிரின் சிறப்புகள் குறித்து விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

**‘மகளிரும் காதலும்’** என்ற தலைப்பில் அமைந்துள்ள மூன்றாம் இயலில், காப்பியத்தில் இடம்பெற்றுள்ள எட்டு மகளிரின் காதல் வாழ்க்கை, காதலில் ஏற்படும் பிரிவுத் துயரங்கள், மகளிரின் மனநிலை ஆகியன குறித்த செய்திகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**‘மகளிரும் கற்பு வாழ்க்கையும்’** என்ற தலைப்பில் அமைந்துள்ள நான்காம் இயலில், சீவகன் மணந்த எட்டுப் பெண்களின் கற்பியல் வாழ்க்கை முறைகளும், சீவகன் எட்டுப் பெண்களைப் பிரிந்து சென்றபோது, அம்மகளிர் அடைந்த பிரிவுத் துயரங்களும், பரத்தையரின் செயல்பாடுகளும் இவ்வியலில் ஆராய்ந்து உரிய சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளன.

**‘மகளிரும் கலைகளும்’** என்ற தலைப்பில் அமைந்துள்ள ஐந்தாம் இயலில், மகளிரின் பல்வகையான கலைத்திறன்கள், மகளிரின் பல்வகைப் பணிகள், மருத்துவக் கலை, உழவுக் கலை ஆகியன குறித்த செய்திகள் இவ்வியலில் இடம்பெற்றுள்ளன.

**‘மகளிரும் சமயவாழ்வும்’** என்ற தலைப்பில் அமைந்த ஆறாம் இயலில், சமயம் குறித்தான சிந்தனைகள், சமணம் மற்றும் பௌத்த சமயக் கருத்துகள், மகளிர் சமயவாழ்வில் பங்குகொண்ட முறைமைகள், துறவாழ்க்கை மேற்கொண்ட மகளிர் குறித்த பதிவுகள் இவ்வியலில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**‘ஆய்வு நிறைவுரை’** என்னும் பகுதியில், இயல்தோறும் கண்டறியப்பட்ட மெய்ம்மைகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. துணைநூற்பட்டியலில் ஆய்விற்குத் துணைநின்ற நூல்கள், ஆய்வேடுகள் ஆகியன அகரவரிசைப்படி தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

# பொருளடக்கம்

# இயல் -1

# கதைப் பின்னலும் மகளிர் பாத்திரங்களும்

தமிழ் இலக்கியங்கள் தொன்மையானது. இலக்கிய மேன்மைகளின் எல்லையினைக் கடந்த மொழி தமிழ்மொழி. தமிழ் இலக்கியங்களுக்கு என்று தனித்த இலக்கண இலக்கிய மரபுகளும் கோட்பாடுகளும் உண்டு. சங்க இலக்கியங்களுக்கு அடுத்தநிலையில் காப்பியங்களைக் குறிப்பிடலாம். சீவகசிந்தாமணியில் பெண்களின் மதிப்பும் அவர்கள் பெற்ற இடமும் அரசியலும் விவரித்துக் கூறப்படுகின்றது.

தமிழில் தோன்றிய முதல் விருத்தக் காப்பியம் சீவகசிந்தாமணி. ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றான இந்நூல், சமணசமயக் கொள்கைகளைப் பரப்பும் நோக்கில் படைக்கப்பட்டது. பண்டைத் தமிழ்ச் சமூக மரபுகள் பலவற்றைத் தாங்கி நிற்கும் இக்காப்பியத்தின் வாயிலாகப் பண்டைத் தமிழரின் காதல் வாழ்க்கை, இல்வாழ்க்கை, வீரம், பண்பாடு, பழக்கவழக்கங்கள், விளையாட்டுகள், அணிகலன்கள், சமயம் சார்ந்த ஒழுக்க நெறிகள் முதலானவற்றை அறிய முடிகிறது. அரசகுமாரன் ஒருவன், எட்டு பெண்களைத் திருமணம் செய்து வாழ்ந்த வாழ்க்கை முறையை இக்காப்பியம் விவரிக்கிறது. வடமொழிக் காப்பியக் கதையை அடிப்படையாக வைத்துப் படைக்கப்பட்ட நூல் என்பதனால் இக்காப்பியத்தின் கதைத் தலைவனான சீவகன் ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியரைத் திருமணம் செய்தமையைத் தமிழ் மரபோடு ஒப்பிட்டு நோக்க வேண்டியதில்லை. இருப்பினும் நூலின் இறுதியில் உலக வாழ்க்கையின் நிலையற்ற தன்மையினையும் துறவு வாழ்க்கையின் மேன்மையினையும் போற்றித் திருத்தக்க தேவர் காப்பியத்தை நிறைவு செய்துள்ளமையால் சமணக் கொள்கை மற்றும் கோட்பாடுகளை எடுத்தியம்புதற்காக இக்காப்பியத்தை அவர் படைத்துள்ளார் எனலாம்.

இக்காப்பியத்தில் இடம்பெற்றுள்ள ஒவ்வொரு இலம்பகத்திலும் மகளிர் வாழ்வியல் குறித்த பல்வேறு செய்திகள் இடம்பெற்றுள்ளன. மகளிரின் காதல் வாழ்க்கை, திருமண முறைகள், ஒப்பனை முறைமைகள், அணிகலன்கள், விளையாட்டுகள், அரசகுல மகளிர் இயல்புகள், பிற மகளிர் இயல்புகள், பரத்தையர் பற்றிய செய்திகள் ஆகியன காப்பியம் முழுமையும் விரவிக் கிடக்கின்றன. சீவக சிந்தாமணியின் காப்பியக் கட்டமைப்புக் குறித்தும் ஒவ்வொரு இலம்பகத்தில் இடம்பெற்றுள்ள மகளிர் பாத்திரங்கள் குறித்தும் விளக்கும் வகையில் இவ்வியல் அமைகின்றது.

**சீவகசிந்தாமணியின் சிறப்புகள்**

சமண சமயத்தின் அடிப்படைக் கொள்கையான அகிம்சை, சீவகசிந்தாமணியில் தலைசிறந்த ஒழுக்கமாகும். சங்க காலத்தில் ஆசிரியப்பாவே கையாளப்பட்டு வந்த நிலையினை மாற்றி முதன் முதலில் விருத்தப்பாவைக் கையாண்டு புரட்சியும் புதுமையும் சேர்த்தவா் திருத்தக்கத்தேவா் என்பது புலப்படுகின்றது.

சீவக சிந்தாமணியின் சிறப்புக் குறித்து டாக்டர் ஜி.யு.போப், **“சீவகசிந்தாமணி தமிழ் இலக்கியங்களில் தலைசிறந்தது. உலகமகா காவியங்களில் இலியாத், ஒடிஸியா என்னும் பிரசித்திப் பெற்ற கிரீக் நாட்டுக் காப்பியங்களுக்கு இணையான தமிழ்க்காவியம்”**[1] எனக் குறிப்பிட்டுள்ளார்.

பிற்காலக் காப்பிய ஆசிரியர்களுக்குத் திருத்தக்க தேவர் வழிகாட்டியாகத் திகழ்ந்தமையை, **“பிற்காலத்தில் பல காப்பியங்களியற்றிய புலவர்கள் பலர்க்கும் இன்ன இன்னவற்றை இன்ன இன்னவாறு வருணித்துப் பாடுகவென வழிகோலி அரும்பெரும் காப்பியத்தை இயற்றித் தந்தமையால் திருத்தக்க தேவரைக் காவிய வழிகாட்டியெனப் புலவர் பலரும் போற்றிப் புகழ்ந்தனர்”**[2] எனச் சமணசமயவியல் அறிஞர் டி.எஸ். ஸ்ரீபால் குறிப்பிடுகின்றார்.

தண்டியலங்காரம் குறிப்பிடும் காப்பிய இலக்கணங்கள் முற்றிலும் பொருந்துகின்ற நூலாகச் சீவகசிந்தாமணியைக் குறிப்பிடலாம். பெருங்காப்பியத்தின் இலக்கணத்தை,

**"பெருங்காப் பியநிலை பேசுங் காலை**
**வாழ்த்து வணக்கம் வருபொருள் இவற்றினொற்று**
**ஏற்புடைத் தாகி முன்வர இயன்று**
**நாற்பொருள் பயக்கும் நடைநெறித்து ஆகி**
**தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தாய்**
**மலைகட னாடு வளநகர் பருவம்**
**இருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து**
**நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல்**
**பூம்பொழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்**
**புலவியிற் புலத்தல் கலவியிற் களித்தலென்**
**றின்ன புனைந்த நன்னடைத் தாகி**
**மந்திரந் துதூ செலவிகல் வென்றி**
**சந்தியிற் றொடர்ந்து சருக்க மிலம்பகம்**
**பரிச்சேத மென்னும் பான்மையின் விளங்கி**
**நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்**
**கற்றோர் புனையும் பெற்றிய தென்ப"**[3]

என்ற வரிகள் விரிவாகக் குறிப்பிடுகிறது.

தமிழ்க் காப்பியங்களின் பொதுவான கட்டமைப்புக் கூறுகளாகப் பின்வருவனவற்றை,

1. **வருணனை**
2. **அரசவை மரபுகள்**
3. **கலைத்திறன்**
4. **மக்கள் மகிழ்ச்சி**
5. **சடங்குகள்**
6. **அருகன் புகழ்**
7. **அரசியல் உத்திகள்**
8. **போர்**

9. **இலட்சிய அரசு**
10. **உலா வரல்**
11. **தூது**
12. **அமைச்சர் சிறப்பிடம்**
13. **இயற்கை இறந்த நிகழ்ச்சிகள்**
14. **வருவதுரைத்தல்**
15. **துறவு கொள்ளுதல்**

என்று து. சீனிச்சாமி அவர்கள் குறிப்பிடுகின்றார். ''**சீவகசிந்தாமணியில் வாழ்த்து, அவையடக்கம், வருணனைத் தொடக்கம், போதனை, கூடிப் பிரிதல், பந்தாடல், காதல் சாகசங்கள், சுயம்வரம், அருஞ்செயல் ஆகியனவும் இடம்பெற்றுள்ளன எனவும் து.சீனிச்சாமி குறிப்பிடுகிறார்.''**[4] இவ்வகையில் காப்பியக் கட்டமைப்பு மிகச் சிறந்த முறையில் அமைந்த காப்பியமாகச் சீவகசிந்தாமணி திகழ்கிறது.

**கதையின் அடிப்படை**

வடமொழியில் இடம்பெற்றுள்ள காப்பியம் ஒன்றின் கதைக் கருவையும் சமணசமய ஆகமக் கருத்துகளையும் அடிப்படையாகக் கொண்டு தழுவி இயற்றப்பெற்ற காப்பியமாகச் சீவகசிந்தாமணி கருதப்படுகிறது. சீவகசிந்தாமணி நூல் முழுவதையும் நச்சினார்க்கினியர் உரையுடன் முதன்முதலில் 1887 ஆம் ஆண்டு பதிப்பித்து வெளியிட்ட உ.வே.சாமிநாதையர், ''இந்நூலாசிரியர் இச்சரிதத்தை இன்ன நூலிலிருந்து யாம் பாடுகின்றேமென்று கூறாமையின், இதற்கு முதனூல் இன்னதென்று இந்நூலைக் கொண்டு நிச்சயிக்கக் கூறவில்லை. ஆயினும் வடமொழியில் சந்திர சூடாமணி, கத்திய சிந்தாமணி, ஜீவேந்தர சம்பு என நான்கு நூல்கள் உள்ளன. அவைகளெல்லாம் இச்சீவகன் சரிதமே கூறுகின்றன. மஹாபுராணத்தின் ஒரு பாகத்தும், மணிப்பிரவாளமாகிய ஸ்ரீபுராணத்தின் ஒருபாகத்தும் இச்சரிதம் கூறப்பட்டுள்ளது. அவற்றிற்கும் இதற்கும் கதையில் வேறுபாடுகளுண்டு. அந்நூல்களுடன் சந்திர சூடாமணி என்பதை இதற்கு முதனூலென்று சைனர் கூறுகின்றனர்.''[5] எனக் குறிப்பிட்டுள்ளார்.

“கதை வடமொழியில் உள்ள சந்திர சூடாமணி, கத்திய சிந்தாமணி, ஸ்ரீபுராணம் போன்ற நூல்களைத் தழுவியதென்பர். சைனமா புராணத்தின் பிற்பகுதியில் இக்கதை உள்ளதென்பதாலும் அந்நூலின் காலம் கி.பி ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியாதலாலும் தமிழ்ச் சிந்தாமணி பத்தாம் நூற்றாண்டின் தொடக்கம் என்பர்”[6] என்று அறிஞர் தமிழண்ணல் சீவகசிந்தாமணி குறித்துக் குறிப்பிட்டுள்ளார்.

சீவக சிந்தாமணிக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர், காப்பியத்தில் இடம்பெற்றுள்ள சில முதன்மைப் பாத்திரப் பெயர்களைத் திருத்தக்க தேவர், வடமொழியிலிருந்து தமிழ்ப்பெயராக்கிப் படைத்துள்ளமையைத் தம் உரையில் குறிப்பிடுகிறார்.

**“சச்சந்தன் - ஸத்யந்தர னென்னும் வடமொழிச் சிதைவு”**[7]

இக்கருத்துகள் வாயிலாகச் சீவகசிந்தாமணியின் கதைக்கருவானது சீவகன் வரலாற்றை எடுத்தியம்பிய வடமொழி நூல்களை அடிப்படையாகக் கொண்டதென்பதை விளக்கி நிற்கின்றன.

சீவக சிந்தாமணியின் இலம்பக வைப்பு முறையின் அடிப்படையில் இக்காப்பியத்தின் கதை நிகழ்வுகளும் அவ்வவ் இலம்பகத்தில் இடம்பெற்றுள்ள மகளிர் பாத்திரங்களும் பின்வருமாறு விளக்கப்படுகின்றன. சிந்தாமணிக் காப்பியத்தில் மொத்தம் 13 இலம்பகங்கள் அமைந்துள்ளன.

### நாமகள் இலம்பகமும் மகளிர் பாத்திரங்களும்

சீவகசிந்தாமணியின் முதலில் அமைந்துள்ள நாமகள் இலம்பகத்தின் கதைப் பின்னல் பின்வருமாறு அமைகின்றது.

- **ஏமாங்கத நாட்டின் வளம்**
- **சச்சந்தன் சிறப்புகள்**
- **விசயை மீது கொண்ட காதல்**

- **கட்டியங்காரனிடம் ஆட்சியை ஒப்படைத்தல்**
- **விசயை கனவு**
- **கட்டியங்காரனின் சூழ்ச்சி**
- **சச்சந்தன் இறப்பு**
- **விசயை தப்பித்துச் செல்லல்**
- **மயானத்தில் சீவகன் பிறப்பு**
- **சண்பகமாலை அறிமுகம்**
- **கந்துக்கடன் செயல்**
- **விசயையின் நோன்பு**
- **சீவகனின் வளர்ச்சி**
- **அச்சணந்தி அடிகள் சீவகனுக்கு வரலாறு உரைத்தல்**
- **அச்சணந்தி அடிகள் வீடுபேறு அடைதல்**

என்பனவாகும்.

நாமகள் இலம்பகத்தின் தொடக்கத்தில் ஏமாங்கத நாட்டின் சிறப்புகள், இராசமாநகரத்தின் வளங்கள், நாட்டு மக்களின் இயல்புகள் ஆகியன விவரிக்கப்பட்டுள்ளன. நாட்டு மன்னனான சச்சந்தனின் பல்வேறு சிறப்புகளும் அவன் மனைவியான விசயையின் அழகுத்திறம், பண்புகள் முதலியன பின்னர் இடம்பெற்றுள்ளன. சச்சந்தன் விசயைபால் கொண்ட கழிபெருங் காமத்தால் கட்டியங்காரனை அமைச்சனாக்கி ஆட்சிப் பொறுப்பை ஒப்புவிக்கிறான். இவ்விலம்பகத்தில் விசயை கண்ட கனவுகள் கதைப்பின்னலில் முக்கிய இடம் வகிக்கின்றன. கனவின் உண்மை நிலையை உணர்ந்த சச்சந்தன், வருவனவற்றை உணர்ந்து விசயை தப்பிச் செல்வதற்காக ஏழு நாள்களில் மயிற்பொறி ஒன்றினை அமைக்கிறான். கட்டியங்காரன், அமைச்சர்களின் அறிவுரையை மறுத்து சச்சந்தனுடன் போர்புரிந்து அவனைக் கொல்கிறான். இந்நிலையில் மயிற்பொறியில் தப்பிச் சென்ற விசயை தன் கணவன் கட்டியங்காரன் சூழ்ச்சியால் மடிந்ததை அறிகிறாள். மயிற்பொறி நகர்ப்புறத்திலுள்ள சுடுகாட்டில் வீழ்கிறது. அங்கு

சீவகனைப் பெற்றெடுக்கிறாள். அங்கு சண்பகமாலை வடிவில் வந்த பெண் தெய்வம் விசயைக்குப் பேருதவி புரிகிறது. கந்துக்கடன் என்னும் வாணிகன் குழந்தையை எடுத்துச் சென்று சீவகன் எனப் பெயர்சூட்டி வளர்த்து வருகிறான். சீவகனுக்கு அச்சணந்தியடிகள் என்னும் ஆசிரியர் பல்வேறு கலைகளையும் தத்துவங்களையும் கற்பிக்கிறார். சீவகனின் வரலாற்றை அவனுக்கு விளக்கிக் கட்டியங்காரனைக் கொல்வதற்கான ஏற்ற காலத்தையும் குறிப்பிடுகிறார். அச்சணந்தி அடிகள் தவம் மேற்கொண்டு வீடுபேறடைவதுடன் நாமகள் இலம்பகம் நிறைவுறுகிறது.

**நாமகள் இலம்பகத்தில் மகளிர் பாத்திரங்கள்**

நாமகள் இலம்பகத்தில் இடம்பெற்றுள்ள மகளிர் பாத்திரங்களுள் விசயை, சண்பகமாலை, சுநந்தை ஆகியோர் குறிப்பிடத்தக்கவர் ஆவர். இவ்விலம்பகத்தில் இராமாயண, மகாபாரதக் கதைக் குறிப்புகளும் இடம்பெற்றுள்ளன. இவ்விதிகாசங்களில் இடம்பெற்றுள்ள சில மகளிர் பாத்திரங்கள் பற்றிய செய்திகளை இவ்விலம்பகத்தில் காணமுடிகின்றன. ஏமாங்கத நாட்டில் உள்ள பல்வேறு தரப்பட்ட மகளிர் பற்றிய குறிப்புகளும் இவ்விலம்பகத்தில் இடம்பெற்றுள்ளன.

**விசயை**

ஏமாங்கத நாட்டு மன்னன் சச்சந்தனின் பெருந்தேவியான விசயை, விதைய நாட்டு மன்னனின் மகள் ஆவாள். இவள் குறித்த அறிமுகம் பதிகத்தின் தொடக்கத்தில்,

**“வீடாத கற்பி னவன்றேவி விசயை யென்பாள்”**[8]

என இடம்பெற்றுள்ளது. விசயையின் கற்புத் திறத்தை நூலின் தொடக்கமாக அமைந்துள்ள பாயிரத்தில் அறிமுகம் செய்யும் திருத்தக்க தேவர், விசயையின் அழகுத் திறத்தை,

**“சேந்தொத் தலர்ந்த செழுந்தாமரை யன்ன வாட்கட்**
**பூந்தொத் தலர்ந்த பசும்பொற்கொடி யன்ன பொற்பின்**
**ஏந்தொத் தலர்ந்த முலையின்னமிர் தன்ன சாயல்**
**வேந்தற் கமுதாய் வியைாடுதற் கேது வாமே”**[9]

எனவும் விவரிக்கிறார்.

நாமகள் இலம்பகத்தில் விசயை குறித்த அறிமுகம் அவள் தந்தையின் சிறப்புகளோடு தொடங்குகிறது. விசயையின் தந்தையினை ‘களிற்று உழவன்’ எனக் குறிப்பிட்டு அத்தகைய மாவீரன் பெற்றெடுத்த மகள் விசயை என்பதை,

**“வண்டின முகபடா மணிந்து வார்மத**
**முண்டுகுத் திடுகளிற் றுழவன் றன்மகள்**
**பெண்டிர்தம் பெருநலங் கடந்து பெற்றபேர்**
**விண்டலர் கோதைக்கு விசயை யென்பவே”**[10]

என நூலாசிரியர் குறிப்பிடுகிறார். பெண்மை அழகினால் உலக மகளிரை வென்றமையால் ‘விசயை’ என்ற பெயர் அவளுக்குக் காரணப் பெயராக அமைகிறது. இதனை, “அக்கோதைக்கு அப்பெயர் பெண்டிர் நலங்கடந்து பெற்ற காரணப்பெயரென்க”[11] என நச்சினார்க்கினியர் குறிப்பிடுகிறார். ‘குளிர்ச்சியான கூந்தலையும், மலர்களால் சூழப்பெற்ற முலைகளையும் மின்னலின் வடிவத்தை ஒத்த இடையினையும் உடையவளாக விசயை திகழ்ந்தமையை,

**“இன்னகிற் கொழும்புகை யுயிர்க்கு மீர்ங்குழன்**
**மென்ம்லர்க் கோதைதன் முலைகள் வீங்களின்**
**மனின்னுருக் குறுமிடை மெலிய மெல்லவே**
**கன்னிதன் றிருநலங் கனிந்த தென்பவே”**[12]

எனும் பாடல் புலப்படுத்துகிறது. விசயைபால் கழிபெருங் காமம் கொண்டு அவள் தந்த இன்பப் புணர்ச்சியால் அரசாட்சியை மறந்து காமவின்பத்தில் திளைக்கிறான் சச்சந்தன். இவ்விடத்தில் விசயையை,

**“பெண்ணருங் கலத்தொடு பிணைந்த பேரருள்”**[13]

எனக் குறிப்பிடுகிறார் திருத்தக்க தேவர். பெண்களுக்கு அருங்கலமானமவளாகத் திகழ்ந்த விசயையின் சிறப்பினை இப்பாடலடி புலப்படுத்துகின்றது.

**சண்பக மாலை**

மயானத்தில் குழந்தையை ஈன்ற விசயைக்கு 'சண்பகமாலை' என்ற பெண்ணுருவில் மயானத்து உறையும் தெய்வம் உதவி செய்கிறது.

**"தேனமர் கோதை மாதர் திருமகன் திறத்தை யோராள்**
**யானெவன் செய்வ லென்றே யவலியா விருந்த போழ்திற்**
**றானமர்ந் துழையி னீங்காச் சண்பக மாலை யென்னும்**
**கூனிய துருவங் கொண்டோர் தெய்வதங் குறுகிற் றன்றே"**[14]

வருத்தமுற்றுச் சோர்ந்திருந்த விசயையயின் துன்பத்தைத் தீர்த்து, அவளிடத்தில் இருந்த சச்சந்தனின் மோதிரத்தைக் குழந்தைக்குச் சண்பகமாலை சூட்டுகிறாள். குழந்தையை மயானத்தில் கிடத்தி, அவனை எடுத்துப் போய் வளர்ப்பதற்கு ஒருவன் வருவான் எனச் சண்பகமாலை குறிப்பிடுகிறாள். கந்துக்கடன் குழந்தையை எடுத்துச் சென்ற பின்னர், விசயை தண்டகாரணியத்தில் நோன்பியற்றுகிறாள். பின்னர் அவளிடமிருந்து விடைபெற்றுச் செல்கிறது.

**சுநந்தை**

சீவகனைச் சுடுகாட்டில் எடுத்துச் சென்ற கந்துக்கடனின் மனைவி சுநந்தை பற்றிய அறிமுகம்,

**"மட்டவிழ் கோதை வாளன வுண்கண் மயிலன்னாள்"**[15]

என இடம்பெறுகிறது. சுநந்தையின் அழகும் பண்புகளும் குறித்து,

**"மாற்றம் மஞ்சும் மன்னிய கற்பின் மடவாளும்"**[16]
**"வாட்க ணவ்வளைத் தோளி னாளும்"**[17]

எனும் பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது. 'சுநந்தை' என்ற பெயரினை,

**"சுரும்புடை அலங்கன் மாலைச் சுநந்தையும்"**[18]

எனும் பாடலடி குறிப்பிடுகிறது. சீவகனுக்குக் கல்வியையும் பல்வேறு கலைகளையும் கற்பித்த அச்சணந்தி அடிகள் சீவகனைப் பிரிந்து நோன்பியற்றச் சென்றபோது வருந்திய சுநந்தையின் நிலை,

**"அழலுறு வெண்ணெய்போல வகங்குழைந் துருகி யாற்றாள்**
**குழலுறு கிளவி சோர்ந்து குமரனைத் தமியனாக**
**நிழலுறு மதிய மன்னாய் நீத்தியோ வெனவு நில்லான்**
**பழவினை பரிய நோற்பான் விஞ்சையர் வெந்தன் சென்றான்"**[19]

என இடம்பெற்றுள்ளது.

**திலோத்தமை**

பிரமனுக்கு நான்கு முகங்கள் உண்டான புராணக்கதை நாமகள் இலம்பகத்தில் இடம்பெற்றுள்ளது. திலோத்தமையை, 'அரும்பிய முலையினாள்' என்ற பெயரில் திருத்தக்க தேவர் குறிப்பிடுகிறார்.

**"பெரும்பெயர்ப் பிரம னென்னும் பீடினாற் பெரிய நீரான்**
**அரும்பிய முலையி னாளுக் கணிமுக நான்கு தோன்ற**
**விரும்பியாங் கவளை யெய்தான் விண்ணக மழிழந்த தன்றித்**
**திருந்தினாற் கின்று காறுஞ் சிறுசொல்லாய் நின்ற தன்றே"**[20]

திலோத்தமை பொருட்டு பிரமன் நான்குமுகம் பெற்றமையையும், அவளைப் பெறாமல் விண்ணகத்தை இழந்து பழிச்சொல் பெற்றமையையும் இப்பாடல் வழி திருத்தக்க தேவர் குறிப்பிட்டுக் காமத்தின் இயல்பை எடுத்துரைக்கிறார். இப்புராண வரலாறு தர்மபரீசை எனும் நூலில் உள்ளதாக நச்சினார்க்கினியர் குறிப்பிடுகிறார்.

**பாஞ்சாலி**

மகாபாரதத்தில் இடம்பெற்றுள்ள பாஞ்சாலி குறித்த செய்தி நாமகள் இலம்பகத்தில் இடம்பெற்றுள்ளது.

**"படுபழி மறைக்க லாமோ பஞ்சவ ரன்று பெற்ற**
**வடுவுரை யாவர் பேர்ப்பார் வாய்ப்பறை யறைந்து தூற்றி**

**இடுவதே யன்றிப் பின்னு மிழுக்குடைத் தம்ம காமம்**

**நடுவுநின் றுலகமோம்ப னல்லதே போலு மென்றான்"**[21]

பஞ்ச பாண்டவர்கள் பாஞ்சாலி என்ற ஒருத்தியை மனைவியாகப் பெற்ற வடுவுரையைப் போக்குவார் யார்? எனக் குறிப்பிடுவதிலிருந்து பாஞ்சாலி பற்றிய புராணவரலாற்றை அறியமுடிகிறது.

**கோவிந்தையார் இலம்பகம்**

சீவகசிந்தாமணியில் இரண்டாவதாக அமைந்துள்ள 'கோவிந்தையார் இலம்பகத்தின் கதைப்பின்னல்,

- **சீவகனின் கலைப் பயிற்சி**
- **வேடுவர்கள் ஆநிரை கவர்தல்**
- **கட்டியங்காரனின் தோல்வி**
- **ஆயர் தலைவன் நந்தகோன் செயல்**
- **சீவகனின் வெற்றி**
- **மகளிர் செயல்**
- **பதுமுகன் - கோவிந்தன் திருமணம்**

எனும் முறையில் அமைந்துள்ளது. சீவகன் பல்வேறு கலைகளில் தேர்ச்சி பெற்று வளர்ந்து வரும் நிலையில், கட்டியங்காரனின் ஆநிரைகளை வேடுவர்கள் கவர்ந்து கொள்கின்றனர். இதனால் கவலையுற்ற ஆயர்கள் கட்டியங்காரனிடம் முறையிடுகின்றனர். கட்டியங்காரன், வேடுவர்கள் மீது தன் படையைச் செலுத்துகிறான். கட்டியங்காரனின் படைவீரர்கள் தோல்வியைத் தழுவுகின்றனர். ஆயர் தலைவனாகிய நந்தகோன், வேடர்களை வென்று நிரையை மீட்டு வருபவனுக்குத் தன் மகள் கோவிந்தையை மணம் செய்து கொடுப்பதாக நகரெங்கும் முரசறைகிறான். சீவகன் வேடுவர்களோடு போரிட்டு அவர்களை வென்று நிரையை மீட்கிறான். நந்தகோன் தன் மகள் கோவிந்தையை சீவகனுக்கு மணம் செய்து கொடுக்க முன்வருகிறான். ஆனால் சிவகன் அவளைத் தன் தோழனாகிய

பதுமுகனுக்கு மணம் செய்விக்கிறான். இவ்வாறு கோவிந்தையார் இலம்பகம் நிறைவுறுகிறது.

**மகளிர் பாத்திரங்கள்**

கோவிந்தையார் இலம்பகத்தில் நந்தகோனின் மனைவி கோதாவரி, கோவிந்தை ஆகிய இரு மகளிர் பாத்திரங்கள் இடம்பெற்றுள்ளன. இவ்விலம்பகத்தில் ஆயர்குல மகளிர் இயல்புகள் விவரிக்கப்பட்டுள்ளன. மகளிரின் பல்வேறு செயல்களை விவரிக்கும் இலம்பகமாகக் கோவிந்தையார் இலம்பகம் அமைந்துள்ளது.

**கோதாவரி**

ஆயர் குலத் தலைவன் நந்தகோனின் மனைவியான கோதாவரி, மகளிர்க்குரிய இலக்கணங்கள் அமையப்பெற்றவள் என்பதை,

**“குலத்தொடு முடிந்த கோன்றன் குடிவழி வாரா நின்றேன்**
**நலத்தகு தொறுவி னுள்ளே னாமங்கோ விந்த னென்பேன்**
**இலக்கண மமைந்த கோதவரியென விசையிற் போந்த**
**நலத்தகு மனைவி பெற்ற நங்கைகோ விந்தை யென்பாள்”**[22]

எனும் பாடற்கருத்து புலப்படுத்துகிறது. கோதாவரியின் சிறப்புகளை எடுத்துரைத்து மகளைப்பற்றிய அறிமுகத்தை நந்தகோன் செய்வதை இப்பாடற் கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது. **“இலக்கணம் - குலமகளிர்க்குரிய இலக்கணம். கோதாவரி என்பது நந்தகோன் மனைவியின் பெயர். தாயைப் போல பிள்ளை என்னும் பழமொழி பற்றிக் கோவிந்தையின் சிறப்புக் கூறுவான் தாய்மேலேற்றிக் கூறினான் என்க”**[23]

**கோவிந்தை**

நந்தகோனின் மகளான கோவிந்தையின் அழகுத்திறம் கோவிந்தையார் இலம்பகத்தில் சிறப்புற வருணிக்கப்பட்டுள்ளது.

**“பாடகஞ் சுமந்த செம்பொற் சீறடிப் பரவை யல்குற்**
**சூடக மணிந்த முன்கைச் சுடர்மணிப் பூணி னாளை**
**ஆடகச் செம்பொற் பாவை யேமுடன் றருவ லைய**
**வாடலில் வதுவை கூடி மணமக னாக வென்றான்”**[24]

பாடகம் என்ற காலணியைத் தனது சிறிய காலடிகளிலும், சூடகம் என்ற அணியினைத் தன் கைகளிலும் அணிந்தவளாகவும் கோவிந்தை திகழ்கிறாள். பரந்த அல்குலை உடையவள் கோவிந்தை என்ற கருத்தும் இப்பாடலில் இடம்பெற்றுள்ளது. மேலும்,

**“வெண்ணெய்போன் றூறியண் மேம்பால்போ றீஞ்சொல்ல**
**ளுண்ண வுருக்கிய வானெய்போன் மேனியள்**
**வண்ண வனமுலை மாதர் மடநோக்கி**
**கண்ணுங் கருவிளம் போதிரண்டே கண்டாய்”**[25]

என்ற பாடலில், அழகிய நிறத்தையும், மடநோக்கத்தையும், வெண்ணெய் போன்ற மேனியையும் உடையவள் கோவிந்தை, பால் போன்ற இனிய மொழியினைப் பேசுபவள் என அறிமுகம் செய்யப்படுகிறாள்.

## பிற மகளிர் பாத்திரங்கள்

கோவிந்தையார் இலம்பகத்தில் ஆயர்குல மகளிர், அரண்மனையில் தொழில்புரியும் மகளிர் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. மகளிரின் உளவியல் தன்மைகளையும் இவ்விலம்பகத்தில் திருத்தக்க தேவர் விவரித்துள்ளார்.

## காந்தருவதத்தையார் இலம்பகமும் மகளிர் பாத்திரங்களும்

சீவகசிந்தாமணியின் மூன்றாவது இலம்பகமான காந்தருவதத்தையார் இலம்பகத்தில் சீவகனுக்கும் காந்தருவதத்தைக்கும் இடையே நடைபெற்ற திருமண நிகழ்வுகள் விவரிக்கப்பட்டுள்ளன. சீவக சிந்தாமணியின் கதைத் தலைவி என்ற நிலையில் ‘காந்தருவதத்தை’ திகழ்கிறாள். சீவகன் மணந்த எட்டுப் பெண்களுள் காந்தருவதத்தையே சிறப்பிடம் பெறுகிறாள்.

இராசமாபுர வணிகனான சீதத்தன் ஊழ்வினைப் பயன் காரணமாகத் தன் செல்வங்கள் அனைத்தையும் இழக்கிறான். மனம் தளராத சீதத்தன் அருகக் கடவுளை வணங்கி இழந்த தன் செல்வங்களை மீண்டும் பெறும் நோக்கில் கடல்கடந்து வாணிகம் செய்கிறான். அவன் பொருளீட்டித் திரும்பி வரும் வேளையில் அவனைத் ‘தரன்’ என்ற வித்தை வல்லாளன் வெள்ளிமலையிலுள்ள வித்தியாதர நகருக்குக் கொண்டு வந்து சேர்க்கிறான். அந்நகரின் மன்னன் கலுழவேகன். அவள் மகள் காந்தருவதத்தை. சீதத்தன் வாயிலாகவே தன் மகள் காந்தருவதத்தைக்குத் திருமணம் நடைபெறும் என்பதை நிமித்திகன் வாயிலாக அறிந்த கலுழவேகன், காந்தருவதத்தையின் வரலாற்றைச் சீதத்தனுக்கு எடுத்துரைத்து அவளைச் சீதத்தனுடன் அனுப்புகிறான். இராசமாபுரம் வந்த சீதத்தன் தன் மனைவி பதுமையிடம் நிகழ்ந்தனவற்றை எடுத்துரைக்கிறான். கட்டியங்காரனின் உடன்பாடு பெற்றுக் காந்தருவத்தையுடன் யாழ்ப்போரில் வெல்பவனே அவளுக்கு மணவாளன் ஆவான் என்பதை அறிவிக்கிறான். பல நாட்டு மன்னர்கள் காந்தருவதத்தையுடன் யாழ்ப் போரில் தோல்வி அடைகின்றனர். இதனை அறிந்த சீவகன் காந்தருவதத்தையுடன் யாழ்ப்போர் செய்வதற்கு எண்ணி, அவளுடன் யாழ்ப்போர் செய்து வெற்றி பெறுகின்றான். காந்தருவதத்தை சீவகனுக்கு மாலையிடுகிறாள். இதனால் வெகுண்ட கட்டியங்காரன், காந்தருவதத்தையிடம் தோற்ற மன்னர்களை ஒருங்கிணைத்துச் சீவகனுடன் போர்புரியத் தூண்டுகிறான். அனைவரும் தோல்வியைத் தழுவுகின்றனர். பின்னர்ச் சீவகன் காந்தருவதத்தையைத் தன் இல்லத்திற்கு அழைத்துச் சென்று அவளைத் திருமணம் புரிந்து இன்புறுகிறான். இவ்வாறு காந்தருவதத்தையார் இலம்பகத்தின் கதைப்பின்னல் காப்பியத்தில் அமைந்துள்ளது.

**மகளிர் பாத்திரங்கள்**

காந்தருவதத்தையார் இலம்பகத்தில், காந்தருவதத்தை, பதுமை, தாரணி, வீணாபதி, அநங்கமாலை, நாகமாலை முதலிய மகளிர் பாத்திரங்கள் இடம்பெற்றுள்ளன. மேலும் நாட்டிய மகளிர், தெய்வ மகளிர், அரண்மனைத் தொழில்புரியும் மகளிர், ஆண்கோலம் பூண்ட மகளிர் ஆகியோரும் இடம்பெற்றுள்ளனர்.

**பதுமை**

சீதத்தனின் மனைவி பதுமை. சீதத்தனை இலம்பகத்தின் இரண்டாம் பாடலில் அறிமுகம் செய்யும் திருத்தக்கதேவர், அவன் மனைவி பதுமையின் அழகு நலனை எடுத்துரைத்தே அறிமுகம் செய்கிறார். இதன் வாயிலாகப் பதுமையின் அழகுத்திறத்தை அறிந்து கொள்ள முடிகிறது.

**“மின்னொழுகு சாயன்மிகு பூட்பதுமை கேள்வன்”**[26]

எனும் பாடலடி, ‘ஒளிபரவிய சாயலையும் பூணினையும் உடையவள் பதுமை’ என்பதை எடுத்துரைக்கிறது. பொருளீட்டுவதற்காகப் பதுமையைப் பிரிந்து சென்ற சீதத்தன், மீண்டும் இல்லத்திற்கு வந்தவுடன் பதுமையைப் புணர்ந்து மகிழ்ந்த இன்பத்தினை,

**“பாசிழை பரவை யல்குற் பசுங்கதிர் கலாபம் வீங்கக்**
**காசுகண் பரிய வைகிக் கடன்றலைக் கழிந்த பின்னாத்**
**தூசணி பரவை யல்குற் றுளங்குநண் ணுசுப்பிற் பாவை**
**ஆசறு வரவுந் தந்தை வலித்தது மறியச் சொன்னான்”**[27]

எனத் திருத்தக்க தேவர் விவரித்துள்ளார்.

**தாரணி**

வித்தியாதர நகர் மன்னன் கலுழவேகனின் மனைவி தாரணி. அவளின் அழகுத் திறத்தினை,

**"மாடியந் தானை மன்னர் மாமணி நாக மாகக்**
**கேடில்சீர்க் கலுழ னாய கலுழவே கற்குத் தேவி**
**தோடலர் கோதைத் தொல்சீர்த் தாரணி சுரும்புண் கண்ணி**
**ஆடவ ரறிவு போழு மணிமுலை யணங்கி னன்னளள்"**[28]

எனத் திருத்தக்க தேவர் வருணிக்கிறார். 'இதழ் விரிந்த பூமாலையை உடைய தாரணி, பழம் புகழை உடையவள் வண்டுகள் தேனைப் பருகும் மலர்களாலான மாலையை அணிந்தவள் ஆடவர்களின் அறிவைப் பிளக்கும் அழகிய முலையினை உடையவள் தெய்வம் போன்றவள்' எனத் தாரணி சிறப்பிக்கப்படுகிறாள்.

தாரணி பிறந்த அன்றே அவளின் அழகை விரும்பிய பல்வேறு நாட்டு மன்னர்கள் அவளை மணம் புரிய விரும்பினர். பல மன்னர்கள் வித்தியாதர மலையில் கூடி பல்வேறு செல்வங்களை அளித்து அவளைப் பெற விரும்பியமையை,

**"விண்ணகம் வணங்க வெண்கோட் டிளம்பிறை முளைத்த தேபோற்**
**பண்ணகத் தினிய சொல்லாள் பாவையைப் பயந்த ஞான்றே**
**எண்ணிட மின்றி மன்ன ரிம்மலை யிறை கொண் டீண்டி**
**அண்ணலங் களிற்றி னுச்சி யருங்கல வெறுக்கை யீந்தார்"**[29]

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

**காந்தருவதத்தை**

கலுழவேகன் - தாரணியின் மகளான காந்தருவதத்தையின் அழகு நலன் குறித்து,

**"தூசுலாய்க் கிடந்த வல்குற் றுப்பறழ் தொண்டைச் செவ்வாய்**
**வாசவான் குழலின் மின்போல் வருமுலைச் சாந்து நக்கி**
**ஊசல்பாய்ந் தாடிக் காதிற் குண்டல மிலங்க நின்றாள்**
**காசில்யாழ்க் கணங்கொள் தெய்வக் காந்தர்வ தத்தை யென்பாள்"**[30]

என இடம்பெற்றுள்ளது. ஆடை சூழ்ந்த அல்குலையும், கொவ்வைச் செவ்விதழையும், மணம் பொருந்திய கூந்தலையும், வளர் முலையில் சாந்தினையும், காதில்

குண்டலத்தையும் உடையவளாகத் காந்தருவதத்தை திகழ்ந்தைமையை இப்பாடற்கருத்து எடுத்துரைக்கிறது.

**வீணாபதி**

காந்தருவதத்தையின் தோழி வீணாபதி. இவளைக் கலுழவேகன் தன் நாட்டிலிருந்து சீதத்தனுடன் அனுப்பி வைக்கும்போது உடன் அனுப்பி வைக்கிறான். சீதத்தனின் இல்லத்தில் காந்தருவத்தை இருக்கும் போது உலகியல் நிகழ்வுகள் பலவற்றை எடுத்துரைக்கிறாள்.

**“மண்டல நிறைந்த மாசின் மதிப்புடை வியாழம் போன்றோர்**
**குண்டல மிலங்க நின்ற கொடியினைக் குறுகித் தோழி**
**விண்டலர் கோதை விம்மும் விரைக்குழ றொழுது நீவிப்**
**பண்டியன் மணங்க ளெல்லாம் பரிவறப் பணிந்து சொன்னாள்”**[31]

எண்வகை மணங்கள் குறித்த விவரங்களை வீணாபதி, காந்தருவதத்தையிடம் எடுத்துரைத்தமையை இப்பாடல் விளக்குகிறது.

**நாகமாலை**

சச்சந்தனின் அகப்பரிவார மகளிருள் ‘நாகமாலை’ ஒருத்தியாவாள். அவள் கட்டியங்காரனின் அரண்மனையிலிருந்து ஒற்றாய்ந்து, சீவகனின் வளர்ப்புத் தந்தையான கந்துக்கடனுக்குச் சில குறிப்புகளை அனுப்புகிறாள். கட்டியங்காரன் சீவகன் மேல் கொண்ட பகைமை குறித்துத் தூதுப் பெண்ணொருத்தி வாயிலாகக் கட்டியங்காரனுக்கு மடலனுப்புகிறாள். இதனை,

**“மறைவல்லாற் குரைக்கும் போழ்திற் கோயிலு ணின்று மாலைப்**
**பிறைவெல்லு நுதலி னாளார் பெண்காடி வந்து கூந்தல்**
**உறைசெல நீக்கிப் பைந்தா ளொண்மணிக் குவளை நீட்ட**
**நறைவெல்லு நாக மாலை நோக்கொடு பூக்கொண் டானே”**[32]

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது. அநங்கமாலை பொருட்டுக் கட்டியங்காரனுக்குச் சீவகன் மேல் பகைகொண்டுள்ளமையை நாகமாலை,

**“இன்ன னென்ன வின்பு றானி ழந்த னன்ன ரசென**
**என்னை வெளவும வாயிறா னென்னுஞ் சூழ்ச்சி தன்னுளான்**
**அன்ன தால ரிறப வறிந்து கூத்தி கூறினாள்**
**இன்ன தாற்ப டையமைத் தெழுமி னென்றி யம்பினாள்”**[33]

என்ற பாடல்வழி எடுத்துரைப்பதைக் காணமுடிகின்றது.

**அநங்கமாலை**

அநங்கமாலை என்பவள் நாடகத் தொழில் ஈடுபட்ட பரத்தையாவாள். ஆடற்கலையில் வல்லவள். கூத்தாட்ட அரங்கில் இவளது ஆடலைக் கட்டியங்காரனும் சீவகனும் ஒருங்கே காண்கின்றனர். அநங்கமாலையின் பொருட்டுக் கட்டியங்காரனுக்குச் சீவகன் மீது பகைமை ஏற்படுகிறது.

**குணமாலையார் இலம்பகம்**

சீவகசிந்தாமணியின் நான்காவது இலம்பகமாகக் குணமாலையார் இலம்பகம் அமைந்துள்ளது. இளவேனிற்கால விழாவில் குணமாலைக்கும் சுரமஞ்சரிக்கும் சுண்ணப்பொடி காரணமாக நிகழ்ந்த பூசல் இவ்விலம்பகத்தில் இடம்பெற்றுள்ளது. சீவகன். குணமாலையின் சுண்ணப்பொடியே சிறந்தது எனக் கூறியமையால் அவலமுற்ற சுரமஞ்சரி, கன்னிமாடத்தை அடைந்து ஆடவர் ஒருவரையும் கருதாமல் சீவகனை மட்டும் கருதி நோன்பியற்றினாள். இவ்விலம்பகத்தில் நாய் வடிவிலிருந்த சுதஞ்சணன் வரலாறும் இடம்பெற்றுள்ளளது. சீவகன் பஞ்சநமஸ்கார மந்திரத்தை நாயின் செவியில் ஓத அது தன்னுடம்பை ஒழித்துத் தேவனாகி விண்ணில் செல்கிறது. சீவகனுக்குத் துன்பம் வரும்பொழுது தான் உதவுவதாக உரைத்துவிட்டுச் செல்கிறான் சுதஞ்சணன். இந்நிலையில் கட்டியங்காரனின் பட்டத்து யானையான அசனிவேகம் மதங்கொண்டு நகரில் திரிகிறது. குணமாலைக்கு எதிரில் சினத்துடன் சென்ற அவ்யானையைச் சீவகன் கட்டுப்படுத்தி அவளைக் காக்கின்றான். சீவகனிடம் பெருவிருப்புக் கொண்ட குணமாலையைச் சீவகன் மணம் செய்கிறான். பட்டத்து யானையைச் சீவகன் அடக்கியமையால் சினம்

கொண்ட கட்டியங்காரன், சீவகனைத் தன்பால் கொண்டுவரப் பணிக்கிறான். தன் வீரத்தைச் சீவகன் வெளிப்படுத்தாமல் அடங்கி இருக்கும் நிலையில் காந்தருவதத்தை சீவகனை மீட்க முயல்கிறாள். இருப்பினும் சீவகன், சுதஞ்சணன் உதவியால் தப்பிச் சென்று அவனிருப்பிடமான சந்திரோதயத்தில் தங்குகிறான். கட்டியங்காரனால் சீவகனைக் கொல்வதற்கு அனுப்பட்ட மதனன் சீவகனைத் தான் கொன்றுவிட்டதாகக் குறிப்பிடுகிறான். அவனுக்குக் கட்டியங்காரன் பல்வகைச் அமைந்துள்ளது.

**மகளிர் பாத்திரங்கள்**

குணமாலையார் இலம்பகத்தில், குணமாலை, சுரமஞ்சரி, குணமாலையின் தோழி மாலை, சுரமஞ்சரியின் தோழி கனகபதாகை, முதலிய மகளிர் பாத்திரங்கள் இடம்பெற்றுள்ளன.

**சுரமஞ்சரி**

குணமாலையார் இலம்பகத்தில் குணமாலை, சுரமஞ்சரி குறித்த அறிமுகம் ஒன்றாகவே இடம்பெறுகிறது.

**“காவிற் கண்டத் திரைவளைத் தாயிடை**
**மேவி விண்ணவர மங்கையர் போன்றுதம்**
**பூவை யுங்கிளி யும்மிழற் றப்புகுந்**
**தாவி யந்துகி லாரமர்ந் தார்களே”**[34]

சுரமஞ்சரியும் குணமாலையும் தேவமகளிர் போன்று பூம்பொழிலில் ஒருங்கே இருந்த நிகழ்வு இப்பாடலில் இடம்பெற்றுள்ளது.

**“பௌவ நீர்ப்பவ ளக்கொடி போல்பவள்**
**மௌவ லங்குழ லாள்சுர மஞ்சரி”**[35]

எனும் பாடலடிகள் சுரமஞ்சரியின் அழகு நலன்களை விவரிக்கின்றன. கடல்நீரில் தோன்றிய பவளக்கொடி போன்றவள், முல்லை மலர் அணிந்த கூந்தலை உடையவள் எனச் சுரமஞ்சரி அறிமுகப்படுத்தப்படுகிறாள்.

**குணமாலை**

குணமாலை, கொவ்வைக் கனி போன்ற வாயை உடையவள். தூய்மையான ஆடை அணிந்தவள், பெரிய கண்களை உடையவள் என இலம்பத் தொடக்கத்தில் சிறப்பிக்கப்படுகிறாள். இதனை,

**"கொவ்வை யங்கனி வாய்க்குண மாலை"**[36]

**"தூமஞ் சூடிய தூத்துகி லேந்தல்குற்**
**றாமஞ் சூடிய வேற்றடங் கண்ணினாள்"**[37]

எனும் பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது. சீவகன் குணமாலையின் சுண்ணப்பொடியே சிறந்தது எனக் குறிப்பிட்ட நிலையில் உளம் சோர்ந்த சுரமஞ்சரியிடம் குணமாலை,

**"நங்கை யென்னொடுரை யாய்நனி யொல்லே**
**இங்க ணென்றடி வீழ்ந்திரந் திட்டாள்"**[38]

என இரந்து வேண்டுவதிலிருந்து அவள் பண்புநலனை அறியமுடிகிறது.

**மாலை**

குணமாலையின் தோழியான 'மாலை' என்பவள் குணமாலையின் சுண்ணப் பொடியினை வியந்து,

**"நாமஞ் சூடிய நன்னுத னீட்டினாள்**
**காமஞ் சூடிய கண்ணொளிர் சுண்ணமே"**[39]

எனச் சுரமஞ்சரியிடம் கூறும் நிலையில் அறிமுகப்படுத்தப்படுகிறாள். குணமாலையை பட்டத்து யானையானது பற்றும் வேளையில் மாலையானவள் குணமாலையைக் காப்பதற்காகக் குரல் எழுப்பியமையை,

**"இருங்களி றெய்த வோடச் சிவிகைவிட் டியைள ரேக**
**அரும்பெற லவட்குத் தோழி யாடவ ரில்லையோவென**
**றொருங்குகை யுச்சிக் கூப்பிக் களிற்றெதி ரிறைஞ்சி நின்றாள்"**[40]

எனும் பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது.

**கனகபதாகை**

சுரமஞ்சரியின் தோழி கனகபதாகை. சீவகன் சுரமஞ்சரியின் சுண்ணப்பொடியைச் ‘சிறிது நல்ல அல்ல’ என்று கூறிய போது, சீவகனை நோக்கி,

**“வாரம் பட்டுழித் தீயவு நல்லவாம்**
**தீரக் காய்ந்துழி நல்லவுந் தீயவாம்**
**ஓரும் வையத்தி யற்கையன் றோவென**
**வீர வேனெடுங் கண்ணி விளம்பினாள்”**[41]

எனக் குறிப்பிடும் நிலையில் இலம்பகத்தில் அறிமுகமாகிறாள். வீரவேல் போன்ற நெடிய கண்களை உடையவளாகக் கனகபதாகை திகழ்கிறாள்.

**சுமதி**

சுரமஞ்சரியின் நற்றாய் சுமதி. இவள் பெயரை உரையாசிரியர் குறிப்பிடுவதிலிருந்தே அறியமுடிகிறது.

**“கன்னி மாநகர்க் கன்னியர் சூழ்தரக்**
**கன்னி மாட மடையக் கடிமலர்க்**
**கன்னி நீலக்கட் கன்னிநற் றாய்க்கவள்**
**கன்னிக் குற்றது கன்னியர் கூறினார்”**[42]

சுரமஞ்சரியின் நற்றாயான சுமதியிடம் கன்னியர் சுரமஞ்சரியின் நிலையை எடுத்துரைக்கின்ற நிகழ்வு இப்பாடலில் இடம்பெற்றுள்ளது. சுரமஞ்சரியார் இலம்பகத்திலும் சுமதி பெயர் குறிப்பிடப்படவில்லை.

**வினயமாலை**

குணமாலையின் தாய் வினய மாலை. வேல்கண்ணை உடைவளின் தாய் என்று வினயமாலை அறிமுகம் செய்யப்படுகிறாள்.

**“விழுங்கு காதலாள் வேற்கட் பாவைதாய்”**[43]

குணமாலையின் காதலை வினயமாலை, தன் கணவனான குபேரமித்திரனிடம் ஆற்றுவிக்கும் போது அவள் பெயர்,

**“வினையமா மாலை கேள்வன் குபேரமித் திரற்குச் சொல்ல”**[44]

என இலம்பகத்தில் இடம்பெற்றுள்ளது.

**பதுமையார் இலம்பகமும் மகளிர் பாத்திரங்களும்**

சந்திரோதயத்தில் இருந்த சீவகன், சுதஞ்சணனிடம் பல்வேறு நாடு நாகரங்களைக் காணும் தனது விருப்பத்தைத் தெரிவிக்கிறான். சுதஞ்சணன் சீவகனுக்கு, விரும்பும் இனிய குரலைப் பெறுதல், விடம் தீர்த்தல், விரும்பிய உடலைப் பெறுதல் ஆகிய மூன்று மந்திரங்களைக் கற்பிக்கிறான். பின்னர் பூமி திரும்பிய சீவகன், வேடுவன் ஒருவனுக்கு நல்லறத்தை உணர்த்துகிறான். பின்பு பல்லவ நாட்டின் தலைநகரான சந்திராபம் எனும் நகரை அடைகிறான்.

அந்நகர மன்னன் உலோகபாலனுடன் நட்புக் கொள்கிறான். அவள் சகோதரியாகிய பதுமையைப் பாம்பு கடியினின்று உய்விக்கிறான். பின்னர் பதுமையை மணந்து அவளோடு இரு திங்கள் இன்புற்று இருக்கின்றான். பின்னர் அந்நகரிலிருந்து நீங்கிவிடுகிறான். சீவகன் பிரிவால் பதுமை வருந்துகிறாள். பதுமையின் தந்தையான தனபதி சீவகனைத் தேடுதற்கு ஆணையிடுகிறான். அவ்வாறு வந்தவர்களிடம் சீவகன் அடுத்து ஒன்பதாம் திங்களில் தான் மீண்டும் வருவதாக உரைக்கிறான்.

**மகளிர் பாத்திரங்கள்**

பதுமையார் இலம்பகத்தில் சுதஞ்சணனின் மனைவியர், வேடுவனின் மனைவி, பொதுமகளிர், அந்தரமகளிர், திலோத்தமை, பதுமை, பதுமையின் தோழியர் முதலானோர் மகளிர் பாத்திரங்களாக இடம்பெற்றுள்ளனர்.

**சுதஞ்சணனின் மனைவியர்**

சுதஞ்சணனின் இரு மனைவியர் பற்றிய குறிப்புகள் பதுமையார் இலம்பகத்தில் இடம்பெற்றுள்ளன. ஆனால் அவ்விருவரின் பெயர்கள் இலம்பகத்தில்

இல்லை. சந்திரோயத்திற்கு சுதஞ்சணனால் அழைத்துவரப்பட்ட சீவகனைப் பற்றி சுதஞ்சணனிடம் அவன் மனைவியர் வினவுகின்றனர்.

**"இருமலர்க் குவளை யுண்க ணிமைப்பிலாப் பயத்தைப் பெற்ற**
**அரிமலர்த் தாரி னான்ற னழகுகண் டளிய வென்னாத்**
**திருமலர்க் கோதை யைம்பாற் றேவியர் தொடர்பு கேட்ப**
**எரிமணிப் பூணி னானு மின்னண மியம்பி னானே"[45]**

இப்பாடலில், சுதஞ்சணனின் மனைவியர் குறித்த வருணனை இடம்பெற்றுள்ளது. குவளை மலரை ஒத்த மையுண்ட கண்களையும், ஐந்து பிரிவுடைய கூந்தலையும் உடைய சுதஞ்சணின் மனைவியர் என அவ்விருவரும் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

- **வேட்டுவன் மனைவி**
- **பொதுமகளிர்**
- **அந்தர மகளிர்**

பல்லவ நாட்டில் மகளிர் நடத்தும் நாடகம் பற்றிய குறிப்பு பதுமையார் இலம்பகத்தில் இடம்பெற்றுள்ளது.

**"இந்திர குமன் போல விறைமக னிருந்து காண**
**அந்தர மகளி ரன்னார் நாடக மியற்று கின்றார்"[46]**

விண்ணுலக மகளிரை ஒத்த அழகிய மகளிர் நடத்தும் நாடகம் பற்றி இப்பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது. அம்மகளிர் ஆடிய கூத்தினை,

**"குழலெடுத் தியாத்து மட்டார் கோதையிற் பொலிந்து மின்னு**
**மழலவிர் செம்பொற் பட்டங் குண்டல மாரந் தாங்கி**
**நிழலவி ரல்குற் காசு சிலம்பொடு சிலம்ப நீடோ**
**அழகிகூத் தாடு கின்றா ளரங்கின்மே லரம்பை யன்னாள்"[47]**

என்ற பாடற்கருத்து உணர்த்துகிறது. நாடக மகளிர் அரம்பையைப் போன்ற அழகுடன் திகழ்ந்தமையை இப்பாடல் வாயிலாக அறியமுடிகின்றது.

**வேட்டுவனின் மனைவி**

கொடியில் முதிர்ந்த கிழங்கும், இனிய தேனும் கொழுத்த மாமிசமும் கள்ளும் ஏந்தி, பிடிபோலும் நடையும் முதிர்ந்த கொங்கையும், தழை உடையும் பெற்றவளாக வேடுவனின் மனைவி காட்டப்படுகிறாள். இதனை,

**“கொடிமுதிர் கிழங்கு தீந்தேன் கொழுந்தடி நறவொ டேந்திப்**
**பிடிமுதிர் முலையினாள்தன் தழைத்துகில் பெண்ணினோடும்**
**தொடுமரைத் தோலன் வில்லன் மரவுரி யுடையன் தோன்ற”(சீவக, பா.1231)**

என்ற பாடல் வழியாக அறியலாம். வேடுவனின் மனைவி குறித்தான உடற்தோற்ற அமைப்பினையும், கைக்கொண்டிருக்கும் உணவுப் பொருட்களையும் அறியமுடிகின்றன.

**பொதுமகளிர்**

பொதுமகளிரின் நடவடிக்கைகளையும், சீவகன் பல்லவ நாட்டிற்குச் செல்லும் வழிகேட்கின்ற போது, அவர்களின் பதில்கள் வழியாகப் பொதுமகளிர் குறித்தான பதிவுகளை அறியமுடிகிறது. இதனை,

**“அரியலார்ந்து அமர்த்தலின் அனந்தர் நோக்குடைக்**
**கரியவாய் நெடியகட் கடைசி மங்கையர்**
**வரிவரால் பிறழ்வயற் குவளை கட்பவர்**
**இருவரை வினாய்நகர் நெறியின் முன்னினான்.” (சீவக, பா.1249)**

என்ற பாடலில், கள்ளைப் பருகியதால் ஒன்றோடு ஒன்று பொரும் மயங்கிய பார்வை கொண்ட நெடிய கண்களையும், கரிய வாயையும் உடைய உழத்தியராகிய, வரால் மீன் பிறழும் வயலில் குவளையாகிய களையைப் பறிக்கும் மங்கையர் இருவரிடம் வழிகேட்டு, அவ்வழியே சென்று பல்லவ நாட்டின் தலைநகரை அணுகினான்.

**அந்தரமகளிர்**

அரண்மனையின் அந்தப்புற மகளிர் அந்தரமகளிர் என்று அழைக்கப்படுகின்றனர். சீவகன் பதுமையின் திருமணத்தின் போது தூய மாணிக்கப்

பாவை போன்ற அந்தர மகளிர் சீவகனை நீராடச் செய்து திருமணப் பந்தலுக்கு அழைத்து வந்தனர் என்பதை,

**"மழகளிற் றெருத்திற் றந்த மணிக்குட மண்ணு நீரால்**
**அழகனை மண்ணுப் பெய்தாங் கருங்கடிக் கொத்த கோலந்**
**தொழுதகத் தோன்றச் செய்தார் தூமணிப் பாவையன்னார்**
**விழுமணிக் கொடியனாளும் விண்ணவர் மடந்தை யெர்தாள்."(சீவக, பா.1345)**

என்ற வரிகளில் இருந்து அறியலாம். மேலும், அந்தரமகளிர், திருமணக் காலங்களில் மணமகனை அழகுபடுத்துகின்ற வேலைப்பாடுகளைச் செய்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

**திலோத்தமை**

பதுமையின் நற்றாய் திலோத்தமையாவாள். தனது மகள், பதுமையைப் பாம்பு தீண்டியபோது, சீவகன் அவளைக் காப்பாற்றுகின்றான். சீவகனின் இச்செயல்பாடு கண்ட, அரசனும், அவனுடைய மனைவியுமான திலோத்தமையும், தங்கள் மகளைச் சீவகனுக்குத் திருமணம் முடிக்க விரும்புகின்ற போது, திலோத்தமை தங்கள் மகளான பதுமையை சீவகனுக்கு மணமுடித்துக் கொடுக்கின்றனர். திருமணத்திற்குப் பின்னால் சீவகன் பதுமையைப் பிரிந்து செல்கின்ற போது, தன் மகளின் கணவனான சீவகனின் பிரிவினைக் கண்டு பதுமையிடம் வினவியதோடு தானும் வருந்துகின்றாள். இதிலிருந்து, தனது மகளின் பிரிவுத் துயரத்தில் தானும் பங்கு கொண்ட பாத்திரமாக ஆசிரியர் பதிவு செய்துள்ளதைப் பின்வரும் வரிகளில் இருந்து அறியலாம்.

**"சில்லரிச் சிலம்பு சூழ்ந்த சீறடித் திருவின் நாற்றாய்**
**முல்லையங் குழலி னாய்நின் முலைமுதற் கொழுநன் மேனாட்**
**சொல்லியும் அறிவ துண்டோ எனக்குழைந் துருகி நைந்து**
**மெல்லியல் கங்குற் சொல்லிற் றிற்றென மிழற்று கின்றாள" (சீவக, பா.1399)**

என்ற வரிகள் உணர்த்தி நிற்கின்றது.

## பதுமை

சீவகன் மணந்த மூன்றாவது பெண் பதுமையாவாள். பதுமை இயற்கையழகினைப் பெற்றவள். திலோத்தமை பெற்றெடுத்த பதுமையினை முல்லைக் கொடி என்று ஆசிரியர் உருவகப்படுத்தியுள்ளார். இதனை,

**"பவழங்கொள் கோடு நாட்டிப் பைம்பொனால் வேலி கோலித்**
**தவழ்கதிர் முத்தம் பாய்த்தித் தன்கையாற் றீண்டி நன்னாட**
**புகழ்கொடி நங்கை தன்பேர் பொறித்ததோர் கன்னி முல்லை**
**அகழ்கடற் றானை வேந்தே யணியெயிறீன்ற தன்றே." (சீவக, பா.1269)**

என்ற வரிகளில் இருந்து அறியலாம். பதுமையினைக் குறித்து அறிமுகம் செய்கின்ற போது,

**"கைதரு மணியிற் றெண்ணீர் மதுக்கலந் தூட்டி மாலை**
**பெய்தொளி மறைத்து நங்கை பிறையென வளர்க்கின் றாளே"[48]**

என்று, பதுமையின் அழகுநலம் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளதை அறியலாம். பதுமையின் அழகினையும், அறிவையும் குறித்து ஆசிரியர் மிகுதியாகப் பேசியுள்ளார். பதுமைக்குப் பாம்பு தீண்டியதால், விஷத்தை முறிப்பதற்கு சீவகன் முனைகின்றான். இறுதியில், பதுமையின் உயிர் சீவகனால் பாதுக்காக்கப்படுகிறது. உயிரைக் காப்பாற்றிய சீவகனுக்கு பதுமையை மணமுடித்துக் கொடுக்கின்றனர்.

## பதுமையின் தோழியர்

இளவரசியாகத் திகழும் பதுமைக்குத் தோழியர் பலர் இருந்துள்ளதைக் காணமுடிகிறது. பதுமையார் இலம்பகத்தில் தோழியரின் செயல்பாடுகளை அறியமுடிகிறது. அதாவது, வெள்ளிய சங்கு வளையல்களை அணிந்த தோழியர், பொழில் மலர்களைக் கொண்டு மாலை தொடுப்பர். அன்று மலர்ந்த மலர்களைப் பறிப்பர். செய்குன்றின் ஓரம் சென்று மறைந்து எதிரொலி தோன்றக் கூவுவர், செயற்கைச் சுனை கலங்குமாறு அதில் பாய்ந்து நீராடுவர். ஆசையுடன் பொம்மைகளுக்கு மணம் புரிவிப்பர் என்றும், அத்தோழிப் பெண்கள், ஆடையில்

பொருந்திய கொய்சகம் காற்றில் அலைய ஊசல் ஆடுவா், ஒளிரும் கழங்கு ஆடுவர் ஆசையாகிய பந்தை ஏந்தி விளையாடுவர். இவ்வாறு அவா்கள் எல்லாப் பக்கதிலும் சென்றிருந்தனா். பதுமையுடன் கூடவே இருந்து அவளை மகிழ்விப்பதையே பெருங்கடைமையாகக் கொண்டிருந்தனா். மேற்குறித்த பாடற்கருத்திற்கான பாடல் வரிகள் பின்வருமாறு,

**“அலங்கல் தான்தொடுப் பாா் அலா் பூக்கொய்வார்**
**சிலம்பு சென்றெதிா் கூவுநர் செய்கனை**
**கலங்கப் பாய்ந்துட னாடுநர் காதலின்**
**இலங்கு பாவையிரு மணம் சோ்த்துவாா்.” (சீவக, பா.1319)**

என்ற பாடல்வழி அறியமுடிகின்றது.

## கேமசரியார் இலம்பகமும் மகளிர் பாத்திரங்களும்

சுதஞ்சணனிடமிருந்து விடைபெற்றுச் சென்ற சீவகன், ‘சித்திரகூடம்’ என்ற தவப்பள்ளியை அடைந்து அங்கிருந்த தவ முனிவர்களுக்கு நல்லுரை பகர்ந்து அவர்களைத் திருத்துகிறான். பின்னர் தக்க நாட்டிலுள்ள கேமமாபுரத்தை அடைந்தான். அந்நகர வணிகன் சுபத்திரன். அவன் மனைவி நிப்புதி. இவர்களின் மகள் கேமசரி. கேமசரிக்குச் சாதகம் கணித்த கணிதர், அவள் யாரைக் கண்டு நாணம் கொள்கிறாளோ அவனே அவளுக்குக் கணவனாவான் எனக் குறிப்பிடுகின்றனர். சுபத்திரன் ஒவ்வொரு நாளும் தன் மனைக்கு ஆடவர் பலரை அழைத்து வந்து விருந்தூட்டினான். ஆனால் அவர்களுள் எவரொருவனையும் கண்டு கேமசரி நாணப்படவில்லை. இந்நிலையில் சீவகனைக் கண்ட சுபத்திரன், அவனைத் தன் இல்லத்திற்கு அழைத்துச் செல்ல, கேமசரி சீவகனைக் கண்டு நாணமடைகிறாள். பின்னர் அவனை நினைத்து வருந்துகிறாள். சுபத்திரன் கேமசரியைச் சீவனுக்கு மணம் செய்விக்கிறான். அவளோடு இரண்டு திங்கள் தங்கியிருந்த சீவகன், பின்னர் அவளைப் பிரிந்து செல்கிறான். சீவகனைப் பிரிந்த

கேமசரி பிரிவாற்றாமையால் வருந்துகிறாள். அவள் தாய் நிப்புதி தன் மகளைத் தேற்றுகிறாள்.

**மகளிர் பாத்திரங்கள்**

கேமசரியார் இலம்பகத்தில், கேமசரி, நிப்புதி ஆகிய மகளிர் பாத்திரங்கள் இடம்பெற்றுள்ளன.

**நிப்புதி**

'சுபத்திரன் மனைவி' என நிப்புதி இலம்பகத்தில் அறிமுகமாகிறாள். தன் மகளுக்கு உற்ற கணவன் வாராமையால் வருந்திய நிப்புதியைச் சுபத்திரன் தேற்றுவதை,

**"தாய்படு துயர மெல்லாந் தாரவ னீக்கி னானே"**[49]

எனும் பாடலடி வாயிலாக அறியமுடிகிறது. சீவகனைக் கண்டவுடன் கேமசரி நாணமுற்றுக் கவிழ்ந்தாள் எனக் கேட்ட நிப்புதி, விரைந்து வந்து சீவகனைக் கண்டு மகிழ்ந்தமையை,

**"நினைப்பரு நீணிறை நிப்புதி சேர்ந்தாய்**
**கினத்திடை யேறனை யானெழி னோக்கிப்**
**புனக்கொடி பொற்பொடு புண்ணிய நம்பி**
**வனப்பினை யேகண்டு வாட்க ணகன்றாள்"**[50]

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

சீவகன் பிரிந்து சென்றமையால் வருந்திய கேமசரியைத் தாயான நிப்புதி நல்லுரைகள் கூறித் தேற்றுகிறாள்.

**"பிறந்தவர் சாவார் செத்தவர் பிறப்பவே யென்ன நோக்கிக்**
**கறங்கிசை வண்டு பாடுங் கோதைநீ கவல லென்றாள்"**[51]
**"மன்னுநீர் மொக்கு ளொக்கு மானிட ரிளமை யின்ப**
**மின்னினொத் திறக்குஞ் செல்வம் வெயிலுறு பனியி னீங்கு"**[52]

எனும் பாடலடிகளில், உலகத்தின் பல்வேறு இயல்புகளைத் தன் மகளுக்கு எடுத்துரைத்துத் தேற்றும் தாயாக நிப்புதி விளங்கியமையை அறியமுடிகிறது.

## கேமசரி

சுபத்திரன் - நிப்புதி ஆகிய இருவரின் மகளான கேமசரி, பெண்மைக்குப் பெருவிளக்கமாகத் திகழ்ந்தவளாவாள் எனத் திருத்தக்க தேவர் அவளை அறிமுகம் செய்கிறார்.

**“வார்சிலை வடிப்ப வீங்கி வரையெனத் திரண்ட தோளான்**
**சோர்புய றொலைத்த வண்கைச் சுபத்திரன் மனைவி பெற்ற**
**சீர்நலம் கடந்த கேம சரியெனத் திசைக ளெல்லாம்**
**பேர்நலம் பொறித்த பெண்மைப் பெருவிளக் காகி நின்றாள்”**[53]

பிறமகளிரின் சிறந்த அழகை வென்ற கேமசரி, திசைகளில் எல்லாம் தன் பெயரின் நலத்தை எழுதிய பெண்மையை உடைய பெருவிளக்கு எனக் குறிப்பிடப்படுகிறாள்.

## கனகமாலையார் இலம்பகமும் மகளிர் பாத்திரங்களும்

‘மத்திமதேயம்’ என்ற நாட்டை அடைந்த சீவகன், அந்நாட்டு மன்னனான தடமித்தன் மகன் விசயனுடன் நட்புக் கொள்கிறான். காந்தருவதத்தை, குணமாலையின் நினைவுகள் அவன் உள்ளத்தை வருத்துகின்றன. தடமித்தன், தன் மக்கள் அனைவருக்கும் வில், வாள் மற்றும் போர்ப் பயிற்சிகளை அளிக்கச் சீவகனை வேண்டுகிறான். தன் மகள் கனகமாலையை மணந்து கொள்ளுமாறு சீவகனை வேண்டுகிறான். சீவகனும் அவளை மணந்து மகிழ்வுற்றான். இராசமாபுரத்தில் சீவகனைக் காணாமல் தேடிய தோழர்கள், காந்தருவதத்தை வாயிலாகச் சீவகன் இருக்கும் இடத்தை அடைகின்றனர். நந்தட்டனைக் கண்ட சீவகன் மிகவும் மகிழ்வெய்துகிறான். சீவகனின் பிற தோழர்களும் காந்தருவதத்தையிடம் சீவகனைக் காண விரும்பும் தம் எண்ணத்தை உரைக்கின்றனர். அவர்கள் வழியில் விசயை நோன்பியற்றிய தவப்பள்ளியை அடைகின்றனர். விசயை வாயிலாகச் சீவகனின் பிறப்பு நிகழ்வுகளை அறிகின்றனர். பின்னர் சீவகனின் தோழர்கள் ஏமமாபுரத்தை அடைந்து அந்நகரப் பசுக்களைக் கவர்கின்றனர். சீவகன், நந்தட்டனுடன் பசுக்கூட்டத்தை மீட்கச் செல்கிறான்.

பதுமுகன் எய்த அம்பினைக் கண்ட சீவகன் போரை நிறுத்தித் தன் நண்பர்களுடன் இணைகிறான். பின்னர்ச் சீவகன் தன் தாயான விசயை தண்டகாரணியத்துத் தவப்பள்ளியில் இருப்பதை நண்பர்கள் வாயிலாக அறிகிறான். கனகமாலையை அவ்விடத்திலிருக்கச் செய்து தன் தோழர்களுடன் தன் தாயைக் காண்பதற்குச் செல்கிறான்.

**மகளிர் பாத்திரங்கள்**

இவ் இலம்பகத்தில் வரும் பாத்திரங்கள் கனகமாலை, அநங்கமாவீணை, அநங்கவிலாசினி, பவித்திரை, வசுந்தரி, பிரீமதி மற்றும் பணிப்பெண்டிர் போன்ற பாத்திரங்களை இவ்விலம்பகத்தில் காணமுடிகின்றன. இவை குறித்துப் பின்வருமாறு எடுத்துரைக்கலாம்.

**கனகமாலை**

கனகமாலை திருமகளுக்கு இணையாக ஒப்பிடப்படுகின்றாள். அதாவது, தாமரைப் பூவில் வீற்றிருக்கும் திருமகளைப் போன்றவளும் குவளை போன்ற கண்ணை உடையவளுமாகிய கனகமாலை எனக்கு மகளாக வந்து தோன்றியவுடனே, சோதிடர்கள் ஒன்று கூடி, ஆராய்ந்து சாதகம் கணித்து அவளை அம்பு பொருந்திய வில்லாற்றலில் மிக்கவனுக்கே உரிய முறைமையாகக் குறித்துள்ளனர் என்று கனகமாலையின் சிறப்பினையும், அறிமுகத்தையும் அவள் தாய் புலப்படுத்துவதைப் பின்வரும் வரிகள் புலப்படுத்துகின்றன. சான்றாக,

**“பூவியல் கோயில் கொண்ட பொன்னனா ளனைய நங்கை**
**காவியங் கண்ணி வந்து பிறத்தலும் கணிகள் ஈண்டி**
**மூவியல் திரித லின்றிச் சாதகம் முறையிற் செய்தார்**
**ஏவியல்சிலையினாய்க்கேஉரியளென் றுரைப் நேர்ந்தான்.” (சீவக, பா.1686)**

என்ற பாடல் வழியாக அறியலாம். இவற்றிலிருந்து கனகமாலையின் திருமணம் சிறப்புடைய சீவகனுடன் நடைபெறப் போவதைக் குறிப்பாகச் சுட்டிக்காட்டப்படுவதை அறியலாம். தடமித்தன் மகள் கனகமாலையின் அழகு நலன் குறித்த செய்திகள்,

**"வடுவும் வேலு மலருங் கயலும் வனப்பழித்தகண்**
**அடியஞ் சிலம்பினாட் குய்த்திறைஞ்சிக் காட்ட வவள் கொண்டாள்"**[54]
**"பின்னி விட்ட பிடித்தடக்கை யிரண்டு போன்று திரண்டழகார்**
**கன்னிக் கலிங்க மகிலார்ந்து கவ்விக் கிடந்த குறங்கினாள்**
**மின்னுக் குழையும் பொற்றோடு மிளிர பெருத்த மிடங்கோட்டி**
**என்னு மிமையா ணினைத்திருந்தா ளியக்கி யிருந்த வெழிலொத்தாள்"**[55]

தாமரைப் பூவில் வீற்றிருக்கும திருமகளைப் போன்றவள் கனகமாலை. குவளை மலர் போன்ற கண்களை உடைய அவளுக்கு வில்லாற்றலில் சிறந்தவனே கணவனாக வாய்ப்பான் எனச் சோதிடர் குறிப்பிட்டதைத் தடமித்தன் சீவகனிடம் எடுத்துரைத்து அவளை மணம் செய்து கொள்ள வேண்டுகிறான். இதனை,

**"பூவியல் கோயில் கொண்ட பொன்னனா ளனைய நங்கை**
**காவியங் கண்ணி வந்து பிறத்தலுங் கணிக ளீண்டி**
**மூவிய றிரித லின்றிச் சாதக முறையிற் செய்தார்**
**ஏவியம் சிலையி னாய்க்கே யுரியளென் றுரைப்ப நேர்ந்தாள்"**[56]

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது. மேலும், ''அருந்ததிக் கற்பினாள்' எனக் கனகமாலை சிறப்பித்துப் போற்றப்படுவதை,

**"பரிந்தழு கின்ற தம்பி பங்கயம் அனைய செங்கண்**
**பொருந்துபு துடைத்து வேண்டா புலம்புதல் காளையென்று**
**மருந்தனாள் உறையும் கோயில் மடுத்துடன் கொண்டு புக்கான்**
**அருந்ததிக் கற்பி னாளை அடிபணிந் தவனும் கண்டான்." (சீவக, பா.1729)**

என்ற பாடல் புலப்படுத்துகிறது.

**அநங்கமாவீணை**

சீவகனைக் கண்டு மயங்கிய அரம்பையைப் போன்ற அழகுடைய பெண் அநங்கமாவீணை. இவள் குறித்த அறிமுகம் கனகமாலையார் இலம்பகத்தில்,

**"கானத்தி னேகு கின்றான் கடிபொழிற் கவின்கண்**
**டெய்தித் தானத்தி லிருத்த லோடுந் தையலா ளொருத்தி தானே**
**வானத்தி னிழிந்து வந்த வானவர் மகளு மொப்பாள்**
**நானமும் பூவுஞ் சாந்து நாறவந் தருகு நின்றாள்"**[57]

என இடம்பெற்றுள்ளது. வனம் ஒன்றில் தோழியருடன் விளையாடிக் கொண்டிருந்த அநங்கமாவீணையை விஞ்சையன் ஒருவன் விண்ணில் எடுத்துச் செல்ல, அவன் மனைவி அவனிடமிருந்து அநங்கமாவீணையை விடுவிக்கிறாள். விண்ணிலிருந்து தான் அக்காட்டில் விழுந்ததாக அநங்கமாவீணை,

**"மயிலின் மரிய வாங்கோர் மடமயி ழுழுவிக்கொண்ட**
**வெயிலினஞ் செல்வன் போல விஞ்சைய னெற்கொண் டேகத்**
**துயிலிய கற்பினாடன் றுணைவிகண் டிடுவித் திட்டாள்**
**அயிலியல் காட்டுள் வீழ்ந்தே னநங்கமா வீணை யென்பேன்"**[58]

எனக் குறிப்பிடுகின்றாள். சீவகன் மீது கொண்ட காமத்தை விடுத்துப் பின்னர் அநங்கமாவீணை பவதத்தனை விரும்புகிறாள்.

**அநங்கவிலாசினி**

கனகமாலையின் தோழியாக இலம்பகத்தில் இடம்பெறுபவள் அநங்கவிலாசினி. இவளிடம் தன் மாலையைக் கொடுத்த கனகமாலை, அதனைச் சீவகனிடம் கொடுக்கக் கூறுகிறாள். அதனை வாங்கிய அவள் சீவகனிடம் சென்றமையை,

**"அணுகிமுன் னின்றவ நங்க விலாசினி யங்கைகூப்பிப்**
**பிணையனீட் டப்பெருந் தகைய.'.தே லான்முக நோக்கலும்**
**துணையிறோ கையென்னங் கைக்குத் தொங் கறொடுப் பாயுநீ**
**மணிசெய்மென் றோண்மருந் துநீயா ருயிருநீ யேலென்றாள்"**[59]

என்ற பாடற்கருத்து புலப்படுத்துகிறது.

**பவித்திரை**

பதுமுகன் என்பவனை சீவகனிடம் அறிமுகம் செய்கின்ற போது, பவித்திரையின் இயல்புகள் குறிப்பிடப்பட்டுள்ளன. இதனை,

**"செட்டிதன பாலன்மனை யாள் சினவு வாள்கண்**
**பட்டம் நுதல் மின்னின்நகு பவித்திரைக்குத் தோன்றி" (சீவக, பா.1710)**

என்ற பாடலில், இதோ இருக்கிறானே இவன், செட்டியான தனபாலனுக்கு மனைவியான பட்டத்தை அணிந்த நெற்றியிலே மின்போல ஒளி செய்யும் பவித்திரை என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

**வசுந்தரி**

நந்தட்டன் சீவகன் வடிவம் கொண்டு இருந்தான். சீவகன் வடிவம் கொண்டிருந்த நந்தட்டனைப் பார்த்து, விசயன் நீ யார்? என வினவுகின்றான். இதற்கிடையில் வசுந்தரி என்னும் மகளிரைக் குறித்தும், அவள் அழகு நலன் மற்றும் கனகமாலையுடன் சீவகன் உடன் இருந்த செய்தியை வசுந்தரி குறிப்பிடுவதில் இருந்து, வசுந்தரி என்ற மகளிர் பாத்திரத்தை அறியமுடிகிறது. இதனை,

**"ஆரகிற் சேக்கை நீங்கி வெறுநிலத் தடிகள் தாமே**
**நீரதிற் கிடந்த தென்கொல் என்றுயான் நினைந்துபோகிச்**
**சேர்துணை கழறச் சென்றேன் செல்வியோ டாங்குக் கண்டேன்**
**போர்பல கடந்த வேலோய் மாயங்கொல் போற்றி என்றாள்." (சீவக, பா.1720)**

எனும் பாடல் உணர்த்துகின்றது.

**பிரீதிமதி**

தேவதத்தன் என்பவன் தன்னை அறிமுகம் செய்துகொள்கின்ற போது, பிரீதிமதியின் மகன் என்பதைக் குறிப்பிடுகின்றான். இதனை,

**"பொன்னகருள் வேந்தன்பெய ராற்பொறியும் பெற்றான்**
**வில்மரிய தோள்விசய தத்தன் உயிர்க் கவசம்**
**பின்னரிய கற்பினவள் பிரீதிமதி காதற்**
**றன்மகனென் யானடிகள் தேவதத்தன் என்பேன்." (சீவக, பா.1792)**

என்ற பாடல் மூலமாக பிரீதிமதியின் குணநலன்களை அறியமுடிகிறது.

**பணிப்பெண்**

சீவகனுக்குப் பணிவிடை செய்தற் பொருட்டு வரக்கூடிய பெண்ணாகப் பணிப்பெண் வருகின்றாள். அவளை அறிமுகம் செய்கின்ற போது, பால்போல் இனிய சொல்லினாள் என்று குறிப்பிடப்படுவதை,

**"ஊனுண் சிங்கக் குழவி எயிற்றே ரொளிஎயிற் றினான்**
**தேனுண் போதிற் பிணையலும் பந்தும் புனைந்து**
**நானந் தோய்த்து நனைகலை நாறுமதந் தெளித்தபின்**
**பானுண் தீஞ்சொல்லா ளோர்படுவி வண்டார்ப்ப வந்திறைஞ்சினான்."(சீவக, பா.1653)**

என்ற பாடல் மூலம் பணிப்பெண்ணின் தன்மையை அறியமுடிகிறது.

**விமலையார் இலம்பகம்**

தண்டகாரணியத்தில் தன் தாயைக் கண்ட சீவகன் மிகுந்த மகிழ்வெய்துகிறான். விசயை, சீவகனிடம் நாட்டை மீட்பதற்கான வழிமுறைகளைக் குறிப்பிடுகிறாள். மாமன் கோவிந்தனின் துணையைப் பெற அறிவுறுத்துகிறாள். விசயையைத் தவ மகளிர்களுடன் கோவிந்தன் நகருக்குச் சீவகன் அனுப்பி வைக்கிறான். பின்னர் இராசமாபுரச் சோலை ஒன்றில் தன் தோழர்களுடன் சீவகன் தங்குகிறான். வேற்றுவடிவில் நகரில் உலவிய சீவகன் விமலையைக் கண்டு காதல் கொள்கிறான். விமலையின் தந்தையான சாகரதத்தன் தன் கடையில் வாணிகம் பெருகியதை உணர்கிறான். சோதிடர் கூறியவாறு விமலைக்கு ஏற்ற கணவன் வாய்க்கும் வேளையில் இவ்வாறு நடைபெறும் என்பதை அறிந்த சாகரதத்தன், தன் மகளைச் சீவகனுக்கு மணம் செய்து கொடுக்கிறான். விமலையுடன் இரு நாள்கள் தங்கியிருந்த சீவகன் மறுநாள் தன் தோழர்களைக் காண்பதற்குச் செல்கிறான்.

**மகளிர் பாத்திரங்கள்**

விமலையார் இலம்பகத்தில் விசயை, நீங்கலாக சமையல் தொழில் புரியும் மகளிர், புணர்ச்சிக்குரிய மகளிர், இவ்விலம்பகத்தின் முதன்மை மகளிர் பாத்திரமாக

விமலை இடம்பெறுகிறாள். விமலையின் தாய் கமலை பற்றிய குறிப்பும் இவ்இலம்பகத்தில் இடம்பெற்றுள்ளது.

**விமலை**

விமலை தன் தோழியருடன் பந்தாடும் சூழலில் இலம்பகத்தில் அறிமுகமாகிறாள். மான் போன்ற கண்களையும், பால்போன்ற சொற்களையும் உடையவள் விமலை என்பதனை,

**“வேனெடுங் கண்க ளம்பா விற்படை சாற்றி யெங்கும**
**தேநெடுங் கோதை நல்லார் மைந்தனைத் தெரவி லெய்ய**
**மானெடு மழைக்க ணோக்கி வானவர் மகளு மொப்பாள்**
**பானெடுந் தீஞ்சொ லானோர் பாவைபந் தர்டு கின்றாள்”**[60]

என்ற பாடல் வாயிலாக அறியமுடிகிறது. திருமகளைப் போன்ற அழகுடையவளாக விமலை விளங்கியமையை,

**‘‘செந்தா மரைமேற் றிருவின்னுரு வெய்தி நின்றாள்”**[61]

எனக் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது. சாகரதத்தன் தன் மகள் விமலையைச் சீவகனிடம் அறிமுகம் செய்யும்போது,

**“கம்ப மிலாதாள் கமலைக்கு விமலை யென்பாள்**
**செம்பொன் வியக்கு நிறத்தாடிரு வன்ன நீரான்”**[62]

எனக் குறிப்பிடுகிறான். விமலையின் தாய் பெயர் கமலை என்பதை இதனால் அறியமுடிகிறது.

**சுரமஞ்சரியார் இலம்பகம்**

இராசமாபுரத்தில் விமலையை மணந்தமையைச் சீவகன் தன் நண்பர்களுக்குத் தெரிவிக்கிறான். சீவகனின் நண்பர்களுள் ஒருவனான புத்திசேனன், சுரமஞ்சரி, ஆடவரைக் காண்பதற்கு விரும்பாமல் தனியே தவம் செய்வதைச் சீவகனுக்கு எடுத்துக் கூறி, அவளைச் சீவகன் மணந்தால் அவனைக் காமதிலகன் என்று அழைப்பதாகக் குறிப்பிடுகிறான். அவளை மணப்பதாகக் கூறிய சீவகன், முதிய

அந்தணர் வேடந்தாங்கிச் சுரமஞ்சரி தங்கியிருக்கும் கன்னி மாடத்தை அடைகிறான். அவனின் முதுமையைக் கண்டு இரங்கிய சுரமஞ்சரியின் தோழியர் அவனைக் குறித்துச் சுரமஞ்சரியிடம் தெரிவிக்கின்றனர். சுரமஞ்சரியும் அவன்பால் இரக்கம் கொண்டு, எதற்காக இவ்விடம் வந்தாய் என வினவுகிறாள். அவளிடம் சீவகன், தனது மூப்பு கழியுமாறு வந்ததாகக் குறிப்பிடுகிறான். முதிய அந்தணர் உருவிலிருந்த சீவகன், 'காம கீதம்' ஒன்றை இசைத்துப் பாடுகிறான். அதனைக் கேட்ட சுரமஞ்சரியின் தோழியர் அக்குரல் சீவகனின் குரலைப் போன்றிருப்பதாகக் குறிப்பிடுகின்றனர். அவர்களிடம் சுரமஞ்சரி, காமன் கோயிலுக்குச் சென்று சீவகனைத் தனக்குத் தருமாறு வேண்டச் செல்வதாகக் குறிப்பிடுகிறாள். மறுநாள் தோழியருடனும், முதிய அந்ததணனுடன் காமன் கோயிலை அடைந்து சீவகனைத் தருமாறு காமதேவனிடம் வேண்டுகிறான். அவ்விடத்தில் மறைந்திருந்த புத்திசேனன், கன்னிமாடம் சென்று சீவகனை அடைவாயாக எனக் கூறுகிறான். அவ்வாறே சென்ற சுரமஞ்சரி அங்கு சீவகனைக் கண்டு வியப்புறுகிறாள். சீவகனின் தோழர்கள் சுரமஞ்சரியின் பெற்றோரை அணுகி, முறைப்படி மணம் வேண்டுகிறன்றனர். சுரமஞ்சரியின் பெற்றோர் மகிழ்ந்து அவளைச் சீவகனுக்குத் திருமணம் செய்து வைக்கின்றனர். அன்று அவளுடன் இன்புற்றிருந்த சீவகன், தன் செயலை எடுத்துரைத்து விரைவில் திரும்புவேன் எனக் கூறிச் செல்கிறான். பின்னர் தன் வளர்ப்புத் தாய் சுநந்தையையும் வளர்ப்புத் தந்தை கந்துக்கடனையும் கண்டு தன் நிலைமையை உணர்த்துகிறான். பின்னர் காந்தருவத்தையையும் குணமாலையையும் சந்தித்து மகிழ்கிறான். பின்னர் தன் செயலைக் கந்துக்கடனிடம் எடுத்துரைத்து, குதிரை வணிகன் வேடத்தில் இராசமாபுரத்திலிருந்து விதேக நாட்டை நோக்கிச் சென்றான்.

## மகளிர் பாத்திரங்கள்

இக்காப்பிய இலம்பகத்தில் இடம்பெற்றுள்ள மகளிர் பாத்திரங்கள் குறித்துப் பின்வருமாறு எடுத்துரைக்கலாம்.

### சுரமஞ்சரி

சுரமஞ்சரி குறித்த அறிமுகம் குணமாலையார் இலம்பகத்திலேயே இடம்பெறுகிறது. புத்திசேனன் சுரமஞ்சரியின் இயல்புகளைச் சீவகனுக்கு எடுத்துரைக்கும் போது,

**‘‘ஆடவர் தனதிடத் தருகு போகினும்**
**நாடிமற் றவர்பெயர் நயந்து கேட்பினும்**
**வீடுவ லயிரென வெருளு மற்றவள்**
**சேடியர் வழிபடச் செல்லுஞ் செல்வியே’’**[63]

எனக் குறிப்பிடுகிறான். ஆடவர் பெயரை அங்கு யாரேனும் கூறக்கேட்டாலும் தான் உயிர்விடுவதாகச் சுரமஞ்சரி கூறுவதை இதன்வழி அறியமுடிகிறது.

**“காமனே செல்லினுங் கனன்று காண்கிலாள்”**[64]

காமனே அவள் முன் சென்றாலும் அவனையும் நோக்காத பண்பினள் எனச் சுரமஞ்சரி குறிப்பிடப்படுகிறாள்.

### காவல் மகளிர்

சுரமஞ்சரி தங்கியிருந்த கன்னிமாடத்தைக் காவல் செய்த மகளிர் பற்றிய செய்தி, இலம்பகத்தில்,

**“அச்சமுறுத் தழுதுபுளித் தாங்குத்தம தீஞ்சொல்**
**வெச்சென்றிடச் சொல்விரி கோதையர்’’**[65]

என இடம்பெற்றுள்ளது.

### சுமதி

குபேரதத்தன் மனைவி ‘சுமதி’ பற்றிய குறிப்பு சுரமஞ்சரியார் இலம்பகத்தில் இடம்பெற்றுள்ளது. சுமதி குறித்தான அறிமுகத்தில், கயல் மீன் போன்ற கண்களும்,

வில்போன்ற புருவமும் பிறை நிலவு போன்ற நெற்றியும் பொருந்தி, இனிமை கொண்ட கொவ்வைக் கனி போன்ற இதழும், முத்துப் போன்ற பற்களும் நன்கு அமைந்து அசையும் குண்டலத்துடன் தோன்றும் முழுமதி இது என்று கூறத்தக்க முகத்தையுடைய சுமதி என்பதை,

**''கெண்டையும் சிலையுந் திங்கள் இளமையுங் கிடந்து தேங்கொள்**

**தொண்டையங் கனியும் முத்தந் தொழுக அணிந்து தூங்கும்.''(சீவக, பா.2016)**

என்ற பாடல் வரிகளில் இருந்து அறியமுடிகிறது.

**மண்மகள் இலம்பகம்**

விதேக நாட்டை அடைந்த சீவகன் அங்குத் தனது மாமன் கோவிந்தனைக் காண்கிறான். அடுத்து மேற்கொள்ள வேண்டியனவற்றைத் தன் மாமனுடனும் நண்பர்களுடனும் ஆலோசனை செய்கிறான். இந்நிலையில் கட்டியங்காரன், கோவிந்தனுக்கு ஓலை ஒன்றினை அனுப்புகிறான். 'சச்சந்தனைத் தான் கொல்லவில்லை என்பதைக் கட்டியங்காரன் அவ்வோலையில் குறிப்பிட்டிருந்தான். கோவிந்தனை இராசமாபுரத்திற்கு வருமாறு ககட்டியங்காரன் ஓலை வாயிலாக அழைப்பு விடுக்கிறான். பின்னர் நால்வகைப் படைகளுடன் இராசமாபுரம் செல்கிறான். பின்னர் இலக்கணையின் திருமணம் குறித்து அனைத்து நாடுகளுக்கும் செய்தி அனுப்புகிறான். வில்லாற்றலில் சிறந்து விளங்குபவர்க்கே இலக்கணை உரியவள் என்பதைத் தெரிவிக்கிறான். மன்னர் பலர் வருகை தந்து தோல்வியடைகின்றனர். இறுதியில் சீவகன் அவ்விடத்தே தோன்றி, திரி பன்றியை அம்பினால் வீழ்த்துகிறான். இதனைக் கண்ட கட்டியங்காரன் திகைக்கின்றான். கோவிந்தன், சீவகனின் பிறப்பு இரகசியத்தை அங்குள்ள மன்னர்களுக்கு அறிவிக்கிறான். கட்டியங்காரன் சினந்து சீவகனுடன் போர்புரிகின்றான். கட்டியங்காரனின் படைவீரர்களும் படைத்தலைவர்களும், அவனது நூறு பிள்ளைகளும் போர்க்களத்தில் மடிகின்றனர். இறுதியில் கட்டியங்காரன் சீவகனால் கொல்லப்படுகிறான். மண்மகள்

மகிழ்வுறுகிறாள். விசயை, தன் மகன் செயலைக் கண்டு மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்தாள்.

**மகளிர் பாத்திரங்கள்**

மண்மகள் இலம்பகத்தில், இலக்கணை அறிமுகம் இடம்பெறுகிறது. கோவிந்தனின் மனைவி புதவி பற்றிய குறிப்பும் இவ்விலம்பகத்தில் இடம்பெற்றுள்ளது. கட்டியங்காரனின் உரிமை மகளிர் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளன.

**இலக்கணை**

இலக்கணை, பொற்கொடி போன்றவள், தாமரை மலர் போன்ற முகத்தையும் குவளை மலர்கள் போன்ற கண்களையும் உடையவள். என்பதை,

**“இலங்கொளி மணித்தொத் தீன்ற வேந்துபொற் கொடியொ டொப்பாள்”**[66]
**“தாமரைப் போதிற் பூத்த தண்ணறுங் குவளைப் பூப்போற்**
**காமரு முகத்திற் பூத்த கருமழைத் தடங்கண்”**[67]

எனத் திருத்தக்க தேவர் குறிப்பிடுவிதிலிருந்து அறியமுடிகிறது.

**புதவி**

புதவி என்பவள் கோவிந்தனின் மனைவி. சீதத்தனின் தாய் அருந்ததி என்ற விண்மீனும் தோற்கும் கற்பினை உடையவள் புதவி என்றும், அவள் வேலைப் பழித்த கண்களையும், சிவந்த வாயையும் உடையவள் என்பதை,

**“உலந்தநா வளவர்க்குத் தோன்றா தொளிக்குமீன் குளிக்குங் கற்பிற்**
**புலந்தவே னெடுங்கட் செவ்வாய்ப் புதவிநாட் பயந்த நம்பி**
**சிலம்புநீர்க் கடலந் தானைச் சீதத்தற் கரசு நாட்டிக்**
**குலந்தரு கொற்ற வேலான் கொடிநகர் காக்க வென்றளான்”**[68]

என்ற பாடலுணர்த்தும் கருத்திலிருந்து அறியலாம்.

**கட்டியங்காரனின் உரிமை மகளிர்**

கட்டியங்காரின் மனைவிமார்கள் பற்றிய குறிப்பு மண்மகள் இலம்பகத்தில்,

**“போக மகளிர் வலக்கண்க டுடித்த பொல்லாக் கனாக் கண்டார்”**[69]

என இடம்பெற்றுள்ளது. தேவிமார்களின் வலக்கண் துடித்தமை பாடலில் இடம்பெற்றுள்ளது.

**பூமகள் இலம்பகம்**

கட்டியங்காரனைப் போரில் வென்ற சீவகன் அரண்மனையை அடைகிறான். கட்டியங்காரனின் உரிமை மகளிர் தமது நாட்டை அடைகின்றனர். சீவகனின் வெற்றியைக் கண்ட சுதஞ்சணன், விண்ணிலிருந்து தன் தேவியருடன் இராசமாபுரம் வருகின்றான். சுதஞ்சணன் சீவகனுக்கு முடிசூட்டுகின்றான். நாட்டில் பல்வகைச் சீர்திருத்தங்களைச் சீவகன் மேற்கொள்கிறான். கட்டியங்காரணால் சிறைப்படுத்தப்பட்ட அனைவரையும் விடுதலை செய்கிறான். நாட்டில் நல்லாட்சியை நடத்துகிறான்.

**வாழ்த்து மகளிர்**

கட்டியங்காரனை வென்று, நகர் வந்த சீவகனை நகரமகளிர் மலர் தூவி வாழ்த்தி வரவேற்கின்றனர். மகளிர் மலர் பொழிந்தமையை,

**“நாகந் நெற்றிந் நன்மலர் சிந்தி நளிர்செம்பொன்**
**நாகந் நெற்றி மங்கைய ரொத்தார் மடநல்லார்”**[70]

எனும் பாடல்வழி காணமுடிகின்றது.

**கட்டியங்காரனின் உரிமை மகளிர்**

கட்டியங்காரன் கொல்லப்பட்டதற்குப் பின்னர் அவன் உரிமை மகளிர் குறித்து,

**“செய்யபாவை யன்னார் சிலம்பார்க்குமென் சீற டியார்**
**செய்பூந் தவிசின் மிசையல்லது சேற லில்லார்**

**மையார்ந்த கண்ணீர் மணிப்பூண்முலை பாய விம்மா**

**வெய்தா மடவார் வெறுவெந்நிலத் தேகி னாரே”**[71]

என்ற பாடல் வழி அறியமுடிகிறது. அழகிய மலரின் மேலன்றித் தரையில் நடந்தறியாத கட்டடியங்காரனின் உரிமை மகளிர், மைதீட்டப்பட்ட தம் கண்களிலிருந்து கண்ணீர் சிந்த வெறுந்தரையில் நடந்து சென்ற நிகழ்வினை இப்பாடல் எடுத்துரைக்கிறது. சிறு காலடிகளை உடையவரும், குழந்தைகளை உடையவரும், கருவுற்றவர்களும், கருப்பம் முற்றிய மகளிரும் அரண்மனை வாயிலில் வறிதே நின்றமையை,

**“செங்காற் குழவி தழீஇயினார் திங்கள் புக்க நீரார்**

**அங்கான் முலையி னரும்பால்வரப் பாயி னாரும்**

**பைங்காசு முத்தும் பவழத்தொடு பைம்பொ னார்ந்த**

**பொங்கார் முலையார் திருமுற்ற நிறைந்து புக்கார்”**[72]

என்ற பாடற்கருத்து உணர்த்துகிறது.

**இலக்கணையார் இலம்பகம்**

ஏமாங்கத நாட்டு அரசுரிமையை மீட்ட சீவகன், தான் மணந்த மனைவியருடன் மகிழ்ந்திருந்தான். கோவிந்தன், தன் மகள் இலக்கணையைச் சீவகனுக்கு மணம் செய்வித்தான். அருகப் பெருமான் கோயில் வழிபாடுகளுக்கு வேண்டியனவற்றைச் சீவகன் செய்கிறான். தன் வளர்ப்புத் தந்தை கந்துக்கடனுக்கு அரசுரிமையையும், சுநந்தைக்குத் தேவிப் பட்டத்தையும் அளிக்கிறான். நந்தட்டனை இளவரசனாக்குகிறான். தோழர்கள் அனைவருக்கும் பல்வகைச் சிறப்புகளைச் செய்கிறான். செவிலித்தாயாரையும் போற்றுகிறான். சுதஞ்சணனுக்குக் கோயில் எழுப்பி, அவன் வரலாற்றை நாடகமாக நாடு முழுவதும் நடத்தினான். சீவகன் ஆட்சியில் நாட்டில் நல்லறம் நிலவியது. மக்கள் மகிழ்வுடன் வாழ்ந்து வந்தனர்.

## மகளிர் பாத்திரங்கள்

இலக்கணையார் இலம்பகத்தில் இடம்பெறக்கூடிய மகளிர் பாத்திரங்களாவன, இலக்கணை, நந்தட்டன் மனைவியர், செவிலித்தாயார், வாமலேகை, அநங்கமாலை என்னும் தேசிகப்பாவை ஆகியோராவர்.

## இலக்கணை

கோவிந்தனின் மகள் இலக்கணை. அவள், பாற்கடலில் தோன்றிய பவளக்கொடி போன்றவள். சுடர்விட்டுத் திகழும் அழகிய மாலையை அணிந்தவள். பொற்றாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளுக்கு நிகரான அழகுடையவள் எனச் சிறப்பிக்கப்படுகிறாள். இதனை,

**''பாற்கடன் முளைத்ததோர் பவளப் பூங்கொடி**
**போற்சுடர்ந் திலங்கொளிப் பொன்செய் கோதையை**
**நாட்கடி மயிர்வினை நன்பொற் றாமரைப்**
**பூக்கடி கோயிலாள் புலம்ப வாக்கினார்''**[73]

எனும் பாடல் வாயிலாக அறியமுடிகிறது.

## இலக்கணை தோழிமார்

இலக்கணைக்கு ஒப்பனை செய்த மகளிருள் விலாசி, அலங்கார மாலை என்ற இருவர் குறிப்பிடத்தக்கவர். இவ்விரு மகளிர் பெயர்கள் பாடலில் இடம்பெற்றுள்ளது. இனிய மொழியுடைய இலக்கணைக்கு, விலாசியும் அலங்காரமாலையும் செய்த ஒப்பனை குறித்து,

**"அவ்வளை யவிராழிக் கால்பொலிந் தழகார்ந்த**
**மைவிளை கழுநீர்க்கண் விலாசியு மணியல்குற்**
**கைவளை யலங்கார மாலையுங் கமழ்கோதை**
**நைவள மிகுசாய னங்கையைப் புனைகின்றார்''**[74]

என்ற பாடல் வாயிலாக அறியமுடிகிறது.

**நந்தட்டன் மனைவியர்**

சீவகன் தன் தம்பியாகிய நந்தட்டனை நாட்டின் இளவரசனாக்கி, அவனுக்கு மன்னர் மகளிரை மணம் செய்து வைத்தமையை,

**"இனக்களி யானை மன்னர் இளவுடை யானென் றேத்தத்**
**தனக்கிளை யானை நாட்டித்தான் தனக்கென்று கூறி**
**சினக்களி யானை மன்னர் மகளிரைச் சேர்த்தி நம்பன்**
**மனக்கின துறைக என்ற வளங்கெழு நாடும் ஈந்தான்"**[75]

எனும் பாடல் குறிப்பிடுகிறது.

**செவிலித்தாயர்**

சீவகனை வளர்த்த செவிலித்தாயர்க்கு அவன் செய்த சிறப்புகளை இலக்கணையார் இலம்பகத்தில் காணமுடிகறிது.

**"வளர்த்தகைத் தாயர் தம்மை வருகென வருளித்**
**தங்கள் கிளைக்கெலாஞ் சிறப்புச் செய்து கேட்டவர் மருள வைந்தூர்**
**விளைத்துள கெடாத வைக லாயிர மிறுப்புத் தண்டக்**
**கொளக்கொடுத் தயாவு யிர்த்தான் கொற்றவ னென்ப வன்றே"**[76]

தன்னை வளர்த்த செவிலித்தாயர்க்கு நாளொன்றுக்கு ஆயிரம் பொன், இறுப்புத் தண்டலாகக் கொள்ளும்படியான ஐந்து ஊர்களைக் கொடுத்தமையை இப்பாடற்கருத்து உணர்த்துகிறது.

**வாமலேகை**

கட்டியங்காரனிடம் ஓலையேந்தி வந்து நிற்கும் வாமலேகையின் நிலைகண்டு, அவளின் மனம் வருந்தாதவாறு மறுமொழி அருளவேண்டும் என்கின்ற போது, வாமலேகை குறித்தான பதிவு இடம்பெற்றுள்ளது. இதனை,

**"அறனி ழாய் உலகளிக்கும் நின்**
**ஆர மாலை யணிவெண்குடைப்**
**புறனி ழலின் அயலெனோயான்**
**புல்லா மன்னர் நிணம்பொழியும்வேல்**

**மறனி மூல் மதயானையாய்**

**வந்த என் தோழி வாலேகை" (சீவக, பா.2590)**

என்ற பாடல் மூலம் வாமலேகையை பற்றி அறியமுடிகிறது.

## அநங்கமாலை என்னும் தேசிகப்பாவை

சினத்தால் குமுறும் யானையின் நெற்றியில் கட்டிய பட்டத்தைப் போல, அல்குல் மேலணிந்த மேகலையில் மணிகள் கிடந்து ஒளி வீச, காமத்தை உண்டாக்கும் வழிகள் பலவற்றையும் ஆராயும், மணம் கமழ் மாலையையும் மென்மையான சாயலையும் உடைய தேசிகப்பாவையான அநங்கமாலையின் கூற்றில் சீவகனுக்குக் காதல் பிறக்கும், என்பதிலிருந்து, அநங்கமாலையின் இயல்பினை அறியமுடிகிறது. இதனை,

**"கதங்கனல் யானை நெற்றிக் கட்டியப ட்டமேபோல்**
**மதங்கமழ் கோதை யல்குல் மனாக்கிடந் திமைத்துக் காமப்**
**பதம்பல பார்க்கும் சாயல் பாவைமற நநங்க மாலை**
**விதம்படக் கருதி மாதர் விளைத்தது விளம்ப லுற்றேன்." (சீவக, பா.2584)**

என்ற பாடல் மூலம் அநங்கமாலை என்னும் தேசிகப்பாவையின் இயல்பினைப் பார்க்கமுடிகின்றது.

## முத்தி இலம்பகம்

விசயை, தன்னுடன் தவப்பள்ளியில் தவம் செய்த மகளிர் அனைவருக்கும் தன் புண்ணியத்தைத் தானமாக அளித்தாள். அருகப்பெருமானுக்குக் கோயில் எழுப்பிப் பல்வகை வழிபாடுகளைச் செய்தாள். சீவகனை ஈன்ற சுடுகாட்டை அறச்சாலையாக்கினாள். சீவகன் மணந்த மகளிரை அன்புடன் போற்றினாள். பின்னர்ச் சீவகனுக்கு நல்லுரை பகர்ந்து துறவு கொள்ள விரும்பி, பம்மையிடம் அறவுவரை கேட்டு துறவை மேற்கொள்கிறாள். அவளுடன் சுநந்தையும் துறவு கொள்கிறாள். சீவகன் மனைவியருடன் இன்புற்றிருந்தான். அவர்கள் எண்மரும் புதல்வர்களைப் பெறுகின்றனர்.

தனது நாற்பத்து ஐந்தாம் வயதில் சீவகன் தன் மனைவியருடன் சோலை ஒன்றிற்குச் சென்றான். அங்கு ஓர் ஆண் குரங்கு, தன் பெண்குரங்கிற்குப் பலாச் சுளைகளைக் கொடுத்துக் கொண்டிருந்தது. அங்கு வந்த வேடுவன் ஒருவன், குரங்குகளை விரட்டி அப்பலாச் சுளைகளை உண்டான். இதனைக் கணட சீவன் உலக வாழ்க்கையின் நிலையற்ற தன்மையை உணர்கிறான். கைப்பழம் இழந்த மந்தி, கட்டியங்காரனையும், வேடுவன் தன்னையும் ஒத்ததை உணர்கிறான். செல்வமானது எளியாரிடமிருந்து வலியார் கைக்கு மாற்றம் பெறுவதை உணர்ந்து, உலக வாழ்க்கைப் பற்றை விடுத்தான். அருகப் பெருமான் கோயிலை வலம் வந்தான். அங்கிருந்த சாரணர்களிடம் நல்லறங்களைக் கேட்டுப் பெறுகிறான். அவர் வாயிலாகத் தன் பழம்பிறப்பு வரலாற்றை உணர்கிறான். பின்னர் அரண்மனை அடைந்த சீவகன், தன் துறவு உள்ளத்தை அனைவரிடமும் எடுத்துரைக்கிறான். சீவகனின் மனைவியரும் துறவு கொள்ள விரும்பும் தம் உள்ளக்கிடக்கையை எடுத்துரைக்கின்றனர். அவர்களைத் தன் தாய் விசயையிடம் ஒப்படைக்கிறான் சீவகன். பின்னர் கடுந்தவம் இயற்றி முத்தி அடைந்தான். சீவகனின் தேவியரும், தோழர்களும் தவம் புரிந்து தேவர் உலகை அடைந்தனர்.

**மகளிர் பாத்திரங்கள்**

சீவகசிந்தாமணியின் முதல் பன்னிரண்டு இலம்பகங்களில் இடம்பெற்றுள்ள மகளிர் பாத்திரங்களான விசயை, சுநந்தை, காந்தருவதத்தை, குணமாலை, பதுமை, கேமசரி, கனகமாலை, விமலை, சுரமஞ்சரி ஆகியோர் முத்தி இலம்பகத்திலும் இடம்பெறுகின்றனர். இம்மகளிர் பாத்திரங்கள் நீங்கலாக இலம்பகத்தில் இடம்பெற்றுள்ள பிற மகளிர் பாத்திரங்களான பம்மை, ஔவைமார், நீர்விளையாடல் மகளிர், மல்லிகை மாலை, சயமதி, அசோதரன் மனைவியர் ஆகியோர் குறித்த செய்திகள் மட்டும் விளக்கப்படுகின்றன.

**பம்மை**

இராசமாபுரத் தவப்பள்ளியின் தவச்செல்வியாகத் திகழ்ந்தவள் பம்மை. விசயை, சுநந்தை ஆகிய இருவருக்கும், துறவை விரும்பிய ஆயிரம் மகளிர்க்கும் சமண அறங்களைப் போதிக்கும் பெண் அறிமுகம்,

**“பழுதில்சீர்ப் பம்மைதன் பள்ளி நண்ணினாள்”**[77]

என இடம்பெற்றுள்ளது. “பம்மை என்றது, பிறப்பாகிய இருளைப் போக்கி வீடாகிய ஒளியைப் பரப்புதற்கு உரியவளென்றவாறு”[78] எனப் பம்மை என்ற பெயர்க்குரிய விளக்கத்தை நச்சினார்க்கினியர் அளிக்கிறார்.

**ஔவைமார்**

பம்மை தவப்பள்ளியில் இருந்த தவமகளிர், ‘ஔவைமார்’ எனப்பட்டனர். விசயை, சுநந்தை உள்ளிட்ட மகளிர் அனைவருக்கும் உரிய சமண சமயச் சடங்குகளைச் செய்த இம்மகளிர் குறித்து,

**“அணியிருங் கூந்தலை யௌவை மார்கடாம்**
**பணிவிலர் பறித்தனர்”**[79]

எனும் பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது.

**நீர் விளைாடல் மகளிர்**

பம்மையின் தவப்பள்ளியிலிருந்து திரும்பிய சீவகனை, மனத்துன்பத்திலிருந்து மாற்ற முயன்ற இளம் மகளிர் பலர் அவனை நீர் விளையாட்டில் ஈடுபடுத்தி மகிழ்வுறச் செய்கின்றனர். நீர்விளைாட்டில் சீவகனுடன் மகிழ்ந்த மகளிர் குறித்து,

**“வீக்கினான் தாரை வெய்தாச் சந்தனத் தளிர்நன் மாலை**
**ஓக்கினார் கண்ணி சுண்ணம் உடற்றினார் உருவச் சாந்திற்**
**பூக்கமழ் துகிலுந் தோடும் மாலையுஞ் சொரியப் போர்தோற்று**
**ஆக்கிய அநங்கன் சேனை ஆறலாறாயிற் றன்றே”**[80]

என்ற பாடல் வாயிலாக அறியமுடிகிறது.

**மல்லிகை மாலை**

சீவகனும் அவன் மனைவியரும் சோலைக்கு வந்து அங்குள்ள இன்பங்களை நுகர வேண்டும் என்று 'மல்லிகை மாலை' என்பவள் அறிவுறுத்துகிறாள். இதனை,

**"பூநிறை செய்த செம்பொற் கோடிகம் புரையு மல்குல்**
**வீநிறை கொடிய னாரும் வேந்தனு மிருந்த போழ்தில்**
**தூநிறத் துகிலின் வுடிப் படலிகை கொண்டு வாழ்த்தி**
**மாநிறத் தளிர்நன் மேனி மல்லிகை மாலை சொன்னாள்"**[81]

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

**சயமதி**

சீவகனின் முற்பிறவி வரலாற்றை எடுத்துரைக்கும் சாரணர் கூற்றில் சில மகளிர் பாத்திரங்கள் இடம்பெற்றுள்ளன. 'தாதகீ' நாட்டு மன்னன் பவணமாதேவனின் மனைவி சயமதி. இவ்விருவரின் மைந்தன் அசோதரன். 'சங்கினுள் வீற்றிருக்கும் முத்தைப் போன்றவள் சயமதி' என்பதைத் திருத்தக்க தேவர்,

**"சங்கினுள் முத்தம் ஒப்பாள் சயமதி"**[82]

எனக் குறிப்பிடுகிறார்.

**அசோதரன் மனைவியர்**

அசோதரனுக்கு பவணமாதேவனும், சயமதியும் மகளிர் பலரைத் திருமணம் செய்து வைத்தமையை,

**"ஐங்கணைக் காமன் அன்னான் அசோதரன் அரசசீயம்**
**தங்கிய கேள்வி யாற்குத் தையலார்ச் சேர்த்தினாரே"**[83]

என்னும் பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது. தன் மனைவியருடன் அசோதரன் புணர்ச்சியின்பத்தில் மகிழ்ந்திருந்தமையை,

**"இளமுலை பொருது தேந்தா தெழில்குழழைந் தழிய வைகிக்**
**கிளைநரம் பிசையுங் கூத்துங் கிளர்ந்தவை கனற்ற நாளும்**
**வளைமயங் குருவ மென்றோள் வாய்நலம் பருகி மைந்தன்**
**விளைமதுத் தேறன் மாந்தி வெற்றிப்போ ரநங்க னானான்"**[84]

என்ற பாடல் விளக்குகிறது. இம்மனைவியர் விரும்ப அசோதரன் அன்னக் குஞ்சுகளை அதன் தாயிடம் இருந்து பிரித்துத் தருகிறான். மனைவியர் விருப்பத்திற்கு ஏற்ப அசோதரன் அவ்அன்னப்பார்ப்பைத் தருகிறான். இத்துடன் பாத்திரைப்படைப்பு பற்றிய விளக்கம் நிறைவடைகிறது.

**பாத்திரைப்படைப்பு நெறி**

பாத்திரைப் படைப்பு நெறி என்பது ‘‘காப்பியப் படைப்பில் பாத்திரங்களுக்குத் தனியிடம் உண்டு. பல்வேறுபட்ட பாத்திரங்களைப் படைத்து. அவற்றைச் செவ்வனே உலவவிடுதல் காப்பிய வெற்றிக்குப் பெருந்துணை செய்யும்’’[85] என்ற கருத்துப்படி இக்காப்பியம் பாத்திரைப்படைப்பில் சிறந்து விளங்குகிறது. அத்தோடு பாத்திரைப்படைப்பில் ஒரு படைப்பு நெறிமுறை பின்பற்றப்பட்டு காப்பியம் தெளிவாக அமைந்துள்ளது.

சீவகன் மணந்து கொண்ட எட்டுப் பெண்களில் காதல் மகளிரின் சிறப்பை காப்பிய ஆசிரியர் சிறந்த முறையில் படைத்துள்ளார். அவர்கள் தன்னிகர் அற்ற தலைவனான சீவகனுக்கு ஈடாகும் பண்பை விளங்கும் சிறப்பினைக் கவிஞர் தெளிவுறப் படைத்துள்ளார்.

பின்னர் அத்தலைமை மகளிரும் உதவிபுரியும், துணைபுரியும் மற்ற பாத்திரங்களை அவர்களுக்குரிய முறையில் வேறுவகையில் விளக்கிப் பேசுகிறார். இவ்விரு வகை வேறுபாடு பாத்திரைப்படைப்பில் நன்னெறியாக பின்பற்றப்பட்டுள்ளதை மேற்கண்ட வரிகள் புலப்படுத்தி நிற்கின்றது.

**தொகுப்புரை**

தமிழ் இலக்கிய வரலாற்றில் பன்முகத் தன்மை கொண்ட இலக்கிய வகைகள் தோன்றியுள்ளன. தோற்றம் பெற்றுக் கொண்டும் இருக்கின்றன.

தமிழ் இலக்கியத் தோட்டத்தில் தோற்றம் பெற்ற முதல் விருத்தக் காப்பியமாக சீவகசிந்தாமணி அமைந்துள்ளது.

சீவகசிந்தாமணி சமணசமயக் கொள்கைகளைப் பரப்பும் விதமாக அமைந்துள்ளதை அறியமுடிகின்து.

சீவகசிந்தாமணி காப்பியம் ஆதித்தமிழர்களின் அகவாழ்க்கை, வீரம், பண்பாடு, சமய ஒழுக்க நெறிகள், பழக்கவழக்கங்கள், அணிகலன்கள் ஆகியன குறித்து விரிவாக பதிவுசெய்துள்ளது.

அரசகுமாரன் சீவகன் தனது திறனாலும், பன்முகச் சிந்தனையாலும் எண்வகை மகளிரை மணமுடிக்கும் வகையில் அமைந்துள்ளதாக சீவசிந்தாமணி காப்பியம் அமைந்துள்ளது.

சீவகசிந்தமணியில் 13 இலம்பகங்கள் என்னும் கதைக்கட்டமைப்பு அமையப்பெற்றுள்ளது. இத்தகைய இலம்பகங்கள் சீவகனின் பிறப்பு, முதல் வாழ்வின் உண்மை நிலையை அடைவது வரையிலான பல்வேறு செய்திகள் பதிவாக்கம் பெற்றுள்ளன.

ஒவ்வொரு இலம்பகங்களிலும், பல்வேறு மகளிர்களின் தனித்தன்மைகள், பண்புநலன்கள், குணநலன்கள், திறன்கள், மற்றும் அவர்கள் மேற்கொண்ட ஒப்பனைகள், ஆடை அணிகலன்கள் எனப் பல்வேறு பதிவுகள் இடம்பெற்றுள்ளதை இவ்வியலில் காணமுடிகின்றது.

# சான்றெண் விளக்கம்

1. டி..எஸ். ஸ்ரீபால், தமிழகத்தில் ஜைனம், ப.88
2. மேலது, ப.66
3. சு.திருஞானசம்பந்தம், (உ.ஆ), தண்டியலங்காரம், ப.7
4. மேலது.
5. உ.வே.சாமிநாதையர், (ப.ஆ.), சீவகசிந்தாமணி, ப.6
6. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.192
7. நச்சினார்க்கினியர், (உ.ஆ.), சீவகசிந்தாமணி, ப.9
8. சீவகசிந்தாமணி, பா.7:4
9. மேலது, பா.8
10. மேலது, பா.182:3-4
11. நச்சினார்க்கினியர்.(உ.ஆ.), மு.நூ ப.97
12. மேலது, பா.185
13. மேலது, பா.198:2
14. மேலது, பா.314
15. மேலது, பா.360:1
16. மேலது, பா.361:2
17. மேலது, பா.368:2
18. மேலது, பா.401:1
19. மேலது, பா.408
20. மேலது, பா.207
21. மேலது, பா.211
22. மேலது, பா.477

23. மேலது, ப.275

24. மேலது, பா.479

25. மேலது, பா. 480

26. மேலது, பா.494:1

27. மேலது, பா. 586

28. மேலது, பா.537

29. மேலது, பா. 538

30. மேலது, பா.550

31. மேலது, பா. 618

32. மேலது, பா.668

33. மேலது, பா.693

34. மேலது, பா.873:2-3

35. மேலது, பா.874:1-2

36. மேலது, பா.874:3

37. மேலது, பா.875:1-2

38. மேலது, பா.898:3-4

39. மேலது, பா.875:3-4

40. மேலது, பா. 975:2-4

41. மேலது, பா.888

42. மேலது, பா.900

43. மேலது, பா.987:3

44. மேலது, பா.1053:1

45. மேலது, பா.1171.

46. மேலது, பா.1253:3-4
47. மேலது, பா.1254
48. மேலது, பா.1267:3-4
49. மேலது, பா.1455:4
50. மேலது, பா.1475
51. மேலது, பா.1535:23-4
52. மேலது, பா.1537:1-2
53. மேலது, பா.1450
54. மேலது, பா.1654:3-4
55. மேலது, பா.1658
56. மேலது, பா.1686.
57. மேலது, பா.1567
58. மேலது, பா.1580
59. மேலது, பா.1668
60. மேலது, பா.1951
61. மேலது, பா.1959:4
62. மேலது, பா.1975:3-4
63. மேலது, பா.2000
64. மேலது, பா.2001:1
65. மேலது, பா.2015:3-4
66. மேலது, பா.1232:4
67. மேலது, பா.1233:1-2
68. மேலது, பா.1241

69. மேலது, பா.2173:1

70. மேலது, பா.2330:2-3

71. மேலது, பா.2338

72. மேலது, பா.2341

73. மேலது, பா.2413

74. மேலது, பா.2435

75. மேலது, பா.2468

76. மேலது,பா..2570

77. மேலது, பா. 2630:4

78. நச்சினார்க்கினியர, (உ.ஆ.), மு.நூ., பா.1296

79. மேலது, பா. 2637:2-3

80. மேலது, பா. 2661

81. மேலது, பா.2707

82. மேலது, பா.2856:2

83. மேலது, பா. 2856:3-4

84. மேலது, பா. 2857

85. இரா.காசிராஜன், (க.ஆ.), ‘அடியார்க்குநல்லார்’ தமிழ் இலக்கியக் கொள்கை, ப.71

# இயல் -2

# சமூக வாழ்வும் மகளிரும்

சமூகம் என்பது மக்கள் கூட்டமாகச் சேர்ந்து வாழும் திரள் அமைப்பாகும். ஆணும் பெண்ணும் கூடிவாழும் குடும்ப அமைப்பினை சமூகம் எனலாம். இத்தகைய சமூகக் கட்டமைப்பில் திருத்தக்க தேவர், தான் வாழ்ந்த காலத்தியச் சமூக நிலையைக் காப்பியத்தின் பல்வேறு இடங்களில் விளக்கிக் காட்டியுள்ளார். அரசகுல மகளிர் மட்டுமின்றிச் சமூகத்தின் பல்வேறு நிலையைச் சார்ந்த மகளிர் பற்றிய செய்திகளைச் சீவக சிந்தாமணியில் அறியமுடிகிறது. மகளிர் ஆற்றிய பணிகள், விளையாட்டுகள், கலைகள், வாழ்வியல் முறைகள், பழக்கவழக்கங்கள், பண்பாடு, ஆகியன குறித்த செய்திகள் இவ்வியலில் விளக்கப்படுகின்றன.

**மகளிர் பணிகள்**

தாய்வழிச் சமூக அமைப்பில் தனித்துவமாக விளங்கிய மகளிர், தந்தைவழிச் சமூக அமைப்பிலும், சமூக வாழ்வில் ஆடவர்க்கு உறுதுணையாகப் பல்வேறு பணிகளை மகளிர் செய்துள்ளனர். அந்தவகையில், மகளிர் செய்த பணிகளாக உழவாரப் பணிகள் முதல் அரண்மனைப் பணிகள் வரை எனப் பல பணிகளை மகளிர் செய்துள்ளனர். இவை குறித்துப் பின்வருமாறு விளக்கலாம்.

**உழவாரப் பணிகள்**

உழவுத் தொழிலில் ஆடவருடன் மகளிர் ஈடுபட்டமையைத் திருத்தக்க தேவர் எடுத்துக்காட்டியுள்ளார். நாமகள் இலம்பகத்தில் ஏமாங்கத நாட்டின் வளத்தை எடுத்துரைக்கும் திருத்தக்க தேவர், அந்நகரில் மகளிர் ஆற்றும் உழவாரப் பணிகள் குறித்துக் குறிப்பிட்டுள்ளார். உழவுத் தொழிலில் ஈடுபட்ட மகளிர் ‘கடைசியர்’ என அழைக்கப்பட்டுள்ளனர்.

சமூக வாழ்வில் மகளிர் ஆடவர்க்கு உறுதுணையாக இருந்துள்ளனர். நடவுப் பணிகளுக்கான மகளிரை நடவிற்கு முந்தைய நாளே அமர்த்திக் கொள்ளும் வழக்கம் குறித்துச் சீவகசிந்தாமணியின் வாயிலாக அறியமுடிகிறது. உழவர்கள், நிலமகளைத் தொழுத பின்னர் மகளிர் கூட்டத்தைக் கொண்டு தம் வயல்களில் நாற்று நட்டமையை,

**"சேறமை செறுவினுட் செந்நெல் வாள்முளை**
**வீறொடு விளைகெனத் தொழுது வித்துவார்**
**நாறிது பதமெனப் பறித்து நாட்செய்வார்**
**கூறிய கடைசியர் குழாங்கொண் டேகுவார்"**[1]

என்ற பாடற்கருத்து விளக்குகிறது. நாற்றங்காலிலிருந்து நாற்றினைக் கொய்வதற்கு உரிய காலத்தினை மகளிர் அறிந்துள்ளனர். நடவுமகளிர் தம் மார்பினில் சேறு தெளிக்க, நாற்று முடிகளைப் பிரித்து நடவு செய்தமையை,

**"முலைத்தடஞ் சேதகம் பொறிப்ப மற்றவர்**
**குலைத்துடன் பதித்தலிற் குதித்த வாட்கயல்**
**புலத்திடைக் கவரிகன் றூட்டப் போந்தபால்**
**நிலத்திடைப் பாய்நதவை பிறழு நீரவே"**[2]

என்ற பாடல்வழியாக அறியலாம். உழவாரப் பணிகளின் போது மகளிர் ஆரவார ஒலி எழுப்பி நாற்றுக்களை நடவு செய்தனர் என்பதை,

**"வளமுடி நடுபவர் வரம்பில் கம்பலை**
**இளமழை முழக்கென மஞ்ஞை யேங்கலின்"**[3]

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. இவ்வாறு நடவு செய்த மகளிர் தம் வளைக்கரங்களால் உழவர்களுக்கு மதுவினை அளித்துள்ளனர். இதனை,

**"வளைக்கையாற் கடைசியர் மட்டு வாக்கலிற்**
**திளைத்தவர் பருகிய தேறல்"**[4]

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. ஆடவர்க்கு மகளிரே மதுவினை அளித்துள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. அந்தவகையில், மது என்பது அன்றைய

காலத்தில், உடல் உழைப்பிற்கு ஏற்றதொரு மருந்தாகப் பயன்படுத்தப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

அறுவடைக்குப் பின்னர் நெல் மணிகளை மகளிர் தெருக்களில் உலர வைத்துக் காவல் புரிந்தமையை,

**"பொற்சிறு தேர்மிசைப் பைம்பொற் போதகம்**
**நற்சிறா ரூர்தலி னங்கை மார்விரீஇ**
**உற்றவர் கோழிமே லெறிந்த வொண்குழை**
**மற்றத்தே ருருள்கொடா வளமை சான்றவே"**[5]

எனும் பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது. நெற்காவலில் ஈடுபட்டிருந்த பெண்கள் அதனைக் கவர வந்த கோழிமேல் தங்கள் காதுகளில் கிடந்த குழைகளைக் கழற்றி எறிந்தமையால், அக்குழைகள் சிறுவர்கள் உருட்டி விளையாடும் சிறுதேர்களுக்கு இடையூறாக இருந்தமையை இப்பாடல் உணர்த்துகிறது. மேலும் இதே கருத்தை அடியொற்றியே,

**"நேரிழை மகளி ருணங்குணாக் கவரும்**
**கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை**
**பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டும்**
**முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்"**[6]

என்ற பட்டினப்பாலையாசிரியரின் கருத்துடன் ஒன்றுபடுகிறது. பண்டைத் தமிழ் மகளிரின் செல்வ நிலையை இப்பாடல் எடுத்துரைத்த போதிலும் நெற்காவல் தொழிலில் மகளிர் ஈடுபட்டமையையும் உணர்த்துகிறது.

## மகளிரின் இல்லறப் பணிகள்

மகளிர் தமது இல்லங்களில் ஆற்றுகின்ற பல்வேறு பணிகள் குறித்த குறிப்புகள் சீவக சிந்தாமணியில் இடம்பெற்றுள்ளன. பால்கறத்தல், தயிர்கடைதல், சுண்ணப்பொடி இடித்தல் ஆகிய பணிகளை மகளிர் ஆற்றியுள்ளனர். இவை குறித்துப் பின்வருமாறு விளக்கலாம்.

**பால் கறத்தல்**

மகளிர் தம் இல்லங்களில் இருந்த எருமை மாடுகளிலிருந்து பால் கறக்கும் செயலினைச் செய்துள்ளனர். அவ்வாறு பால் கறக்கும் போது கன்றுகளைப் பால்குடிக்கச் செய்து எஞ்சிய பாலைக் கறந்த செய்தியை,

**“கன்ற ருத்தி மங்கையர் கலம்நிறை பொழிதர**
**நின்றமேதியாற் பொலிந்த நீர மாட மலையே”**[7]

என்ற பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது. கன்றுகளை வஞ்சித்துப் பாலருந்தும் வழக்கத்தினை அன்றைய சமூகத்தினர் கொண்டிருக்கவில்லை என்பதை இப்பாடலடிகள் புலப்படுத்துகின்றன. “அந்நாட்டில், ‘கன்றுயிர் ஓய்ந்துகக் கறந்துபாலுண்ணும் கொடுமை யில்லை என்பார், “கன்றருந்தி மேதி கலம்நிறை பொழிதரும் என்றார்.” இக்கருத்தினைக் “கறவை கன்றார்த்திக் கலநிறைபொழியும்” எனவரும் மணிமேகலையில் காணமுடிகிறது. (மணி 12:93.) இவ்வகையில், ஆயர்குலத்தைச் சேர்ந்த மகளிரின் தோற்றம் அவர்தம் செயல் வாயிலாகப் புலப்படுத்தப்பட்டுள்ளது. ஆயர் குல மகளிர் தம் இளம் தோள் முழுவதிலும் தயிர்ப்புள்ளிகள் தெறித்துவிழத் தயிர் கடைந்தமையை,

**“மத்தம் புல்லிய கயிற்றின் மற்றவர்**
**அத்த லைவிடி னித்த லைவிடார்**
**உய்த்த னரென வடைத யிர்ப்புளி**
**மொய்த்த தோணலார் முழுது மீண்டினார”**[8]

என்ற பாடல் வழியாக அறியமுடிகிறது.

**மகளிர் சுண்ணம் இடித்தல்**

சுண்ணம் என்பது ஒருவகையான நறுமணம் தருகின்ற நறுமணப் பொடியாகும். இதனை மகளிர் தம் மேனியில் நறுமணம் தருவதற்காக பூசிக்கொள்ளும் பொடி சுண்ணப்பொடியாகும். இச்சுண்ணத்தை உருவாக்குவதில் மகளிர் வல்லவர்களாய்

இருந்தனர். பல்வகைத் தாதுக்களாலான சுண்ணத்தினை மகளிர் உரலில் வைத்து இடித்த செயலை,

**“நலத்தகு நானநின் றிடிக்கு நல்லவர்**
**உலக்கையா லுதிர்ந்தன தெங்கி னொண்பழம்**
**நிலத்தவை சொரிதலின் வெரீஇய மஞ்ஞைபோய்க்**
**கலத்துயர் கூம்பின்மே லாடுங் கௌவைத்தே”**[9]

என்ற பாடல் வாயிலாக அறியமுடிகிறது.

**அவல் இடித்தல்**

பச்சை நெல்லை ஊறவைத்து இடித்து உருவாக்கப்படுவது அவல் என்னும் ஒருவகையான தின்பண்டம் ஆகும். இதனை ‘வாசவல்’ என்ற பெயராலும் அழைப்பர். மகளிர் தம் இல்லங்களில் அவலை உருவாக்கியமையை,

**“பாசவல் லிடிப்பவ ருலக்கை வாழைப் பல்பழம்**
**ஆசினி வருக்கை மாதடிந்து தேங்கனி யுதிர்த்**
**தூசலாடு பைங்கமுகு தெங்கி னொண்பழம் பரீஇ**
**வாசத் தாழை சண்பகத்தின் வான்மலர்க ணக்குமே”**[10]

என்ற பாடற்கருத்து புலப்படுத்துகிறது. மகளிர் அவலிடிக்கும் செயல் இப்பாடலில் உயர்வு நவிற்சியாகக் கூறப்பட்டிருப்பினும், இத்தகைய தொழிலை மகளிர் மேற்கொண்டமையை இப்பாடற்கருத்து விளக்குகிறது.

யானைத் தந்தத்தாலான உலக்கையால் குறிஞ்சி நில மகளிர் அவல் இடித்தமை பற்றிய குறிப்பு,

**“யானை வெண்மருப் புலக்கை யறையுர லைவன மிடித்த**
**தேனெய் வாசவற் குவவித் தீங்கனி வாழையின் பழனும்**
**ஊனை யுண்டவ ருருகும் பசுந்தினைப் பிண்டியு மொருங்கே**
**மானி னோக்கியர் நோக்கி வழிதொறு மீதவ் வழியே”**[11]

என்ற பாடலில் இடம்பெற்றுள்ளது. ஐவன நெல்லால் உருவாக்கப்பட்ட அவல், ‘வாசவல்’ என்ற பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

**முத்துக் கோர்த்தல்**

நெய்தல் நிலை மகளிர் நுளைச்சியர் எனப்படுவர். கடலில் கிடைத்த முத்துக்களால் ஆன மாலைகளைத் தொடுப்பதில் இம்மகளிர் வல்லவராய் இருந்துள்ளனர்.

**"கோற்றொடி நுளைச்சியர் முத்தங் கோப்பவ**
**ரேற்றிய மாலைத்தே னிரியப் பாய்ந்தவே"**[12]

முத்துக் கோர்க்கும் நுளைச்சியர் அணிந்திருந்த மாலையில் வண்டினங்கள் சூழ்ந்தமையை இப்பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

**சமையல் மகளிர்**

பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் செல்வந்தர் இல்லங்களில் சமையல் தொழிலுக்கென மகளிர் இருந்துள்ளனர். சமைத்த உணவினை விருந்தினருக்குப் பரிமாறும் பணியினையும் மகளிர் செய்துள்ளனர். சீவகனின் வளர்ப்புத் தந்தையான கந்துக்கடனின் இல்லத்தில் இருந்த சமையல் தொழில் மகளிர் குறித்து,

**"படையிரு குழையு மின்னப் பூந்துகில் செறிந்த வல்குல்**
**நடையறி மகளி ரேத்த நல்லமிர் துண்ணும் போழ்தின்**
**இடைகழி நின்ற வென்னை நோக்கிப்போந் தேறு கென்றான்**
**கடலகெழு பருதியன்ன பொற்கலத் தெனக்கு மிட்டார்"**[13]

எனும் பாடல் வாயிலாக அறியமுடிகிறது.

விமலையின் தந்தையான சாகரதத்தன் இல்லத்தில் சமையல் செய்வதற்காகப் பணிமகளிர் இருந்துள்ளனர். அவர்கள் சீவகனுக்கு அறுசுவை உணவு படைத்தமையை,

**"நறைவிரி கோதையர் நாம வேலினாற்**
**கறுசுவை நால்வகை யமுத மாக்கினார்"**[14]

எனும் பாடலடிகள் விளக்குகின்றன. செல்வ நிலையில் மேலோங்கி இருந்த மகளிர் இல்லங்களில் இருந்த பணிமகளிர் பற்றிய குறிப்பு,

**“செம்பொன் கண்ணி சிறார்களைத் திட்டவும்**
**அம்பொன் மாலை யவிழ்ந்துடன் வீழந்தவும்**
**தம்பொன் மேனி திமிர்ந்ததண் சாந்தமும்**
**வம்புண் கோதையர் மாற்று மயலரோ”**[15]

என்ற பாடலிலும் இடம்பெற்றுள்ளது.

போர் நிகழ்வுகளில் படையினர்க்கு மகளிர் உணவு சமைத்த பணியினை மேற்கொண்டமையைச் சீவக சிந்தாமணி வாயிலாக அறியமுடிகிறது.

**“நறைவிரி கோதையர் நாம வேலினாற்**
**கறுசுவை நால்வகை யமுத மாக்கினார்”**[16]

போர்நிமித்தமாகப் படைவீட்டில் இருந்த சீவகனுக்கு அறுவகைப்பட்ட சுவையுடன் நான்கு வகைப்பட்ட உணவினை மகளிர் சமைத்துள்ளனர் என்ற செய்தியை இவ்வரிகள் விளக்குகின்றது.

**அரண்மனைப் பணிகள்**

அரண்மனையில் மகளிர் ஆற்றிய பணிகள் குறித்த செய்திகள் சீவக சிந்தாமணியில் இடம்பெற்றுள்ளன. அரண்மனையில் வீற்றிருக்கும் மன்னனுக்குச் சாமரம் வீசும் பணிகளில் மகளிரே அக்காலங்களில் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர். கட்டியங்காரனுக்குச் சாமரம் வீசிய மகளிர் குறித்து,

**“காசின் மாமணிச் சாமரை கன்னியர்**
**வீச”**[17]

என்ற பாடலடிகள் வழியாக அறியமுடிகிறது. வித்தியாதர உலகின் வேந்தனும் காந்தருவ தத்தையின் தந்தையுமான கலுழவேகனுக்கு, ஒளிவிடும் கொங்கைகளைக் கச்சினால் இறுக்கக் கட்டிய அழகிய மகளிர் கவரி வீசியமையை,

**“பால்பரந் தன்ன பட்டார் பூவணை பசும்பொற் கட்டிற்**
**கால்பரந் திருந்த வெங்கட் கதிர்முலை கச்சின் வீக்கி**

**வேல்பரந் தனைய கண்ணார் வெண்மதிக் கதிர்பெய் கற்றை**

**போலிவர் கவரி வீச மன்னவ னிருந்த போழ்தின்''**[18]

என்ற பாடற்கருத்து விளக்குகிறது. இவ்வாறு கவரி வீசும் மகளிர் உரிய ஒப்பனைகளுடன் தம் பணியினை ஆற்றியுள்ளனர்.

அரண்மனைக்குச் சிறப்பு விருந்தினராக வருகை தருவோரை மகளிர் மங்கலப் பொருள்களை ஏந்தி வந்து வரவேற்கும் மரபினை மன்னர்கள் கொண்டிருந்தனர். நந்தக்கோன் அரண்மனைக்கு வருகைதந்த சீவகனை இத்தகைய மகளிர் வரவேற்றமையைக் குறித்து,

**''இட்டவுத் தரிய மெல்லென் றிடைசுவல் வருத்த வொல்கி**

**அட்டமங் கலமு மேந்தி யாயிரத் தெண்ம ரீண்டிப்**

**பட்டமுங் குழையு மின்னப் பல்கல னொலிப்பச் சூழ்ந்து**

**மட்டவிழ் கோதை மாதர் மைந்தனைக் கொண்டு புக்கார்''**[19]

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

## ஐவகைத் தாய்மார்

செவிலித்தாய்மார் பற்றிய குறிப்புகளைத் தொல்காப்பியம் முதற்கொண்டு அறியமுடிகிறது. சங்க இலக்கியங்களிலும் செவிலித்தாயார் பற்றிய குறிப்புகள் அதிக அளவில் உள்ளன. இத்தகைய செவிலித் தாயார் தலைவியின் வளர்ப்புத் தாயாராக விளங்கினர்.

சமூக வாழ்வில் மிக உயர்ந்த நிலையிலிருந்த மகளிரின் குழந்தைகளை வளர்க்கும் தாய்மார் பற்றிச் சீவகசிந்தாமணி குறிப்பிட்டுள்ளது. மன்னன் மற்றும் செல்வந்தர்களின் குழந்தையைப் பேணிக்காத்து வளர்க்கும் பொறுப்பினை ஏற்ற ஐவர், "ஐவகைத் தாயார்" எனச் சிறப்பிக்கப்பட்டுள்ளனர். இவர்கள் அரண்மனையிலேயே இருந்துள்ளனர். சச்சந்தனின் மனைவியான விசயையை சிறுவயது முதல் பேணிக்காத்த ஐவகைத் தாய்மார் குறித்து,

**“கலம்புரி யகலல்குற் றாயர் தவ்வையர்”**[20]

என்ற பாடலடி வாயிலாக அறியமுடிகிறது. கந்துக்கடன் இல்லத்தில் குழந்தையாக இருந்த சீவகனை வளர்த்த ஐவகைத் தாய்மார் பற்றிய செய்தி,

**“அம்பொற் கொம்பி னாயிழை யைவர நலனோம்ப”**[21]

என்ற பாடலடியில் இடம்பெற்றுள்ளது. ஐவர்க்குரிய பணிகள் குறித்து நச்சினார்க்கினியர், “ஆட்டுவாள், ஊட்டுவாள், ஓதலுறுத்துவாள், நொடிபயிற்றுவாள், கைத்தாய்”[22] எனக் குறிப்பிடுகிறார். குழந்தையைப் பாரட்டுதற்கு ஒருவரும், உணவு உண்பிப்பதற்கு ஒருவரும், தாலாட்டுதற்கு ஒருவரும், வார்த்தைகளைக் கற்பிப்பதற்கு ஒருவரும், கையிலேந்தி வளர்த்தற்கு ஒருவரும் தாய்மாராக அரண்மனையில் இருந்தமையை இப்பாடல் விளக்கி நிற்கின்றது.

**காவல் பணி**

காவல் பணியினை மேற்கொண்ட மகளிர் பற்றிய குறிப்புகள் காந்தருவ தத்தையார் இலம்பகத்தில் இடம்பெற்றுள்ளன. யாழ்ப் போட்டியில் கலந்து கொள்வதற்காக அரண்மனைக்கு வருகை தந்த காந்தருவதத்தையை ஆண் உடை தரித்த மகளிர் காவல் செய்துள்ளனர். வட்டமான தலைமுடியை உடைய மகளிர், வார்க்கச்சையை உடைய மகளிர், சேலை கட்டிய மகளிர், வில்லையும் வாளையும் கொண்ட மகளிர் காந்தருவதத்தைக்குக் காவலாக வந்தமையை,

**“வட்டச் சூரையர் வார்மலைக் கச்சினர்**
**பட்டு வீக்கிய வல்குலர் பல்கணை**
**விட்ட தூணியர் வில்லினர் வாளினர்**
**ஒட்டி யாயிரத் தோரெண்மர் முன்னினார்”**[23]

என்ற பாடற்கருத்து விளக்குகிறது.

தம் முலைகளைக் கச்சினால் மறைத்துக் கொண்டு ஆண் உடை தரித்து வாளையும் கேடகத்தையும் கையிலேந்திச் சென்ற மகளிர் குறித்து,

**"வம்பு வீக்கி வருமுலை யுட்கரந்**
**தம்பி னொய்யவ ராணுடைத் தானையர்**
**பைம்பொற் கேடகம் வாளொடு பற்றுபு**
**செம்பொற் பாவையைச் சேவித்து முன்னினார்"[24]**

எனும் பாடல் வாயிலாக அறியமுடிகிறது.

ஆடவரைக் காணவிரும்பாமல், கன்னிமாடத்தில் தனித்திருந்து நோன்பியற்றிய சுரமஞ்சரியைக் காவல் காக்கும் பணியிலிருந்து மகளிர், வில்பயிற்சியில் திறன் மிகுந்தவராய் இருந்துள்ளனர். கன்னிமாடத்திற்கு முதிய வேடத்தில் வந்த சீவகனைச் சூழ்ந்த காவல் மகளிர் அவனைக் கடிய சொல்லால் தெருட்டுகின்றனர். இக்காவல் மகளிர் செயலை,

**"கச்சுவிசித் தியாத்தகதிர் முலையர்மணி யயில்வாள்**
**நச்சுநுனை யம்புசிலை நடுங்கவுட னேந்தி**
**அச்சமுறுத் தமுதுபுளித் தாங்குத்தம தீஞ்சொல்**
**வெச்சென்றிடச் சொல்லிவிரி கோதையவர் சூழ்ந்தார்"[25]**

என்ற பாடல் எடுத்துரைக்கிறது. வாளையும், வில்லுடன் நஞ்சு தோய்த்த நுனியினை உடைய அம்புகளையும் ஏந்தி மகளிர் காவல் புரிந்தமையை இதன்வழியாக அறியமுடிகிறது.

**மருத்துவ மகளிர்**

'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்ற முதுமொழிக்கு ஏற்ப, நோயில்லாமல் வாழ்வதற்குரிய மருத்துவத்தையும், நோய் வந்தால் செய்யப்படும் மருத்துவத்தையும் அக்காலத்திய மகளிா் மேற்கொண்டுள்ளதை அறியமுடிகிறது. முதிா்ந்த மரங்களில் உள்ள பொந்துகள் போல, உடலெங்கும் புண்கள் உடையவா்க்கு, இது நல்ல மருந்து என்று மருத்துவ மகளிா் நெய் கலந்த கவளத்தை வைக்க பதுமுகனுடைய அகன்ற மாா்பிலே நெய்த் துணியை மிகுதியாக அடைத்து அவனை, எலி மயிரால் செய்த உள்ளே துணி பொருந்திய

சட்டையிலே (கம்பளிச் சட்டை) புகுக என்று சீவகன் காத்தான். என்பதில், மகளிர் மருத்துவர்களாக விளங்கியுள்ளதை அறியமுடிகிறது. இதனை,

**"முதுமரப் பொந்துபோல முழுமெயும் புண்களுற்றார்க்கு**
**இதுமருந் தென்ன நல்லா ரிழுதுசேர் கவளம் வைத்துப்**
**பதுமுகன் பாவை மார்பினெய்க்கிழி பயிலச் சேர்த்தி**
**நுதிமயிர்த் துகிற்குப் பாயம் புகுகென நூக்கி னானே" (சீவக, பா.819)**

என்ற பாடல் வழியாக அறியமுடிகிறது.

### மகளிர் வண்டி ஓட்டல்

விரைந்து செல்லும் காளை வண்டியை ஓட்டுவதில் திறன்பெற்ற மகளிர் குறித்த செய்தி சுரமஞ்சரியார் இலம்பகத்தில் இடம்பெற்றுள்ளது. காமதேவன் கோவிலுக்குச் சென்று வழிபட விரும்பிய சுரமஞ்சரியைத் தோழியர் வண்டியில் அழைத்துச் செல்கின்றனர். இதனை,

**"பொன்னியன் மணியுந் தாருங் கண்ணியும் புனைந்து செம்பொன்**
**மின்னியற் பட்டஞ் சேர்த்தி யானெய்பால் வெறுப்ப வூட்டி**
**மன்னியற் பாண்டில் பண்ணி மந்தைகோல் கொள்ள வையம்**
**இன்னியற் பாவை யேற்பத் தோழியோ டேறி னானே"**[26]

சுரமஞ்சரியின் தோழியருள் எருதைச் செலுத்தும் கோலைக் கையிலேந்தி வண்டியை இயக்குகிறாள். இதன் வாயிலாக எருது வண்டியை ஓட்டுவதிலும் மகளிர் கொண்டிருந்த தேர்ச்சி குறித்து அறியமுடிகிறது.

### மகளிர் பண்பாடு

சமூக வாழ்வில் மகளிர்க்குரிய வாழ்வியல் நெறிமுறைகளையும் சீவக சிந்தாமணி வாயிலாகத் திருத்தக்க தேவர் குறிப்பிட்டுள்ளார். சமண நீதி நூல்கள் பிறன்மனை நயத்தலைக் கடிந்துரைத்துள்ளன. இந்நீதி ஆடவர்க்கே வலியுறுத்தப்பட்டுள்ளதைத் திருக்குறள், மற்றும் நாலடியார் வாயிலாக அறியமுடிகிறது.

பல்லார் அறிய, மணமுரசு அறைந்து, நல்ல நாளில் திருமணம் செய்த காதல் மனைவி இல்லதில் இருக்கும் நிலையில் அயலான் மனைவியை நோக்குதல் தீது என்பதனை நாலடியாரில் சமண முனிவர்கள்,

**“பல்லா ரறியப் பறையறைந்து நாட்கேட்டுக்**
**கல்யாணஞ் செய்து கடிபுக்க – மெல்லியற்**
**காதன் மனையாளு மில்லாளா வென்னொருவன்**
**ஏதின் மனையாளை நோக்கு”**[27]

எனும் பாடல் வழியாகக் குறிப்பிட்டுள்ளனர். சங்கம் மருவிய காலத் தமிழ்ச் சமூகத்தில் ஆடவர்க்கு உணர்த்தப்பட்ட இவ் வாழ்வியல் அறங்கள், திருத்தக்க தேவர் காலத்தில் மகளிர்க்கும் உணர்த்தப்பட்டுள்ளமை கருதத்தக்கது. கணவன் இருப்ப மற்றோர் ஆடவனை விரும்பும் மகளிர் இடும்பைக்கு இடனாவர் என்பதை,

**“குழற்சிகைக் கோதை சூட்டிக் கொண்டவ னிருப்ப மற்றோர்**
**நிழற்றிகழ் வேலி னானை நேடிய நெடுங்க ணாளும்**
**பிழைப்பிலாட் புறந்தந் தானும் குரவரைப் பேணல் செய்யா**
**திழுக்கின ரிவர்கள் கண்டா யிடும்பைநோய்க் கிரைக ளாவார்”**[28]

என்ற பாடல் வாயிலாகத் திருத்தக்க தேவர் எடுத்துரைத்துள்ளார்.

**ஈமச் சடங்கில் மகளிர்**

ஈமச்சங்டங்கில் மகளிர் பங்குபெற்றுச் செய்த செயல்கள் குறித்துச் சீவகசிந்தாமணி வாயிலாக அறியமுடிகிறது. சச்சந்தன் உடலுக்கு மகளிர் செய்த இறப்புச் சடங்குகள் குறித்த செய்திகளை,

“செந்தீக் கருந்துளைய தீங்குழல்யாழ் தேந்தே மென்னு மணிமுழவமும் தந்தாங்கிளையார் மெல்விரல் உண்டத்தாந்தா மென்றிரங்குந் தண்ணுமைகளும் அந்தீங்கிள வியாரைஞ் ஞாற்று வரவை துறைபோய டலரம்பை யன்னார் எந்தாய்வெறு நிலத்துய்ச் சேர்தியோ வென்றினைந் திரங்கிப் பள்ளி படுத்தார்களே”[29]

என்ற கருத்து விளக்குகிறது. இடுகாட்டில் இன்னிசைக் குழலையும், யாழையும், முழவங்களையும், மத்தளங்களையும் கொண்டு வந்த மகளிர் தம் மெல்லிய விரல்களால் வாசித்தனர். அகப்பரிவார மகளிர் ஐந்நூற்றுவரும், ஆடல் துறையிலே தேர்ந்த, அவையில் ஆடவல்ல அரம்பயையரைப் போன்றவரும் சச்சந்தன் உடலை ஈமப்படுக்கையில் கிடத்தியமையை இதன்வழி அறியலாம்.

சச்சதந்தன் உடலை மகளிரே உடனிருந்து எரியூட்டுகின்றனர். ஈம விறகில் நெய்யையும் சந்தனம் முதலிய பிறவற்றையும் வைத்து மகளிர் எரியூட்டியமையை,

**“எரிமாலை யீமத்திழுதார்சூட மேனைநாறு மேற்பச்**
**சொரிந்தலறியெம் பெருமானே யெம்மை யொளித்தியோ**
**வென்னாப்பெரிய கண்ணீர் சொரிந் தலறுவார்”**[30]

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

**சச்சந்தனின் உரிமை மகளிர் செயல்**

கட்டியங்காரனால் சச்சந்தன் கொல்லப்பட்டதற்குப் பின்னர் அவன் உரிமை மகளிர் இடுகாட்டில், தம் வளையல்களையும், முத்துமாலைகளையும், கூந்தலில் சூடிய மாலைகளையும், காதில் அணிந்திருந்த குழைகளையும் களைந்து எறிந்து புலம்பியதையும் உரிமை மகளிா் மிகுந்த மனவேதனை அடைந்ததையும் காணமுடிகிறது. இதுகுறித்த செயல்பாடுகளைக் காப்பியத்தில் அறியமுடிகிறது. இதனை,

**“அரிமான் ஓா் மெல்லணைமேல் மஞ்ஞைசூழக்**
**கிடந்தாங்கு வேந்தன் கிடந்தானைத்தான்**
**கரிமாலை நெஞ்சினான் கண்டான் கண்டே கை**
**தொழுதான் கண்ணீா் கலுழ்ந்து உகுத்தபின்**
**எரிமலை ஈமத்து இழுதுஆா்குடம் ஏனைநூறும் எற்பச்**
**சொரிந்து அலறி எம்**

**பெருமானே எம்மை ஒளித்தியோ என்னாப் பெரிய கண்ணீர்**
**சொரிந்து அலறுவார்." (சீவக, பா.294)**

என்ற பாடலில், சச்சந்தன் இறந்தபொழுது, அவனுடைய உரிமை மகளிரின் மனவேதனையைக் காணமுடிகிறது.

**கணவன் இறப்பும் மகளிர் நிலையும்**

கணவன் இறப்பிற்குப் பிந்தைய மகளிர் வாழ்வியல் குறித்த செய்திகளைத் தொல்காப்பியம் முதற்கொண்டு அறியமுடிகிறது. சங்க இலக்கியங்களிலும் கணவன் இறப்பின் காரணமாக மகளிர் மேற்கொண்ட கைம்மை ஒழுக்கங்கள் விவரிக்கப்பட்டுள்ளன.

கணவன் இறந்தால் கைம்மை ஒழுக்கம் பூண்டு வாழ்தல் அல்லது எரி புகுந்து உயிர் துறத்தல் எனும் இரு நிலையைச் சமூக வாழ்வில் மகளிர் கடைப்பிடித்துள்ளனர். தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் இக்கருத்திற்குச் சான்றுகள் உள்ளன. இத்தகைய மகளிர் வாழ்வியலைக் குறிப்பிடுகிறது. கணவன் இறப்பிற்குப் பிந்தைய மகளிர் நிலையை,

**"பொறிகுலாய்க் கிடந்த மார்பிற் புண்ணியன் பொன்றி னானேல்**
**வெறிகுலாய்க் கிடந்த மாலை வெள்வளை முத்த நீக்கி**
**நெறியினா னாற்ற லொன்றோ நீளெரி புகுத லொன்றோ**
**அறிலென் கொழுநன் மாய்ந்தா லணிசுமந் திருப்ப தென்றான்"**[31]

என்ற பாடற்கருத்தின் வாயிலாகத் திருத்தக்க தேவர் விளக்குகிறார். மணம் மிக்க மாலை, வெண்ணிற வளையல், முத்துமாலை ஆகியனவற்றை விலக்கி மகளிர் மேற்கொள்ளும் கைம்மை விரதம் குறித்தும், பெருந்தீயில் புகுந்து உயிர் துறக்கும் மகளிர் செயல் குறித்தும் இப்பாடல் வழியாக அறியமுடிகிறது. காந்தருவதத்தையின் நிலை இப்பாடலில் நந்தட்டன் வாயிலாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. இவ்விரு செயலையும் காந்தருவதத்தை மேற்கொள்ளாமையினால் சீவகன் உயிருடன்

இருப்பது விளக்கப்படுகிறது. இப்பாடல் உணர்த்தும் கருத்திலிருந்து பண்டைத் தமிழ்ச்சமூக மகளிரின் நிலையை அறியமுடிகிறது.

**“கையார் வகைள் புடைத்திரங்குவார் கதிர்முலை**
**மேலாரம் நெய்யார்கருங்குழன் மேன்மாலை சிந்திநிலத்திடுவார்**
**நின்றுதிருவிவீசும் மையார் கடிப்பிணையும் வார்குழையுங் களைந்திடுவார**
**கையால் வயிறதுக்குவார் ஐயாவோ வென்றழுவார் வேந்தன்செய்த**
**கொடுமை கோல்வளையினார்”**[32]

என்ற பாடற்கருத்தின் வழி அறியமுடிகிறது.

சச்சந்தன், கட்டியங்காரனால் கொல்லப்பட்டதற்குப் பின்னர் கைம்மை ஒழுக்கம் மேற்கொண்ட விசயை தனது தோளில் அணிந்த அணிகலன்களையும், கைவிரல்களில் அணிந்திருந்த மோதிரத்தையும் அகற்றுகிறாள். தன் கையில் அணிந்திருந்த வளையல்களையும் உடைத்து எறிகிறாள் என்பதை,

**“பஞ்சி யனைய வேய்மென்றோட் பகுவாய் மகரங் கான்றிட்ட**
**துஞ்சாக் கதிர்கொ டுணைமுத்தந் தொழுதே னும்மை யெனத்துறந்து**
**அஞ்சி வருத்து நுசுப்பினாள் வளைகை யுடைத்து மணிக்காந்தள்**
**அஞ்சச் சிவந்த் மெல்விரல்சூழரும்பொ னாழி யகற்றினாள்”**[33]

என்ற பாடற்கருத்து மேற்சுட்டியனவற்றை விளக்குகிறது. மேலும், விசயை தன் தொடையில் அணிந்திருந்த அணியையும், காலில் அணிந்திருந்த கிண்கிணி, சிலம்பு ஆகியவற்றை அகற்றிக் காவி உடையை உடுத்தியமையை,

**“பிடிக்கை போலுந் திறள்குறங்கி னணியு நீக்கிப் பிணையன்னாள்**
**அடிக்கிண் கிணியு மஞ்சிலம்பும் விரன்மோ திரத்தோ டகற்றியபின்**
**கொடிப்பூத் துதிர்ந்த தோற்றம்போற் கொள்ளத் தோன்றி யணங்கலற**
**உடுத்தாள் கற்றோய் நுண்கலிங்க முரவோன் சிறுவ னுயர்கெனவே”**[34]

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

போர்க்களத்தில் வீரர் இறப்பின் அவர்தம் மனைவியர் மங்கல அணிகளை விடுத்தல் குறித்த குறிப்பு,

**“குலங்கெழு மகளிர்தம் கோலம் நீப்பவும்”**[35]

எனும் பாடலடியில் இடம்பெற்றுள்ளது. கைம்மை ஒழுக்கம் மேற்கொண்டு வாழும் மகளிரின் உணவுப் பழக்கங்கள் குறித்த செய்திகள் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளன. தவப்பள்ளியிலிருந்த விசயை, அல்லி அரிசி உணவைக் உட்கொண்டமையை,

**“மெல்விரன் மெலியக் கொய்த குளநெல்லும் விளைந்த வாம்பல்**
**அல்லியு முணங்க முன்றில்”**[36]

என்ற பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது.

சீவகனால் கட்டியங்காரன் கொல்லப்பட்டதற்குப் பின்னர் அவன் உரிமை மகளிர் அடைந்த அவலங்கள் வாயிலாகக் கணவனை இழந்த அரசகுல மகளிரின் சமூக நிலைமையை அறிந்து கொள்ள முடிகிறது. அரண்மனையைச் சீவகனின் படையினர் கைப்பற்றிய பின்னர், கட்டியங்காரனின் அரண்மனையில் வாழ்ந்திருந்த அவன் உரிமை மகளிர் அரண்மனையிலிருந்து வெளியேறினர். தமது அணிகலன்களைத் துறந்து அவர்கள் இருந்த நிலையினை,

**“காதார் குழையுங் கடற்சங்கமுங் குங்கு மமும்**
**போதா ரலங்கற் பொறையும் பொறை யென்று நீக்கித்**
**தாதார் குவளைத் தடங்கண்முத் துரட்டி விம்மா**
**மாதார் மயிலன் னவர்சண்பகச் சாம்ப லொத்தார்”**[37]

என்ற பாடலுணர்த்தும் கருத்திலிருந்து அறிய முடிகிறது. காதிலணிந்த குழையினையும் கைகளில் அணிந்திருந்த சங்கு வளையல்களையும், குங்குமத்தையும், மலர் மாலையையும் சுமையெனக் கருதிக் கட்டியங்காரனின் உரிமை மகளிர் அவற்றைத் துறந்தைமையைப் பாடலுணர்த்தும் கருத்தின் வாயிலாகக் காணமுடிகின்றது.

கட்டியங்காரனுக்காகப் போரியற்றிப் போர்க்களத்தில் மடிந்த வீரர்களின் மனைவியர் தம் காதுக் குழையை வீசி எறிந்துவிற்று அழுது அரற்றியதை,

**“கொழுவாய் விழுப்புண் குரைப்பொலியுங் கூந்தன் மகளிர் குழைசிதறி**

**அழுவா ரழுகைக் குரலொலியும்”**[38]

என்ற பாடல் உணர்த்தி நிற்கின்றது.

**கணவன் இறப்ப மகளிர் சடங்குமுறைகள்**

பண்டைய காலத்திய மகளிா் தன் கணவா் இறந்தபின்னர் சடங்குமுறைகள் மேற்கொண்டனா் என்பதை அறியமுடிகிறது. இவை குறித்தான பதிவினை சீவசிந்தாமணியில் காணமுடிகிறது. அழகிய சுறா மீன்கள் வாய் திறந்தது போன்ற வடிவிலே செய்யப்பட்ட அணியும், அதைச் சுற்றி அணிந்த முத்துமாலைகளும் சூடிய, அசையும் மூங்கிலினைப் போல் அவளது தோள்கள் செந்நிறம் பொருந்திய செம்பஞ்சணையைப் போன்றிருந்தது. தெளிந்த ஒளி வீசும் வளையலணிந்த முன் கையில் குவிந்த விரல்கள் செங்காந்தளின் அழகிய அரும்பைப் போன்றன. உள்ளங்கைகள் தாமரை மலா் போன்றன, அவை சாதிலிங்கம் பொருந்திய அழகின, என்று விசயையின் அழகினையும், அவள் உடலில் அணியப்பட்ட அணிகலன்களையும் குறிப்பிடுகின்றாா் ஆசிரியா். இதனை,

**“மணிமகரம் வாய்போழ்ந்து வாழ்மூத்த வடம் சூழ்ந்து**
**அணிஅரக்கு ஆர் செம்பஞ்சி அணையனைய ஆடு அமைத்தோன்**
**துணிக்கதிா் வளைமுன்கைத் தொகுவிரல் செங்காந்தள்**
**மணிஅரும்பு மலா் அங்கை குலிகம் ஆர் வனப்பினவே” (சீவக, பா.170)**

என்ற பாடல் புலப்படுத்தும். இயற்கை அழகினையும், அவ்வழகிற்கு மெருகூட்டப்பட்ட அணிகலன்களையும், எடுத்துரைத்த ஆசிரியர் சச்சந்தன் இறந்தவுடன், அழகும் அணிகலன்களும் இன்றி அலங்கோலமாகக் காட்சி தந்து நிற்கும் விசயையினைக் கண்முன்பாக நிறுத்துகின்றாா். அதாவது, அணிகலன்களின் சுமையைச் சுமக்க

அஞ்சும் இடையையுடைய விசயை, பஞ்சு போன்ற மென்மை பொருந்திய மூங்கில் போன்ற தோள்களில் உள்ள, திறந்த வாயினையுடைய மகரமீன் உமிழ்ந்த நீங்காத ஒளியுடைய முத்துக்களால் செய்தமைத்த தோளணியை, 'உம்மை வணங்கினேன்' அசன் விலகாமல் தழுவுதற்குக் காரணமாய்த் தன்னைக் கெடுத்தலின் இகழ்ச்சிக் குறிப்புப்பட உம்மை வணங்கினேன். என்று கூறி நீக்கினாள். பின் வளையல்களை உடைத்து அழகிய காந்தள் மலரும் அஞ்சுமாறு சிவந்த மெல்லிய விரல்களில் பதிந்திருந்த பொன் மோதிரத்தையும் அகற்றினாள் என்பதை,

**"பஞ்சி அனைய வேய்மென்தோள் பகுவாய் மகரம் கான்றிட்ட**
**துஞ்சாக் கதிர்கொள் துணைமுத்தம் தொழூதோன் உம்மை எனத் துறந்து**
**வஞ்சி வருந்தும் நுசுப்பினாள் வளைகை உடைத்து மணிக்காந்தள்**
**அஞ்சச் சிவந்த மெல்விரல்சூழ் அரும்பொன் ஆழி அகற்றினாள்."(சீவக, பா.351)**

என்ற வரிகளில், விசயையின் அணிகலன்கள் அகற்றப்பட்ட நிலையை அறியலாம். மேலும், பெண் மான் போன்ற விசயை, பெண் யானையின் துதிக்கை போலத் திரண்ட தொடையில் அணிந்திருந்த குறங்கு செறி என்னும் அணிகலனையும் நீக்கி, காலில் அணிந்திருந்த கிண்கிணியையும், சிலம்பையும் காலாழிகளையும், அகற்றிய பின்னா், கொடி ஒன்று பூத்து உதிர்ந்த காட்சியைப் போல், அணிகலன்களின்றி தோன்றியதைக் கண்டு தன்னுடன் வந்த தெய்வம் வாய்விட்டுக் கதறி அழ அறிவுடையோனாக மகன் உயர்வடைக என்று எண்ணிக் காவி தோய்த்த நுண்ணிய துவராடையை உடுத்திக் கொண்டாள். இதனை,

**"பிடிக்கை போலும் திரள் குறங்கின் அணியும் நீக்கிப்**
**பினை அன்னாள் அடிக்கிண் கிணியும் அம்சிலம்பும் விரல் மோதிரத்தோடு**
**கொடிப் பூத்து உதிர்ந்த தோற்றம் போல் கொள்ளத் தோன்றி**
**உடுத்தாள் கல்தோய் நுண்கலிங்கம் உரவோன் சிறுவன் உயர்க எனவே."**
**(சீவக, பா.353)**

என்ற பாடல் வழியாக அறியமுடிகிறது.

**இலைக்கறி உணவு உண்ணல்**

கணவனை இழந்த மகளிர் துவராடைகளை உடுத்தினர். தாங்கள் அணிந்திருந்த அழகிய அணிகலன்களைக் களைந்தனர். தாம் உயிர்வாழ்வதற்காக இலைக்கறி உணவுகளை மட்டும் உண்டனர் என்பதை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இதனை,

**"பால் உடை அமிர்தம் மைப்பொன் கலத்திடைப்பாவை**
**நூல் அடும் நுசுப்பின் நல்லார் ஏந்தவும் நேர்ந்து நோக்காச்**
**சேல் அடு கண்ணி காந்தள் திருமணி துடுப்பு முன்கை**
**வால் அடகு அருளிச் செய்ய வனத்துறை தெய்வம் ஆனாள்."(சீவக, பா.354)**

என்ற அடிகள் புலப்படுத்தும் பொருளானது, முன்பு, கொல்லிப் பாவை போன்ற அழகுடைய நூலை வருத்துகின்ற சிற்றிடை மகளிர். பால் கலந்த அமிழ்தம் போன்ற சோற்றைப் புதிய பொன் கலத்திலே இட்டு நிற்பினும், விரும்பி நோக்காத, மீனைப் பழிக்கின்ற கண்ணையுடைய விசயை இப்போது, அழகிய மணியையுடைய காந்தள் இதழ் போன்ற தன் முன்கையே, தூய இலைக்கறி இரங்கி நல்க அதனை நுகர்ந்த காட்டில் வாழும் தெய்வம் போல் விளங்கினாள், என்பதாகும். இவற்றிலிருந்து, கணவனை இழந்த சாமான்யப் பெண்கள் முதல் அரசப்பெண்கள் வரை உலக வழக்கியல் சார்ந்த சடங்கியல் முறைகளைப் பின்பற்றினர் என்பது தெளிவாகின்றது.

**உயிர்நீத்தல்**

போர்க்களத்தில் இறந்துபட்ட கணவனுடன் உயிர்நீத்த மனைவியர் குறித்த செய்திகள் சங்ககாலத் தமிழகத்திலும் வழக்கத்தில் இருந்துள்ளதை அறியமுடிகின்றன. கணவன் உடலுடன் தீப்பாய்ந்து இறக்கும் மகளிர் குறித்து,

**"நல்லோள் கணவனொடு நளியழற் புகீஇச்**
**சொல்லிடை யிட்ட பாலைநிலை"**[39]

என்னும் வரிகள் புலப்படுத்துகின்றன. கற்புடைய பெண்களின் குணங்கள் குறித்துத் திருத்தக்க தேவர் குறிப்பிட்டுள்ள செய்தி பின்வருமாறு,

**"சாமெனிற் சாத னோத றன்னவன் றணந்த காலைப்**
**பூமனும் புனைத லின்றிப் பொற்புடன் புலம்ப வைகிக்**
**காமனை யென்றுஞ் சொல்லார் கணவற்கை தொழுது வாழ்வார்**
**தேமலர்த் திருவோ டொப்பார் சேர்ந்தவன் செல்ல றீர்ப்பார்"**[40]

எனக் குறிப்பிட்டுப் போற்றுகிறார். கணவன் சாகிற் சாக, நோவின் நோக, அவன் பிரிந்தபோது, பூவும் புனைதலன்றி அழகுடன் தனித்திருந்து காமன் என்ற பெயரைக் கூடச் சொல்லாதவராய், கணவனை வணங்கி வாழ்கின்ற மகளிர் திருமகளுக்கு நிகராவர் என்பதை இப்பாடல் விளக்குகிறது. கற்புடைய மகளிர் பிற ஆடவர் பெயரைக் கூறார் என்பதைக் கொங்குவேளிர்,

**"ஆண்பெயர்க் கிளவி நாண்மகிழ் கடவ**
**வழுக்கிக் கூறினும் வடுவென் நாணி**
**ஒழுக்க நுனித்த வூராண் மகளிர்"**[41]

எனச் சிறப்பித்துப் போற்றுகிறார்.

சச்சந்தன் மறைவிக்குற் பின்னர் அவன் பட்டத்தரசி உடனுறைந்த செய்தியை,

**"மாலே றனையா னொடு மக்களுக் க.்.தோ வென்னா**
**வேலேறு பெற்ற பிணையின்னணி மாழ்கி வீழ்ந்து**
**சேலேறு சின்னீ ரிடைச் செல்வன போன்று செங்கண்**
**மேலேறி மூழ்கிப் பிறந்தாழ்ந்த விறந்து பட்டாள்"**[42]

என்ற பாடற்கருத்து புலப்படுத்துகிறது. கணவன் போர்க்களத்தில் இறந்தான் எனக் கேட்ட அளவில் அவன் பட்டத்தரசி உடனுயிர் துறந்தமையை இதன்வழி அறியமுடிகிறது.

### பகை மன்னர்களின் மனைவியர்

போரின் விளைவுகள் மகளிர்க்கு விளைவித்த பல்வேறு கொடுமைகள் குறித்த செய்திகள் சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன. போரில் பகைவரை வென்ற பின்னர் அந்நாட்டிலுள்ள மகளிரைத் தம் நாட்டிற்கு அழைத்து வந்து பல்வேறு பணிகளுக்கு அவர்களைப் பயன்படுத்தும் வழக்கம் பண்டைத் தமிழகத்தில் இருந்துள்ளது. இத்தகைய மகளிர், 'கொண்டி மகளிர்' என்ற பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளனர். இத்தகைய மகளிர் கோவில் வழிபாடு சார்ந்த பணிகளில் ஈடுபடுத்தப்பட்டதைப் பற்றிய குறிப்பு சிந்தாமணியில் இடம்பெற்றுள்ளது.

**"கொற்ற மன்ன மங்கையர்**
**எத்தல் சான்ற கோயிலு மிடைப்ப டுத்தி யன்றவே"**[43]

போரில் வெற்றிபெற்றுக் கொண்டுவரப்பட்ட பகை மன்னருடைய மனைவியர் அருகன் கோயிலில் செய்த வழிபாடுகள் பற்றி இப்பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது.

### மகளிர் கோலம் செய்தல்

ஏமாங்கத நாட்டில் மகளிரை அழகு படுத்திக் கொள்வதற்கெனத் தனி இடங்கள் இருந்துள்ளன.

**"கொடியனார் செய்கோலமும் வைகறோறு மாயிரம்" (சீவக, பா.76:2)**

மகளிர் கோலம் செய்கின்ற இடங்கள் ஆயிரம் என்பதாக அறியமுடிகிறது.

### பரத்தையர் பண்பு

பரத்தமைத் தொழிலில் ஈடுபட்டுப் பொருளீட்டிய மகளிர் பற்றிய பல்வேறு குறிப்புகள் சீவக சிந்தாமணியில் இடம்பெற்றுள்ளன. மகளிரின் பரத்தமை ஒழுக்கத்தைச் சமணசமயம் கடிந்துரைக்கிறது. தொல்காப்பியர் காலம் முதற்கொண்டே தமிழ்ச்சமூகத்தில் இத்தகைய ஒழுக்கம் பூண்டு வாழ்ந்த மகளிர்

பற்றி அறியமுடிகிறது. சங்க இலக்கியங்களிலும் பரத்தையர் பற்றிய குறிப்புகள் அதிக அளவில் இடம்பெற்றுள்ளன.

திருத்தக்கதேவர் தவத்தில் சிறந்தோங்கும் முனிவர்களின் பெருமையைக் கூறுமிடத்தில் பரத்தையர் இயல்புகளை,

**"கண்வலைக் காமுக ரென்னும் மாடுத்**
**தொண்ணிதித் தசைதழீஇ யுடலம் விட்டிடும்**
**பெண்வலைப் படாதவர்"[44]**

எனக் குறிப்பிடுகிறார். பரத்தையர், தம் கண்ணாகிய வலையாலே, காமுகராகிய விலங்கினைத் தம்முகப்படுத்திச் செல்வமாமகிய தசையைக் கைக்கொண்டு உடலைக் கைவிடுகின்ற இயல்பினை உடையவர்கள் எனும் கருத்து இப்பாடலில் இடம்பெற்றுள்ளது. பரத்தமை ஒழுக்கத்தில் ஈடுபட்டு வாழும் பெண்கள் மறுபிறப்பில் விலங்குகளாய்ப் பிறப்பர் எனும் சமணக் கருத்து,

**"அல்குல் விலைபகரும் ஆய்தொடியர் ஆதியார்**
**வில்பொரு தோள் மன்னா விலங்காய்ப் பிறப்பவே"[45]**

எனச் சீவகசிந்தாமணியில் இடம்பெற்றுள்ளது. இதே கருத்து,

**"விலைபகர்ந் தல்குல் விற்கும் வேலினும் வெய்ய கண்ணார்**
**முலைமுகந் திளையர் மார்ப முரிவில ரெழுதி வாழும்**
**கலையிகந் தினிய சொல்லார்"[46]**

என்ற பாடலிலும் இடம்பெற்றுள்ளது. பொருளை மட்டுமே நோக்கமாகக் கொண்ட பரத்தையர் ஒருவர் மீது கொண்ட காமத்தை விரைவில் ஒழிப்பர் என்பதை,

"இலைகுலாம் பைம்பூ ணிளமுலைத் தூதி னின்கனித் தொண்டையர் துவர்வாய்க் கலைவலார் நெஞ்சிற் காமமே போன்றுங் கடவுளர் வெகுளியே போன்றும் உலைவிலார் நில்லார் நில்லா தொரு பகலுள்ளே யுருப்பவிர் வெஞ்சுரங் கடந்தார்"[47] எனும் பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது. பரத்தையர் வாழிடங்கள் 'பரத்தையர் சேரி' என்ற பெயரால் வழங்கப்பட்டுள்ளன. இதனை,

**“துப்புறழ் தொண்டைச் செவ்வாய்த் தோழியர் காமத்தூதி**
**னொப்பவொன் றாதி யாக வாயிரத் தோரெட் டீறாககச்**
**செப்பித்தஞ் செம்பொ னல்கு னலம்வரை வின்றி விற்கு**
**முப்பமை காமத் துப்பி னவரிட முரைத்து மன்றே”**[48]

ஒன்று முதல் ஆயிரத்தெட்டு கழஞ்சு வரையான பொன்னிற்குத் தம் அல்குலை விலை கூறி விற்கும் பரத்தையர் பற்றிய செய்திகள் இப்பாடலில் இடம்பெற்றுள்ளன. பரத்தையர் தமது இல்லங்களில் காமக் குறிப்புத் தோன்றும் வகையில் பல்வேறு சித்திரங்களை வரைந்து ஆடவர்களை ஈர்த்த செயலை,

**“எங்குநற் சவர்க டோறு நாடக மெழுதி யேற்பப்**
**பொங்குமென் மலர்பெய் சேக்கை பொலிந்துவிண் புகற்சி யுண்டே”**[49]

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன. பரத்தையர்கள் பல்வேறு கலைகளிலும் வல்லவராய் இருந்துள்ளனர். தம் மேனியில் பல்வகை அணிகலன்களை அணிந்து தம்மை அழகுபடுத்திக் கொள்வதிலும் பெருவிருப்புடையவராகப் பரத்தையர் இருந்தனர் என்பதை,

**“அஞ்சிலம் பொலியோடல்குற் கலையொலி யணிந்த முன்கைப்**
**பஞ்சிமெல் விரலிற் பாணி பண்ணொலி பவழச் செவ்வாய்**
**அஞ்சிநேர்ந் துயிர்க்குந் தேன்சோர் குழலொலி முழவினோசை**
**துஞ்சலி லோசை தம்மாற் றுறக்கமு நிகர்க்க லாதே”**[50]

இப்பாடற்கருத்திலிருந்து பரத்தையர் தம் கால்களில் சிலம்பும், இடையில் மேகலையும், விரல்களில் செம்பஞ்சுக் குழம்பும் அணிந்திருந்தமையை அறியலாம். ஆநிரை மீட்ட சீவகனை விரும்பிய பரத்தையரின் செயல்பாட்டினைக் குறித்து, காதலைச் சொரிகின்ற மயில் அனைய பரத்தையா், முறைப்படி வாழ்த்துக் கூறி நம்பியே! வருக! என்பார். நிலமகள் உன்னைச் சோ்க என்பாா். மெய் வருந்த எங்கும் சுண்ணப்பொடியை அவன்மேல் அள்ளி வீசி, குளிா்ந்த மகரந்தம் சிந்தும் மலா்மாலைகளை எறிந்து சந்தனத்தை கையில் எடுத்து எறிந்ததை,

**"மாது உகும் மயிலின் மங்கல மரபு கூறிப்**
**போதக நம்பி என்பார் பூமியும் புணர்க என்பார்**
**தோதகம் ஆக எங்கும் சுண்ணம் மேல் சொரிந்து தண்ணென்**
**தாது உகு பிணையால் வீசிச் சாந்து கொண்டு எறிந்து நிற்பார்."**
**(சீவக, பா.463)**

என்ற பாடல் வழியாகப் பரத்தையரின் செயல்பாட்டினை அறியலாம். மேலும், காப்பியத் தலைவனாகிய சீவகனை இற்பரத்தையும், சேரிப்பரத்தையும் விரும்பி நின்ற செய்தியைக் காணமுடிகிறது.

ஆடவரைப் பெண்கள் விரும்புவது இயற்கை. அவற்றிலும் அழகிலும், வீரத்திலும் சிறந்து விளங்கும் ஆடவனை விரும்புவது ஏழுவகைப் பருவத்தார்க்குரிய இயல்பாகும். எனவேதான், அழகிலும் வீரத்திலும் சிறந்து விளங்கிய சீவகனை பரத்தை மகளிர் விரும்பி நின்றதைக் குறித்து, ஆசிரியர்,

**"விலைபகர்ந்து அல்குல் விற்கும் வேலினும் வெய்யகண்ணார்**
**முலைமுகந்து இளையர் மார்பம் முரிவிலர் எழுதிவாழும்**
**கலை இகந்து இனியசொல்லார் கங்குலும் பகலும் எல்லாம்**
**சிலை இகந்து உயர்ந்த திண்தோள் சீவகற்கு அரற்றி ஆற்றார்." (சீவக, பா.372)**

என்று குறிப்பிடுகின்றார்.

### கணவனால் கைவிடப்பட்ட மகளிர்

பரத்தையர் மீது கொண்ட அன்பின் காரணமாக சில ஆடவர் தம் மனையாளைத் துறக்கின்றனர். இத்தகைய ஆடவர் செயலால் மகளிர் அடைந்த அவலங்கள் குறித்துச் சீவகசிந்தாமணி வாயிலாக அறியமுடிகிறது.

**"இரங்கு மேகலை யல்கு லின்கனித் தொண்டைநய் துவர்வாய்**
**அரங்கக் கூத்திக ணன்பின் மனையவட் டுறந்துசெல் பவர்போல்"**[51]

மேகலை அணிந்த இடையையும் கொவ்வைக்கனி போன்ற சிவந்த வாயையும் உடைய பரத்தையரிடம் ஆடவர் கொண்ட காமவின்பம் இப்பாடலில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. இவ்வாறு பரத்தையர் மோகத்தால் கைவிடப்பட்ட மகளிர்க்குச் சீவகன் பெருஞ் செல்வம் அளித்துக் காத்த செயலை,

**"பூக்குழன் மகளிர்க் கொண்டான் புறக்கணித் திடப்பட் டீர்க்கும்**
**கோத்தரு நிதியம் வாழக் கொற்றவ னகரோ டென்ன**
**வீக்குவார் முரசங் கொட்டி விழுநக ரறைவித் தானே"**[52]

எனும் பாடலடிகள் விளக்குகின்றன. கணவனால் புறக்கணிக்கப்பட்ட மகளிர்க்குப் பெருஞ்செல்வம் அளித்துக் காத்த அரசர் செயலை இதன் வாயிலாக அறியமுடிகிறது.

**திருமணமான மகளிர் பண்பாடு**

சமூகத்தில் பெண் என்பவள் பிறந்த வீட்டிலிருந்து, திருமணம் என்ற பந்தத்தின் மூலம் கணவனைப் பெறுகின்றாள். கணவன் வீட்டிற்குச் செல்லும் மகளிர், பிறந்த வீட்டின் உறவுகளைப் பிரிகின்ற போது, மிகுந்த மனவேதனை அடைகின்றாள். இது மகளிரின் பிறந்தக அன்பினை வெளிக்காட்டுகிறது. இத்தகைய துயரமான நிகழ்வினைக் குறித்து,

**"அரக்குளறி குவளை வாள்கண் அவ்வளைத் தோளினானைப்**
**பரப்பு அமை காதல் தாயர் பற்பல்கால் புல்லிக் கொண்டு**
**திருப்புறக் கொடுத்த செம்பொன் தாமரை போன்று கோயில்**
**புரிக்குழல் மடந்தை செல்லப் புலம்பொடு மடிந்ததன்றே"(சீவக, பா.560)**

என்று, உறவைப் பிரிதற்கு எண்ணி அழ, அதனால் அரக்கைப்போல் சிவந்த குவளை மலர் போல் ஒளிவிடும் கண்களையும். அழகிய வளையணிந்த தோள்களையும் உடைய தத்தையை, மிக்க அன்புடைய தாயார் பற்பல முறையாகத் தழுவிக் கொள்ள, திருமகளைப் போக விட்டு வாடிச் சிவந்த பொற்றாமரை மலர்போல, மாலை சூடிய கூந்தலையுடைய தத்தை பிரிந்து

செல்வதால், அரண்மனை வருத்தத்தில் ஆழ்ந்தது. இதன்வாயிலாக மகளிர் தங்கள் இல்லத்தை விட்டு கணவனின் இல்லம் நோக்கிப் போகும்பொழுது, மனதளவில் மிகுந்த வேதனை அடைகின்றனர் என்பதை அறியமுடிகிறது.

**மகளிர் விளையாட்டு**

விளையாட்டு உடலையும், மனதையும் பக்குவப்படுத்தக் கூடிய ஒன்றாகும். சீவகசிந்தாமணியில் மகளிர் பல்வேறு வகையான விளையாட்டுக்களை விளையாடியுள்ள செய்தியை அறியமுடிகிறது. அவ்வகையில், மகளிர் குளத்தில் நீந்தி விளையாடிய விளையாட்டினைக் குறித்து,

**“காவியன்ன கண்ணினார் கயந்தலைக் குடைதலின்”**[53]

என்ற வரி புலப்படுத்துகிறது. மேலும், மகளிர் பந்து விளையாடிய நிகழ்வினைக் குறித்து,

**“பாவை யன்னவர் பந்து புடைத்தலிற்**
**றூவி யன்னம் வெரீஇத்துணை யென்று போய்க்” (சீவக, பா.125:1-2)**

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. மேலும், மற்றொரு பாடலில் பந்தாடுதல் குறித்து,

**“வைத்த பந்து எடுத்தலும் மாலையுள் கரத்தலும்**
**கைத் தலத்தின் ஓட்டலும் கண்ணி நெற்றி தீட்டலும்**
**பத்தியின் புடைத்தலும் பைஅரவ்வின் ஆடலும்**
**இத்திறந்த பந்தினோடு இன்பம் எல்லை யில்லையே.”(சீவக, பா.151)**

என்ற பாடல் வழியாக அறியமுடிகிறது. கீழே வைத்த பந்தைக் கையால் தொடாமல் காலால் தட்டியெடுத்தலும், மாலைக்குள் மறைத்தலும், கையிலே கொண்டு தூக்கி எறிதலும், கண்ணியையுடைய தலையால் முட்டியும் ஒரு முறைக்கு ஒரு முறை படிப்படியாக மேலே உயர அடித்தலும் தம் நிலையிலே நின்று படமெடுத்த பாம்பு போலப் பரந்து உலாவி அடித்தலும் ஆன இத்தகைய பந்து

விளையாட்டால் உண்டான இன்பத்திற்கு முடிவில்லை என்பதிலிருந்து, பந்தாட்டத்தின் சிறப்பினை அறியமுடிகிறது.

இவற்றிலிருந்து மகளிர் தங்களது பொழுதுபோக்கிற்காகவும், மனநிறைவிற்காகவும் விளையாட்டுக்கள் விளையாடியுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

**மகளிர் நாடகத் திறன்**

மகளிர் கலைசார்ந்த அரங்கிலும் தங்கள் பங்களிப்பினைச் செய்துள்ளனர். குறிப்பாக நாடக அரங்கில் நடிகர்களாகவும், பாடகர்களாகவும், இசைக் கலைஞர்களாகவும் வலம் வந்துள்ளனர். இதனை,

**"பூத்த கோங்கும் வேங்கையும் பொன்இணர்செய் கொன்றையும்**
**காய்த்து நின்று கண்தெறூஉம் காமர்வல்லி மாதரார்**
**கூத்து அறாத பள்ளியும் கொற்ற மன்னமங்கையர்**
**ஏத்தல் சான்ற கோயிலும் இடைப் படுத்து இயன்றவே." (சீவக, பா.154)**

தம் கண்கள் இளைஞர் உடலை வெப்பமுடைய தாக்கி அவர்தம் நெஞ்சை சுடும் அழகிய கொடியினை பெண்களின் கூத்து நீங்கப் பெறாத அரங்கமும், போரிலே வெற்றி பெற்றுக் கொண்டு வரப்பட்ட பகை மன்னருடைய மனைவியராய்க் காவலில் இருக்கும். மகளிர் வழிபடும் அருகன் கோயிலும் ஆகிய இவை, மலர்ந்த, கோங்கு, வேங்கை, பொன் போல் கொத்தாக மலர்ந்த கொன்றை ஆகியவை இடைபட்ட அமைக்கப்பட்டிருந்தன. அதாவது, நாடக சாலையும், அருகன் கோயிலும் ஆகிய இரண்டும் தம்மில் இடைவிட்டிருக்கும். மேலும், கூத்தின் ஒலியும், கை கொட்டிக் கேட்போர் நெஞ்சு நெகிழப் பாடும் பாட்டின் ஒலியும், பெரிய முழவின் ஒலியும், பிற இசைக் கருவிகளுடன் கூடும் அழகும் இனிய சுவையும் பொருந்திய யாழின் ஒலியும் ஆகிய குறைதலில்லாத நிறைந்த ஓசையாலே ஒவ்வொரு நாளும் இனிது கழியும். இப்பொருளினை எடுத்துரைக்கும் முகமாக அமைந்துள்ள பாடல் பின்வருமாறு,

**“ஆடலின் அரவமும் அங்கை கொட்டி நெஞ்சு உண**
**பாடலின் அரவமும் பணைமுழவு அரவமும்**
**கூடு கோலத் தீஞ்சுவைக் கோலயாழ் அரவமும்**
**வாடல் இல்ல ஓசையால் வைகல் நாளும் வைகின்றே.” (சீவக, பா.156)**

என்பதாகும். இவற்றிலிருந்து, மகளிர் நாடக அரங்கில் தனித்தன்மையுடைய கலைஞர்களாக விளங்கியுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

## தொகுப்புரை

தாய்வழிச் சமூக அமைப்பில் தனித்துவமாகத் திகழ்ந்த மகளிர், தந்தை வழிச்சமூகத்தில் ஆண்களுக்கு இணையாகச் சமூக வாழ்விலும், குடும்ப வாழ்விலும் பங்கு கொண்டுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

சமூகத்தின் அனைத்துத் தளங்களிலும் மகளிர் தங்கள் பணியினைச் சிறப்பாகச் செய்துள்ளனர். அரண்மனையில் பணியாற்றியது முதல் இல்லறத்தில் கணவனுக்குப் பணிவிடை செய்தது வரையிலும், மகளிரின் பல்வேறு பணிகளை அறியமுடிகின்றது.

இந்தியச் சமூகத்தில் உழவுத் தொழில் முதன்மையானத் தொழிலாக அமைந்துள்ளது. உழவுத் தொழிலில் மகளிர் ஈடுபட்டுள்ளனர். உழவுத் தொழிலில் ஈடுபடும் மகளிர் கடைசியர் என்ற பெயரால் சிறப்பிக்கப்பட்டுள்ளனர் என்பதை பாடற்கருத்தின்வழி தெளியமுடிகின்றது.

இல்லறத்தில் மகளிர், பசுக்களைப் பேணிப் பால் கறப்பதில் தொடங்கி, அவல் இடித்தல், சுண்ணம் இடித்தல், உணவு சமைத்தல் போன்ற பல்வேறு பணிகளைச் செய்துள்ளனர் என்பதைக் காணமுடிகின்றது.

அரண்மனையில் இளவரசிகளுக்கும், அரசிகளுக்கும் காவலர்களாகப் பெண்கள் பணி செய்துள்ளனர். காவல் புரிந்த பெண்கள் வாள், வில், போர்க்கலைகள் ஆகியவற்றில் தேர்ந்த பயிற்சி பெற்றவர்களாக இருந்துள்ளனர்.

அரசகுலமகளிர் முதல் குடிமகளாகிய மகளிர் வரை தங்கள் கணவர் இறந்துபட்டால், அணிகலன்களைக் களைந்துள்ளனர். இத்தகைய மரபு சார்ந்த நம்பிக்கை இன்றைய காலத்திலும் தொடர்வதை அறியமுடிகிறது.

சமூகத்தில் பரத்தமை என்ற ஒழுக்கம் இருந்துள்ளது. பரத்தையர் தங்கள் உடல் விற்று பொருள் ஈட்டியுள்ளனர். இத்தகைய இழிநிலைப்பாட்டைச் சமண சமயம் கடிந்துரைத்துள்ளது.

சமூகத்தில் பல்வேறு இனக்குழு அமைப்பில் மகளிர், தத்தமது இனக்குழு மரபிற்கேற்ப தங்கள் வாழ்க்கையைக் கைக்கொண்டு வாழ்ந்திருக்கின்றனர் என்பதை அறியமுடிகிறது.

மகளிர் தங்களை அழகுபடுத்திக் கொள்ள நறுமணம் மிக்க வாசனைத் திரவியங்களையும், விலையுயர்ந்த ஆடைகளையும் பயன்படுத்தியுள்ளனர் என்பதை சீவகசிந்தாமணிவழி உற்றுநோக்க முடிகின்றது.

மகளிர் ஓய்வு நேரங்களில் பல்வேறு விளையாட்டுக்களை ஆடி மகிழ்ந்துள்ளனர். அவற்றுள் பந்து விளையாட்டு மிகவும் குறிப்பிடத்தகுந்த விளையாட்டாக இடம்பெற்றிருந்துள்ளதை அறியமுடிகிறது.

சமூகத்தில் வீரமுள்ள ஆண்களை மட்டுமே மணந்து கொள்ள மகளிர் விரும்பியுள்ளனர். வீரத்தை நிலைநாட்ட ஆண்கள் ஆநிரைகளை அடக்கியுள்ளனர்.

மகளிர் திருமணமுறைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளதை அறியமுடிகிறது. திருமணத்திற்காகப் பல்வேறு பரிசுப் பொருட்கள் கொடுக்கப்பட்டுள்ள செய்தியை சீவகசிந்தாமணிவழி பெறப்படுகின்றது.

போரில் தோல்வியுற்ற பகைநாட்டு மகளிர்கள் வெற்றி பெற்ற அரசனுடைய நாட்டிற்கு அழைத்து வரப்பட்டுள்ளனர். அத்தகைய மகளிர் கோவில் பணிகளில் ஈடுபடுத்தப்பட்டுள்ள செய்தியையும் அறியமுடிகிறது.

போரில் உயிர்நீத்த மன்னனின் மனைவி, கணவனுடன் உயிர்நீத்த வரலாற்றை அறியமுடிகிறது. அதுபோல், போரில் பங்குபெற்ற வீரன் இறந்துபடுகிறபோது, அவனுடைய மனைவியும் இறந்துபடுதை சீவகசிந்தாமணியின் மூலம் அறியமுடிகிறது.

திருமணம் போன்ற மங்கள நிகழ்வுகளிலும், இறப்பு போன்ற துன்பமான ஈமச்சடங்குகளில் மகளிர் பங்களிப்பு செய்துள்ளனர்.

கணவனது இறப்பினை மகளிர் பெருந்துயராகக் கருதியுள்ளனர். தங்கள் கை வளையல்களையும், அணிகலன்களையும் களைந்து துக்கத்தை அனுசரித்துள்ளனர் என்ற செய்தியையும் இவ்வியல் விளக்கி நிற்கின்றது.

# சான்றெண் விளக்கம்

1. சீவகசிந்தாமணி, பா.45
2. மேலது, பா.46
3. மேலது, பா.49:1-2
4. மேலது, பா.50:1-2
5. மேலது, பா.89
6. பட்டினப்பாலை.22-25
7. சீவகசிந்தாமணி, பா.69:3.4
8. மேலது, பா.423
9. மேலது, பா.92
10. மேலது, பா.68
11. மேலது, பா.1562
12. மேலது, பா.47:3-4
13. மேலது, பா.399
14. மேலது, பா.1937:3-4
15. மேலது, பா.128
16. மேலது, பா.1937:3-4
17. மேலது, பா.429:1-2
18. மேலது, பா.541
19. மேலது, பா.472
20. மேலது, பா.184:1
21. மேலது, பா.383:1

22. நச்சினார்க்கினியர், (உ.ஆ.), சீவகசிந்தாமணி, ப.186
23. சீவகசிந்தாமணி, பா.632
24. மேலது, பா.634
25. மேலது, பா.2015
26. மேலது, பா.2054
27. நாலடியார், பா.86
28. சீவகசிந்தாமணி, பா.252
29. மேலது, பா. 292
30. மேலது, பா.294:3-4
31. மேலது, பா.1706
32. மேலது, பா.295
33. மேலது, பா.351
34. மேலது, பா.353
35. மேலது, பா.2221:1
36. மேலது, பா.355:1-2
37. மேலது, பா.2349
38. மேலது, பா.2355:1-2
39. தொல். பொருள். நூ.79:30-31
40. சீவகசிந்தாமணி, பா.1598
41. பெருங்கதை!, 36:279-21
42. சீவகசிந்தாமணி, பா.2344
43. மேலது, பா.154:3-4
44. மேலது, பா.78:1-2

45. மேலது, பா.2789:2-3
46. மேலது, பா.372:1-2
47. மேலது, பா.1207:2-4
48. மேலது, பா.107
49. மேலது, பா.108:3-4
50. மேலது, பா.110
51. மேலது, பா.1557:1-2
52. மேலது, பா.2376:2-4
53. மேலது, பா.67:1

# இயல் -3

# மகளிரும் காதலும்

மகளிரின் காதலுணர்வுகளைச் சீவக சிந்தாமணியில் திருத்தக்க தேவர் நுட்பமாக விவரித்துள்ளார். தமிழ் அகப்பொருள் மரபிற்கேற்ற மகளிர்தம் காதற் செயல்பாடுகள் சீவகசிந்தாமணியில் இடம்பெற்றுள்ளன. தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் குறிப்பிடும் மகளிர்க்குண்டான மெய்ப்பாடுகள் பற்றிய நிகழ்வுகளையும் சீவகனை விரும்பிய மகளிரின் காதலுணர்வுகளையும் சீவகசிந்தாமணிவழி வாயிலாக அறியமுடிகிறது. திருமணத்திற்கு முந்தைய இயற்கைப் புணர்ச்சியால் மகளிர் பெற்ற இன்பங்களையும் திருத்தக்க தேவர் விவரித்துள்ளார். சீவகன் சென்ற நாடுகளில் அவன் தோற்றத்தைக் கண்டு காதலுற்ற மகளிரின் உணர்வுகள், நிலைப்பாடுகள், பிரிவுத் துன்பங்கள் முதலியன காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன. நாடகக் கணிகையர் மற்றும் பரத்தமை ஒழுக்கம் பூண்ட மகளிரின் காதலுணர்வுகளும் நூலில் இடம்பெற்றுள்ளன. சீவகன் மணந்த எட்டுப் பெண்களும் சீவகனைத் திருமணம் செய்வதற்கு முன்பு அவன்மீது பிற மகளிர் கொண்ட காதலுணர்வுகள் ஆகியவற்றை வெளிப்படுத்தும் வகையில் இவ்வியல் அமைகின்றது.

## இளம் மகளிரின் காதற் செயல்பாடுகள்

காதல் உணர்வு கொண்ட இளமகளிரின் பல்வேறு செயல்பாடுகளைச் சீவக சிந்தாமணியில் திருத்தக்க தேவர் விவரித்துள்ளார். கன்னிப் பெண்கள் சீவகனைக் காமனே எனக் கருதி நோக்கியமையை,

**"நாம வென்றிவே னகைகொண் மார்பனைக்**
**காம னேயெனக் கன்னி மங்கையர்**
**தாம ரைக்கணாற் பருக"**[1]

எனத் திருத்தக்க தேவர் குறிப்பிட்டுள்ளார். கன்னிப் பருவத்து இளமங்கையர் தம் தாமரைக் கண்களால் சீவகனை நோக்கியதை இவ்வடிகளில் எடுத்துரைத்துள்ளார். இளம் மகளிர்தம் காதலரைத் தப்பாது நோக்கும் செயல்,

**"இழுதொன்று வாட்க ணிளையாரிளை யார்க ணோக்கிற்**
**பழுதின்றி மூழ்கும் பகழித்தொழில் காளை"**[2]

என இடம்பெற்றுள்ளது. இவற்றிலிருந்து இளமகளிரின் காதல் உணர்வுகள் பற்றியதான பதிவுகளை அறியமுடிகின்றன.

**உலா வரும் தலைவனைக் காணல்**

வேடுவர்களைப் போரில் வென்று நகர்க்கண் புகுந்த சீவகனைக் கண்ட இளம் மகளிர், தம் மின்னலைப் போன்ற இடை வருந்தும் வகையில் சீவகனைக் காண்பதற்காக ஓடி வந்தமையை,

**"இன்னமு தனைய செவ்வா யிளங்கிளி மழலை யஞ்சொற்**
**பொன்னவிர் சுணங்கு பூத்த பொங்கிள முலையி னார்தம்**
**மின்னிவர் நுசப்பு நோவ விடலையைக் காண வோடி**
**அன்னமு மயிலும் போல வணிநகர் வீதி கொண்டார்"**[3]

எனும் பாடல் உணர்த்துகின்றது. சீவகனைக் கண்ட அளவில் அவன் மீது காதல் கொண்ட சில மகளிர் தம் காதலுணர்வைத் தம் தோழியரிடம் தெரிவித்து ஆற்றாது நின்றனர் என்பதைப் பின்வரும் பாடல் வெளிப்படுத்துகிறது.

**"அம்முலை யமுத மன்னா ரகம்புலர்ந் தமர்ந்து நோக்கித்**
**தம்முறு விழும வெந்நோய்தந் துணைக்குரைத்து நிற்பார்"**[4]

எனும் பாடலடிகள் வாயிலாக இதனை அறியலாம்.

மேலும் சில மகளிர் கொண்ட காமநோய் காரணமாக அவர்தம் செவ்வாய் கருகியது; அழகு குன்றிற்று; கைவளைகள் கழன்றன. இதனை,

**"வட்டுடைப் பொலிந்ததானை வள்ளலைக் கண்ட போழ்தே**
**பட்டுடை சூழ்ந்த காசு பஞ்சிமெல் லடியைச் சூழ**

**அட்டராக் கனைய செவ்வா யணிநலங் கருகிக் காமக்**
**கட்டழ லெறிப்ப நின்றார் கைவளை கழலநின்றார்"[5]**

எனும் பாடற்கருத்தின் வாயிலாகத் திருத்தக்க தேவர் விளக்குகிறார்.

காதல் மிகுந்தமையால் பசலை படர்ந்த இளமகளிர் தம் பசலை தீரும் வகையில் சீவகனைக் கண்ணால் பருகினர். மகளிர்க்கே உரித்தான நாணம் தடுத்தமையால் அவர்கள் சீவகனைப் பின்தொடர்ந்து செல்லுதலைத் தவிர்த்தனர். இதனை,

**"வாண்முகத் தலர்ந்தபோலு மழைமலர்த் தடங்கண் கோட்டித்**
**தோண்முதற் பசலை தீரத் தோன்றலைப் பருகு வார்போல்**
**நாண்முதற் பாசந் தட்ப நடுங்கினார் நிற்ப நில்லான்**
**கோண்முகப் புலியொ டொப்பான் கொழுநிதிப் புரிசை புக்கான்"[6]**

என்ற இப்பாடற் கருத்தின் வாயிலாக, நாணம், அச்சம், மடம், பயிர்ப்பு எனும் மகளிர்க்குரிய பண்புகளையும் திருத்தக்க தேவர் சுட்டுகிறார்.

காந்தருவதத்தையுடன் யாழ்ப் போட்டியில் பங்குபெற வருகை தந்த சீவகனை இளம் மகளிர் விரும்பித் தம் காதலை வெளிப்படுத்தியமையை,

**"முருகு விம்மு கோதையார் மொய்ய லங்கல் வண்டுபோற்**
**பருகு வானி வணலம் பாரித் திட்ட விந்நகர்**
**உருகு மைங்க ணையொழித் துருவி னைய காமனார்**
**கருதி வந்த தென்றுதங் கண்கள் கொண்டு நோக்கினார்"[7]**

எனும் பாடற்கருத்து உணர்த்துகின்றது. மத்திம நாட்டின் நகர்க்கண் சென்ற சீவகனைக் கண்டு இளம் மகளிர் மகிழ்ச்சி அடைந்து, பின்னர் அவனைக் காணாமல் ஏக்கம் கொண்டதை,

**"வண்டுகொப் புளித்துணு மாலை மார்பனைக்**
**கண்டுவப் பளித்தவர் கடைக்க ணேக்கற**

**மண்டபப் பளிக்கறை மருக்கொர் மாநிழல்**

**கொண்டவற் களித்ததோர் குளிர்கொள் கொங்கையே"**[8]

எனும் பாடலின் வழி அறியமுடிகிறது.

இராசமாபுர நகரின் வழியே சென்ற சீவகனைக் கண்ட இளம் மகளிர், தம் அழகிய கண்களால் சீவகனை நோக்கிக் காதல் கொண்டமையை,

**"விண்ண கத்தினை யானன்ன மெய்ப்பொறி**

**அண்ண லைக்கழி மீன்கவர் புள்ளென**

**வண்ண வார்குழ லேழையர் வாணெடுங்**

**கண்ணெ லாங்கவர்ந் துண்டிடு கின்றவே"**[9]

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது. சீவகனை இளம் மகளிர், நிலவு போன்று அசையும் தம் கொங்கைகள் பாய, ஊடல் கொண்ட மகளிர் ஊடல் தீர்ந்த பின்னர் கூடுவதற்கு விரைந்து செல்வதைப் போன்று அவனைச் சூழ்ந்தமையை,

**"புலால்தலைத் திகழும் வைவேற் பூங்கழற் காலி னானை**

**நிலாத்தலைத் திகழும் பைம்பூ ணிழன்மணி வடத்தோ டேந்திக்**

**குலாய்த்தலைக் கிடந்து மின்னுங் குவிமுலை பாய வெய்தாய்க்**

**கலாய்த்தொலைப் பருகு வார்போற் கன்னியர் துவன்றி னாரே"**[10]

எனும் பாடல் புலப்படுத்துகிறது. கட்டியங்காரனைப் போரில் வீழ்த்திய பின்னர் மீண்டும் இராசமாபுரம் வந்த சீவகனைக் கண்ட இளம் மகளிர் காதல் ஏக்கத்தால் தம் கைவளையலை இழந்தமையை,

**"அம்புகை யார்ந்த வந்துகி லல்குல் வவிர்தோளாய்**

**அம்புகைக் காணா மையனைக் கையிற் றொழுதென்பார்"**[11]

எனும் பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது. இவ்வாறாக, அழகும் வீரமும், இளமையும் கொண்டு விளங்கிய சீவகனைக் கண்ட இளமகளிர் காதல் கொண்டும், காதல் ஏக்கத்தால் தவித்தும் நிற்கின்ற காட்சிகளையும் மேற்குறிப்பிட்ட பாடல்கள் வழியாக அறியமுடிகின்றன.

**அனங்கமாலையின் காதல் உணர்வு**

அனங்கமாலையின் நடனத்தைக் கட்டியங்காரனும் சீவகனும் ஒருங்கே காண்கின்றனர். சீவகனைக் கண்ட அனங்கமாலை அவன் மீது காதல் கொள்கிறாள். சீவகனை அடைய விரும்பிய அனங்கமாலை தன் உள்ளக் குறிப்பினை அவனுக்கு உணர்த்துவதை,

**"ஆடவர் மனங்க ளென்னு மரங்கின்மே லனங்க மாலை**
**ஆடினாண் முறுவ லென்னுந் தோழியை யையன் காண**
**ஓடரி நெடுங்க ணென்னு மோலையை யெழுதி விட்டாள்**
**வாடிய வாறு நோயு முரைத்துவார் கொடிய னாளே"**[12]

எனும் பாடற்கருத்து புலப்படுத்துகிறது. தன் நெடுங்கண்ணால் ஓலை எழுதி, அதனைப் புன்முறுவல் எனும் தோழிபால் கொடுத்து அவள் தூது அனுப்பியமையைத் திருத்தக்க தேவர் இப்பாடலில் அழகுற வருணித்துள்ளார். சீவகனை எண்ணி ஏங்கிய அனங்கமாலையின் காதலுணர்வு,

**"கலையினிற் கன்னி நீக்கித் தாமரைக் கண்க டம்மால்**
**முலையினி லெழுதிச் செவ்வாய் பயந்ததேன் பருகி முள்கும்**
**சிலைவல்லாய் புல்லு நம்பி சீவக சாமி யோவென்**
**றலைகடற் புலம்பி னோவா தரற்றுமா லணங்கி னன்னாள்"**[13]

எனும் பாடலில் இடம்பெற்றுள்ளது. கட்டியங்காரனைக் கொன்று சீவகன் அரசுரிமை ஏற்று ஆட்சிப் பொறுப்பில் இருக்கும் போது அனங்கமாலை அவனை நாடி வருகிறாள். கூத்தாடு களத்திலிருந்து கட்டியங்காரன் தன்னைப் பற்றி இழுத்துச் சென்று சிறை வைத்த பின்னர், தான் சீவகனை நினைத்து அழுது அரற்றியமையைச் சீவகனுக்குத் தன் தோழி வாமலேகை வாயிலாகக் கொடுத்தனுப்பிய கடிதத்தில் உணர்த்துகிறாள். காதல் துயரத்தில் சீவகனின் உருவத்தை ஓர் ஓவியமாகத் தீட்டி, அவனைப் போற்றியமையை,,

**“அன்னந் துஞ்சு மடிக்குடிலினுள் ளன்றியான் கொண்ட நாடகத்தினைத்**
**துன்னி நம்பி யுருவுதீட்டித் தொங்கல் வேந்து தொழுதாற்ற”**[14]

எனக் குறிப்பிடுகிறாள்.

**“கண்க டுஞ்சா கதிர்முத்தமே காலுங் கையார் வளைகழலுமாற்**
**பண்டுகொள் சொல்லார் மாமைநீங்கிப் பைம்பொன் போர்த்த படாமுலைகளும்**
**மண்கொள் வேன்மன்னர் நண்பின் மையைவை யக்கெல்லா முடனறையவோ”**[15]

என அனங்கமாலை குறிப்பிடுவதிலிருந்து கண்கள் துயிலாது, கைவளை கழன்று விழ, கொங்கைகளில் பசலை படரப் பிரிவுத்துயரால் அவளிருந்த நிலைமையை அறியமுடிகிறது.

**காந்தருவதத்தையின் காதல் உணர்வு**

காந்தருவதத்தையுடன் யாழிசைப் போட்டி நடத்துவதற்காகச் சீவகன் போட்டி நடைபெறும் மண்டபத்தில் வீற்றிருக்கிறான். போட்டி தொடங்குவதற்கு முன் சீவகனைக் கண்ட காந்தருவதத்தை கொண்டிருந்த காதலுணர்வு,

**“குட்டநீர்க் குவளை யெல்லாங் கூடிமுன் னிற்க லாற்றாக்**
**கட்டழ கமைந்த கண்ணா ணிறையெனுஞ் சிறையைக் கைபோய்**
**இட்டநாண் வேலி யுந்திக் கடலென வெழுந்த வேட்கை**
**விட்டெரி பொளுவ நின்றாளெரியுறு மெழுகி னின்றாள்”**[16]

என்ற பாடலில் இடம்பெற்றுள்ளது. தத்தை கொண்ட இக்காதல் உணர்வினைக் ‘கைம்மிகல்’ என்னும் மெய்ப்பாடாக நச்சினார்க்கினியர் சுட்டுகிறார். “கைம்மிகல் என்பது ஒழுக்கக் கேடு. அது சாதித் தருமத்தினை நீங்கினமை தன்னுள்ள நிகழ்ச்சியானே பிறர் அறியுமாற்றால் ஒழுகுதல்”[17] எனும் தொல்காப்பிய மெய்ப்பாட்டியல் கருத்துடன் ஒப்பிடுகிறார்.

சீவகனுடைய மார்பினைத் தழுவி அவனை அடையும் நாள் எந்நாளோ? எனக் காந்தருவதத்தை ஏங்கியதை,

**“இலைப்பொலி யலங்கன் மார்ப மியைவதென் றாகுங் கொல்லோ”[18]**

எனும் பாடலடி வாயிலாக அறியமுடிகிறது.

**“பூங்குழன் மகளிர் முன்னர்ப புலம்பனீ நெஞ்சே யென்றாள்**
**வீங்கிய காமம் வென்றார் விளைத்தலின் பத்தோ டொப்பாள்”[19]**

எனும் பாடலடிகள் வாயிலாக காந்தருவதத்தை கொண்ட, காதல் கைம்மிகுந்து தத்தை தன் நெஞ்சிற்குக் கூறி மயங்கியமையை,

**“கண்ணெனும் வலையி னுள்ளான் கையகப் பட்டிருந்தாள்**
**பெண்ணெனு முழலை பாயும் பெருவனப் புடைய நம்பி**
**எண்ணின்மற் றியாவ னாங்கொ லென்னிதற் படுத்த வேந்தல்**
**ஒண்ணிற வுருவச் செந்தீ யுருவுகொண் டனைய வேலான்”[20]**

என்ற பாடற்கருத்து புலப்படுத்துகிறது.

**காந்தருவதத்தையின் பிரிவுத் துயர்**

கூதிர்ப்பருவம் குறித்துப் பிரியக் கருதிய தலைமகனைத் தோழி அப்பருவத்திற்கு முன்பு நிகழ்கின்ற கார்காலத்தின் தன்மையும், அக்கார்காலம் தலைவியை வருத்தும் தன்மையையும் எடுத்துக்கூறி பிரிவை விலக்கும் அகத்துறைப் பாடல்கள் மூன்று காந்தருவதத்தையார் இலம்பகத்தில் இடம்பெற்றுள்ளன இதனை,

**“கன்னி நாகங் கலங்க மலங்கி**
**மின்னு மிரங்கு மழையென் கோயான்**
**மின்னு மழையின் மெலியு மரிவை**
**பொன்னாண் பொருத முலையென் கோயான்”[21]**

எனும் பாடலில், கன்னியாகிய காந்தருவத்தை தன்நிலை கெட்டுக் கலங்கும் வகையில் மேகம் மின்னி இடிக்கும் எனக் கூறுவேனோ? அல்லது பெய்கின்ற மழையினால் பொன் நாண் பூட்டிய கொங்கையை உடைய இக்காந்தருவதத்தை

மெலிவாள் என்பேனோ? எனத் தோழி கூறும் வகையில் இப்பாடற் கருத்து அமைந்துள்ளது. மேலும்,

**"கருவி வானங் கான்ற புயலின்**
**அருவி யரற்று மலையென் கோயான்**
**அருவி யரற்று மலைகண் டழுங்கும்**
**மருவார் சாயன் மணமென் கோயான்"**[22]

எனும் பாடலில், மின்னல், இடி ஆகியவற்றுடன் மேகம் பொழிந்த மழைநீரால் அருவிகள் ஒலிக்கும் என்பேனோ? அவ்வாறு அருவி ஒலிக்கும் மாமலையைக் கண்டு அழுங்கும் தலைவி மனம் வருந்த சொல்வேனா? எனத் தோழி குறிப்பிடுகிறாள். 'கார்காலத்தில் வானத்திலுள்ள விண்மீன்கள் போலக் காடுகள் மலர்ந்தன எனக் கூறுவேனோ? அல்லது காடு மலர வந்த கார்காலம் கண்டு தலைவியாகிய தத்தை அழுவாள் எனக் கூறுவேனோ? எனத் தோழி வருந்தியமை குறித்து,

**"வான மீனி னரும்பி மலர்ந்து**
**கானம் பூத்த காரென் கோயான்**
**கானம் பூத்த கார்கண் டழுங்கும்**
**தேனார் கோதை புரிந்தென் கோயான்"**[23]

என்ற பாடல் வாயிலாக அறிந்து கொள்ளமுடிகிறது.

**பருவம் கண்டு ஆற்றாமை**

இளவேனிற் பருவம் கண்டு ஆற்றாத தலைவிக்குத் தோழி கூறும் வகையில் அமைந்த மூன்று அகத்துறைப் பாடல்கள் வாயிலாகக் காந்தருவதத்தையின் காதலுணர்வினை அறியமுடிகிறது.

**"இலையா ரெரிமணிப்பூ ணேந்து முலையும்**
**சிலையார் திருநுதலுஞ் செம்பசலை மூழ்க**
**மலையா ரிலங்கருவி வான்போல மின்னும்**
**கலையார்தீங் சொல்லினாய் காணார்கொல் கேள்வர்"**[24]

இப்பாடலில், 'மாணிக்க அணிகலன்கள் அணிந்த கொங்கைகளையும், வில்லைப் போன்று வளைந்த நெற்றியும் பசலையில் மூழ்க, இசைக்கலை நிறைந்த சொல்லை உடைய தலைவியே! இதனை நம் தலைவன் காணார் போலும்' எனத் தொழி குறிப்பிடுகின்றாள். இக்கருத்தினைப் புலப்படுத்தும் வகையில் அமைந்துள்ள பாடலானது,

**"பிறையார் திருநுதலும் பேரமருண் கண்ணும்**
**பொறையார் வனமுலையும் பூம்பசலை மூழ்க**
**நிறைவா ளிலங்கருவி நீள்வரைமேன் மின்னும்**
**கறைவேலுண் கண்ணினாய் காணார்கொல் கேள்வர்"**[25]

என்ற பாடலிலும் இடம்பெற்றுள்ளது. 'முலையும், மென்தோளும், நுதலும் பசலையில் மூழ்கும் வகையில், கரும்பின் சுவை போன்ற இனிய மொழியைப் பேசும் தலைவியே இதனை நம் தலைவர் காணார் போலும் என்ற கருத்து,

**"அரும்பேர் வனமுலையு மாடமைமென் றோளும்**
**திருந்தேர் பிறைநுதலுஞ் செம்பச்லை மூழ்க**
**நெருங்கார் மணியருவி நீள்வரைமேன் மின்னும்**
**கரும்பார்தீஞ் சொல்லினாய் காணார்கொல் கேள்வர்"**[26]

என்ற பாடலில் இடம்பெற்றுள்ளது.

யாழ்ப்போரில் வென்ற சீவகனைக் கண்ட காந்தருவதத்தை, அவனுக்கு மாலை சூட்டிய பின்னர் நாணம் கொண்டு மயங்கியதையும், அவளை நாணத்தினின்றும் காக்கத் தோழியிர் திரைவிடுத்தமையையும்,

**"கோதையுந் தோடு மின்னக் குண்டலந் திருவில் வீச**
**மாதரம் பாவை நாணி மழைமினி னொசிந்து நிற்பக்**
**காதலந் தோழி மார்கள் கருங்கயற் கண்ணி னாளை**
**ஏதமொன் றின்றிப் பூம்பட் டெந்தி வெழினி வீழ்த்தார்"**[27]

எனும் பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

**துன்பமுற்று அரற்றுதல்**

காந்தருவதத்தையை யாழிசையில் வெல்ல இயலாத மன்னர்கள் ஒருங்கே கூடிச் சீவகனுடன் போர் தொடுக்க ஆயத்தமாயினர். இத்தகைய நிலை சீவகனுக்கு ஏற்பட்டமைக்காக வருந்திய காந்தருவதத்தையின் துன்ப நிலை,

**"துண்ணெ னெஞ்சின ளாய்த்துடித் தாயிழை**
**கண்ணி னீர்முலை பாயக் கலங்கினாள்**
**வண்ண மாக்கவின் சொல்லொடு மாய்ந்தே"**[28]

எனும் பாடலடிகளில் புலப்படுகிறது. கண்ணீர் பெருக்கெடுத்து ஓட அழுது புலம்பிய காந்தருவதத்தையைத் தோழி ஆற்றுவித்து அவள் கண்ணீரைத் துடைத்துத் தேற்றியதை,

**"பாழி நம்படை மேலதிப் பாரெலாம்**
**நூழி லாட்டி நுடக்கிக் குடித்திடும்**
**வாழி நங்கைகண் டாயென்று வாட்கணீர்**
**தோழி துரத்துகிற் றோகையி னீக்கினாள்"**[29]

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

**குணமாலையின் காதல் உணர்வு**

'அசனி வேகம்' என்ற பட்டத்து யானையிடமிருந்து குணமாலையைக் காக்கின்றான் சீவகன். தன்னைக் காத்த சீவகன் மேல் காதல் கொண்ட குணமாலை, அனைத்தையும் வெறுத்திருந்த நிலையை,

**"நிறத்தெ றிந்துப றித்தநி ணங்கொள்வேற்**
**றிறத்தை வெளவிய சேயரிக் கண்ணினாள்**
**பிறப்பு ணர்ந்தவர் போற்றமர் பேச்செலாம்**
**வெறுத்தி யாவையும் மேவல ளாயினாள்"**[30]

என்ற பாடலில், திருத்தக்க தேவர் எடுத்துரைத்துள்ளார். குணமாலையின் இந்நிலையை நச்சினார்க்கினியர், "வெறுத்து என்னுந்துணையும் புலம்பித்

தோன்றலென்னு மெய்ப்பாடு; செய்தகோலம் துணையொடு கழியப் பெறாதேயழிந்து சுற்றத்திடையும் தனியேதோற்றுதலின், மேவலளெனவே இன்பத்தை வெறுத்தலும், பசியட நிற்றலும் மெய்ப்பாடு"[31] எனக் குறிப்பிடுகிறார்.

காதலில் வருந்திய குணமாலை, தன் கொங்கையின் நடுவிடத்தை எருக்குவியலாகவும், தன் உயிரை இலக்காகவும் வைத்துக் காமதேவன் அம்பு எய்து வருத்துவதை,

**"கலத்தற் காலங்கல் லூரிநற் கொட்டிலா**
**முலைத்த டத்திடை மொய்யெருக் குப்பையா**
**இலக்க மென்னுயி ராவெய்து கற்குமால்**
**அலைக்கும் செஞ்சர மைந்துடை யாளரோ"**[32]

எனக் குணமாலை குறிப்பிடுகிறாள். வேள்வித் தீயிலிட்ட தாமரை மலர்போலத் தன்னுள்ளம் வெந்து வாடுவதால் சீவகனைத் தன்னிடம் விரைந்து கொண்டு வந்து தாருங்கள் எனத் தேவர்களைக் குணமாலை வேண்டுவதை,

**"பூமி யும்பொறை யாற்றருந் தன்மையால்**
**வேமென னெஞ்சமும் வேள்வி முளரிபோற்**
**றாம மார்பசைன் சீவக சாமியைக்**
**காம னைக்கடி தேதம்மின் றேவீர்காள்"**[33]

எனும் பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது. தன் உள்ளத்தில் காமவேட்கை மிகுந்தமையைப் பிறருக்கு வெளிக்காட்ட விரும்பாத குணமாலை, அதனைத் தன் நெஞ்சில் நிறுத்தியமையை,

**"கண்ணும் வாளற்ற கைவளை சோருமால்**
**புண்ணும் போன்று புலம்புமென் னெஞ்சரோ**
**எண்ணின் மிக்கது பெண்ணல தில்லையே"**[34]

என்ற பாடற்கருத்து புலப்படுத்துகிறது. காம வேட்கை மிகுதியானமையால், ஆடவர்க்கே உரிய மடலூரும்செயலைப் பெண்ணாகிய குணமாலை மேற்கொள்ளக் கருதியமையை,

**“சோலை வேய்மருள் சூழ்வளைத் தோளிதன்**
**வேலை மாக்கடல் வேட்கைமிக் கூர்தர**
**ஓலை தாழ்பெண்ணை மாமடலூர்தலைக்**
**கால வேற்றடங் கண்ணி கருதினாள்”[35]**

எனும் பாடல்வழி அறியமுடிகிறது. எல்லையற்ற காமம் உடல் முழுவதும் நின்று சுட்டாலும், மடலூரும் புலனெறிவழக்கம் பெண்ணிற்கு இல்லாமையை இப்பாடல் வழியாகக் குணமாலை எடுத்துரைக்கின்றாள்.

## கிளித்தூது

தலைவனாகிய சீவகன் மேல் கொண்ட காதலால் பலவாறு ஏங்கிய குணமாலை, இறுதியில் தான் வளர்த்த கிளியைச் சீவகன் பால் தூதனுப்புகிறாள்.

**“களிகொள் காமத்திற் கையற வெய்தித்தன்**
**கிளியைத் தூதுவிட் டாள்கிளந் தென்பவே”[36]**

எனும் பாடலடி இதனை விளக்குகிறது. சீவகன்பால் சென்ற கிளி குணமாலையின் துன்ப நிலையைச் சீவகனிடம் எடுத்துரைக்கிறது.

**“பூவணை யழலின்மேற் சேக்கும் பொன்செய்தூண்**
**பாவைதான் பொருந்துபு நிற்கும் பற்பல்கால்**
**ஆவியா வழலென வுயிர்க்கு மையென**
**மேவிப்பூ நிலமிசையிருக்கு மெல்லவே”[37]**

“**பணித்தகு கோலமும் பந்தும் பார்ப்புறாள்**
**மணிக்கழங் காடலண் மாமை தான்விளர்த்**
**தணித்தகை யாழினோ டமுதம் விட்டொரீஇத்**
**துணைப்பெரு மலர்க்கணிற் றுயிலு நீங்கினாள்”[38]**

எனும் இப்பாடல்கள் வாயிலாக, மலர்ப்படுக்கையும் குணமாலைக்கு நெருப்பாக இருந்தமையையும், பலமுறை பெருமூச்செறிந்து அவள் வருந்தி அழுதமையையும் அறியமுடிகிறது. மேலும், எந்தவொரு கோலத்தையும் அவள் புனைந்து கொள்ளாமல், தோழியருடனும் விளையாடாமல், பொன்னிறம் வெளுத்து, உணவை

மறந்து, தூக்கத்தைக் கைவிட்டு இருந்தமையைக் கிளி சீவகனிடம் எடுத்துரைக்கிறது.

**"திருந்துவேற் சீவக சாமி யோவெனும்**
**கருங்கடல் வெள்வளை கழல்ப வோவெனும்**
**வருந்தினேன் மார்புறப் புல்லு வந்தெனும்**
**பொருந்துபூங் கொம்பென பொருவின் சாயலே"**[39]

'சீவக சாமியே! எனச் சீவகன் பெயரைக் கூறி அழைக்கும் குணமாலை, தன் சங்கு வளையல்கள் கழன்று விழுந்தமைக்காக வருந்தியமையை இப்பாடற்கருத்து புலப்படுத்துகிறது.

**"கன்னிய ருற்றநோய் கண்ண னார்க்கும்**
**தின்னதென்று றுரையலர் நாணி னாதலான்"**[40]

எனத் தூது வந்த கிளி, சீவகனிடம் குறிப்பிடுவதிலிருந்து காதல் கொண்ட கன்னிப் பெண்களின் உள இயல்புகளைத் திருத்தக்க தேவர் எடுத்துரைக்கிறார். கன்னிப் பெண்கள், தாம் கொண்ட காதல் நோயினைத் தாம் கண்ணாகக் கருதுகின்றவர்களுக்கும் தமது நாணத்தால் கூறமாட்டார்கள் என்ற கருத்தினை இப்பாடலடிகள் உணர்த்துகின்றன.

**குணமாலை கூடலிழைத்தல்**

சீவகன்பால் சென்ற கிளியின் நிலையை அறியாத குணமாலை, சீவகனைத் தவம் செய்து அடைந்திட வேண்டும் அல்லது தன் உயிரை மாய்த்துக் கொள்ள வேண்டும் என்று மனதில் எண்ணுகிறாள்.

**"அந்தோ குணமாலைக் காகா தென்றுலகம்**
**நொந்தாங் கழமுயன்று நோற்றானு மெய்துவனே"**[41]

இவ்வாறு தன் மனதுக்குள் எண்ணிய குணமாலை, மணற்பரப்பில் கூடலிழைத்துச் சீவகனைக் கூடுவேனோ? என ஆய்ந்தமையை,

**“சென்றார் வரைய கருமஞ் செருவேலான்**
**பொன்றாங் கணியகலம் புல்லப் பொருந்துமேற்**
**குன்றாது கூடுகெனக் கூறிமுத்த வார்மணன்மேல்**
**அன்றாங் கணியிழையா ளாழி யிழைத்தாளே”[42]**

என்ற பாடல் வாயிலாக அறியமுடிகிறது.

“கூடலாவது வட்டமாகக் கோட்டைக் கீறி, அதுக்குள் சுழிசுழியாகச் சுற்றும் சுழித்து, இவ்விரண்டு சுழியாகக் கூட்டினால் இரட்டைப் பட்டால் கூடுகை, ஒற்றைப் பட்டால் கூடாமை என்று ஸங்கேதம். என்பார் பெரியவாச்சான் பிள்ளை”[43] எனக் கூடலிழைத்தல் குறித்து உ.வே.சாமிநாதையர் விளக்கமளிக்கிறார். காதல் துயரில் மூழ்கிய மகளிர், தாம் விரும்பிய காதலனை அடைந்திட இயலுமா? என எண்ணி, இத்தகைய செயல்களில் ஈடுபட்டமையைக் குணமாலையின் செயல் வாயிலாக அறியமுடிகிறது.

**காதல் மடல்**

தூதனுப்பிய கிளியின் வாயிலாகச் சீவகனின் மடலைப் பெற்ற குணமாலை பெரிதும் மகிழ்வெய்துகிறாள். அப்போது அவள் அடைந்த இன்பத்தை,

**“நூல்புடைத்தாற் போற்கிடந்த வித்தகஞ்சேர் நுண்வரிகள்**
**பான்மடுத்துத் தீந்தேன் பருகுவாள் போனோக்கிச்**
**செல்படுத்த கண்ணீர் சுமந்தளைஇ மெய்ம்மகிழ்ந்து**
**மால்படுத்தாள் மார்பின் மணந்தாளே போன்மகிழ்ந்தாள்”[44]**

எனும் பாடல்வழி அறிந்து கொள்ள முடிகிறது. ‘நூலறிவைத் தெளிந்து வைத்தது போலிருந்த சீவகனின் திறன்மிக்க எழுத்தின் வரிகளைக் குணமாலை, பாலில் இனிய தேனைக் கலந்து பருகுவாள் போன்று இனிமையுறப் படித்து மகிழ்ந்து இன்பமடைந்ததை இப்பாடற்கருத்து விளக்குகிறது. அம்மடலிலிருந்த எழுத்துகளைக் குணமாலை, தெய்வமாகக் கருதி வணங்கியமையை,

**“பாலவியும் பூவும் புகையும் படுசாந்தும்**
**காலவியாப் பொன்விளக்குந் தந்தும்மைக் கைதொழுவேன்”**[45]

எனும் பாடலடிகள் விளக்குகின்றன.

**வேற்றுவரைவு மறுத்தல்**

சீவகனைத் தன் உள்ளத்தில் நினைத்து காதல் கொண்ட குணமாலையிடம், செவிலித்தாய், குணமாலையின் தாய்வழி மாமன் மகனுக்கு மணம் செய்துவிக்கத் தந்தையான குபேரமித்திரன் விரும்பியதை எடுத்துரைக்கிறாள்.

மாமன் மகன் அழகிற் சிறந்தவன் என்றும், பெருஞ்செல்வத்தையும் நற்குணத்தையும் உடையவன் என்றும் செவிலி குறிப்பிட்டு, ‘அவனுக்கு உன்னைத் தருவதற்கு உன் பெற்றோர் எண்ணியுள்ளனர்’ எனக் கூறுகிறாள். இதனைக் கேட்ட குணமாலை, தன்னை யானையிடமிருந்து காப்பாற்றிய சீவகனை மணந்து அவனுக்கு அடிமைத் தொண்டு செய்வதன்றி வேறு ஒருவனுடன் வாழ்வதற்குத் தான் உடன்படேன் எனக் குறிப்பிட்டுத் தன் தந்தையும் தாயும் சீவகனை மணப்பதற்கு உடன்படவில்லையெனில் தான் இறந்துபடுவேன் அல்லது தவத்தினை மேற்கொள்வேன் எனக் குறிப்பிடுவதை,

**“கந்துகப் புடையிற் பொங்குங் கலினமா வல்லன் காளைக்**
**கெந்தையும் யாயு நேரா ராய்விடி னிறத்த லொன்றோ**
**சிந்தனை பிறிதொன் றாகிச் செய்தவ முயற லொன்றோ**
**வந்தா னாளை யென்றாள் வடுவெனக் கிடந்த கண்ணாள்”**[46]

எனும் பாடற்கருத்தின் வாயிலாக அறியலாம். குணமாலையின் உள்ளத்திலிருப்பதை அறிந்த செவிலித்தாய் முறையாக அறத்தொடு நற்றாய்க்கு அறத்தொடு நிற்கிறாள்.

**“துகண்மனத் தின்றி நோற்ற தொல்வினைப் பயத்தி னன்றே**
**தகணிலாக் கேள்வி யான்கட் டங்கிய தென்று பின்னும்**
**மகண்மனங் குளிர்ப்பக் கூறி மறுவலும் புல்லிக் கொண்டாய்**
**ககன்மனைத் தாய்க்குச் சொன்னா னவளுந்தன் கேட்குச் சொன்னாள்”**[47]

எனச் செவலித்தாய் வாயிலாகக் குணமாலை, சீவகனிடம் கொண்ட காதலை அறிந்த நற்றாயான வினயமா மாலை, தன் கணவனுக்கு அறத்தொடு நிற்கிறாள். குபேரமித்திரனும் தன் மகள் விருப்பத்திற்கு உடன்பட்டமையை,

**"வினையமா மாலை கேள்வன் குபேரமித் திரற்குச் சொல்ல**
**அனையதே பட்ட தென்றா லையனே நங்கைக் கொத்தான்**
**வனையவே ட்ட போலு மணிமருண் முலையி னாளைப்**
**புனையவே பட்ட பொற்றார்ப் புண்ணிற் கீது மென்றான்"[48]**

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

**பதுமையின் காதல்**

பாம்பு கடித்தமையால் மயங்கிக் கிடந்த பதுமையைச் சீவகன் பஞ்சநமஸ்கார மந்திரங்களைத் தியானித்து உய்விக்கிறான். உடலினின்று நஞ்சு நீங்கப்பெற்ற பதுமை, சீவகனைக் கண்ட அளவில் காதல் கொண்டு நோக்குகிறாள்.

**"நோக்கினா ணிறையு நாணு மாமையுங் கவினு நொய்திற்**
**போக்கினாள் வளையும் போர்த்தாள் பொன்னிறப் பசலைமூழ்கிற்**
**றாக்கினா ளருங்க னப்புத் தூணியை யமரு ளானா**
**நோக்கிய முருக னெ.்.க மோரிண் டனைய கண்ணாள்"[49]**

எனும் பாடலடிகள், சீவகனை நோக்கிய பதுமை, தன் மனத்திண்மை, நாணம், நிறம், அழகு, கைவளை ஆகியவற்றை வரைந்து இழந்து, தன் மேனியைப் பசலையால் போர்த்திக் கொண்டாள். 'பதுமையின் உடலெங்கும் மன்மதனின் அம்புகள் மூழ்கின' எனும் கருத்தை மேற்சுட்டிய பாடல் எடுத்துரைக்கிறது. காதல் வேட்கை மிகுந்த பதுமை பெருமூச்செறிந்தமையை உணர்ந்த சீவகன் அவள் உடலெங்கும் சந்தனம் பூசியதைப் போன்று தடவிக் கொடுக்க, அமிழ்த மொழியினை உடைய பதுமையின் நிலையினை,

**"மற்ற மாதர்தன் வாட்டடங் கண்களால்**
**உற்ற நோக்க முறாததொர் நோக்கினிற்**

**சுற்றி வள்ளலைச் சோர்வின்றி யாத்திட்டாள்**

**அற்ற மில்லமிர் தாகிய வஞ்சொல்லாள்"[50]**

எனும் பாடல் மூலம் உணர்த்துவதைப் பார்க்கமுடிகின்றது. பதுமை, தனது வாள்போன்ற பெரிய கண்களால், தன் காதற்குறிப்பைப் பிறர் அறிந்து ஐயுறாதவாறு சீவகனைக் கண்டு, அவனைத் தன் அன்பினால் பிணைத்தாள்.

மலர்ப்படுக்கையில் வீற்றிருந்த பதுமை உறக்கமின்றிக் காதல் நினைவில் மூழ்கி வருந்தியமையை,

**"நகைவெண் டிங்களு நார்மட லன்றிலும்**
**தகைவெள் ளேற்றணற் றாழ்மணி யோசையும்**
**பகைகொண் மாலையும் பையுள்செய யாம்பலும்**
**புகையில் பொங்கழல் போற்சுடு கின்றனவே**
**பூமென் சேக்கையு ணாற்றிய பூந்திரட்**
**டாமம் வாட்டுந் தயைவு யிர்ப்பளைஇக்**
**காமர் பேதைதன் கண்டரு காமநோய்**
**யாமத் தெல்லையொர் யாண்டொத் திறந்ததே"[51]**

என்னும் பாடல்களால் அறியமுடிகிறது. இராப் பொழுதில் காதல் நினைவால் துயில் மறந்த பதுமைக்கு ஓர் இராப்பொழுதும் ஓர் ஆண்டு போல இருந்தமையை இப்பாடற் கருத்து உணர்த்துகின்றது.

**இயற்கைப் புணர்ச்சி**

மலர்ப்பொழிலில் சீவகனை நினைத்துத் தனியே இருந்த பதுமையைச் சீவகன் காண்கிறான். தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமி போன்று அழகுடன் இருந்த பதுமையைக் கண்டு 'காந்தருவ மணமே' தமிழர்க்கு உரிய உண்மையான திருமணம் எனக் கருதிய சீவகன் அவளை இயற்கைப் புணர்ச்சியில் புணர விரும்பியதை,

**"தேவர் பண்ணிய தீந்தொடை யின்சுவை**
**மேவர் தென்றமிழ் பெமய்ப்பொரு ளாதலின்**

**கோவத் தன்னமென் சீறடிக் கொம்பனாள்**

**பூவர் சோலை புகுவலென் றெண்ணினான்''**[52]

எனும் பாடற்கருத்து புலப்படுத்துகிறது. "மேவரு தமிழ் - நாடகவழக்கும் உலகியல் வழக்கும் பொருந்துதல் வரும் அகப்பொருளில் மெய்ப்பொருளென்றது, முதற்கந்தருவமன்றிச் சுட்டியொருவர் பெயர் கொள்ளப்பட்டு ஐந்து நிலம்பெற்ற கந்தருவமாகிய உலகியல் வழக்கான இயற்கைப் புணர்ச்சியை''[53] என இப்பாடற்கருத்திற்கு நச்சினார்க்கினியர் விளக்கம் அளிக்கிறார்.

சீவகன் பெயரும் பதுமையின் பெயரும் சுட்டப்படுவதால் இந்நிகழ்வினைக் காந்தருவமாக நச்சினார்க்கினியர் குறிப்பிடுகிறார். சீவகனும் பதுமையும் களவின்பத்தில் பெற்ற இயற்கைப் புணர்ச்சி இன்பத்தை,

**"அல்லி சேரணங் கன்னவட் காயிடைப்**

**புல்லி நின்ற மெய்ந் நாண்புறப் பட்டது**

**கல்செய் தோளவன் காமரு பேருணர்**

**வெல்லை நீங்கிற் றியைந்தன ரென்பவே''**[54]

எனும் பாடல் வாயிலாக அறியமுடிகிறது. பதுமையின் நாணம் அவளை விட்டு விலகிச் செல்ல, திண்ணிய தோளை உடைய சீவகனின் பேரறிவாகிய தன்னுணர்வும் எல்லை மீறிச் செல்ல இருவரும் கூடினர். இந்நிலையில் பதுமையின் நிலையை,

**"களித்த கண்ணிணை காம்பென வீங்குதோட்**

**டெளித்த வெள்வளை சேர்ந்தது மாமையும்**

**தளித்த சுண்ணஞ் சிதைந்தன குங்குமம்**

**அளித்த் பூம்பட் டணிந்து திகழ்ந்ததே''**[55]

எனத் திருத்தக்கதேவர் விளக்கியுள்ளார். பதுமையின் இரு கண்களும் களிப்பெய்த, தோள்களில் அணிந்திருந்த வெள்ளிய சங்குகள் ஒலிக்க, மேனியில் பூசிய

சுண்ணமும் குங்குமமும் அழியும் வகையில் சீவகன் புணர்ந்தமையை இப்பாடற்கருத்து எடுத்தியம்புகிறது.

**கேமசரியின் காதலுணர்வு**

தக்க நாட்டிலுள்ள கேமமாபுர நகர வணிகன் சுபத்திரனின் மகள் கேமசரியாவாள். அவள் முதன் முதலில் எந்த ஆடவனைக் கண்டு நாணமுறுகிறாளோ, அவனே அவளுக்குக் கணவனாவான் எனும் சோதிடக் குறிப்பிற்கேற்ப, சுபத்திரன் அவளுக்கேற்ற கணவனைத் தேட முயலும்போது சீவகனைச் சந்தித்து அவனைத் தன் இல்லத்திற்கு அழைத்து வருகிறான். அச்சமயம் சீவகனைக் கண்ட கேமசரியின் நிலையை,

**"இலங்குபூங் கொடியென் வேழை நோக்கமும்**
**உலங்கொடோ ளுறுவலி நோக்கு மொத்தவே"**[56]

எனத் திருத்தக்க தேவர் விளக்குகிறார். சீவகனைக் கண்டவுடன் கேமசரி வேட்கை மிகுதியால் தன் கைவளையல்களை இழந்தாள். அவள் உடலிலிருந்த மாமை நிறமும் அகன்றது. நாணமும் கெட்டுச் சீவகன்மீது காதல் கொண்டு அவள் உருகி நிற்கிறாள். இதனை,

**"கண்ணுறக் காளையைக் காண்டலுங் கைவளை**
**மண்ணுறத் தோய்ந்தடி வீழ்ந்தன மாமையும்**
**உண்ணிறை நாணுமு டைந்தன வேட்கையும்**
**ஒண்ணிறத் தீவினைத் தாளுருக் குற்றாள்"**[57]

எனும் பாடற்கருத்து உணர்த்துகிறது.

**"காதன்மை கண்ணுளே யடக்கிக் கண்ணெனும்**
**தூதினாற் றுணிபொரு ளுணர்த்தித் தான்றமர்க்**
**கேதின்மை படக்கரந் திட்ட வாட்கணோக்**
**கோதநீ ரமுதமு முலரும் விற்குமே"**[58]

எனும் பாடலில் கேமசரி, தான் கொண்ட காதலுணர்வைக் கண்ணிற்குள் அடக்கி, கண்கள் வழியாகத் தன் காதலைச் சீவகனிடம் தூதுவிடுத்து, அக்காதலைப் பிறர் அறியாவண்ணம் மறைத்த கேமசரியின் காதற்திறத்தை சீவகன் எடுத்துரைப்பதாக இப்பாடல் அமைகின்றது.

**அநங்கமாவீணை**

சீவகன் வனகிரி என்னும் மலையை ஒட்டிய சோலையில் இருந்தபோது, அழகுநிறைந்த அநங்கமாவீணை என்பவள் சீவகனின் அழகைக் கண்டு மயங்கிக் காதறுகிறாள்.

**"எண்ணத்தி லியக்கி யென்றே யிருப்பமற் றெழுதலாகா**
**வண்ணப்பூங் கண்க ளம்பா வானுதற் புருவம் வில்லா**
**உண்ணிறை யுடைய னுருவச்சா தகத்துக் கேற்பப்**
**பெண்ணலங் கிடந்த பேதை பெண்ணலங் கனிய நின்றாள்"**[59]

என்ற பாடல்வரிகள், காதல் கொண்ட அநங்கமாவீணையின் நிலையினை உணர்த்துகின்றது. தோழியருடன் வனத்தில் விளையாடிக்கொண்டிருந்த தன்னை விஞ்ஞையன் ஒருவன் விண்ணில் எடுத்துச் செல்ல, கற்புடைய அவன் மனைவியால் விடுவிக்கப்பெற்றமையால் இந்த வனத்தில் வீழ்ந்ததாக அநங்கமாவீணை சீவகனிடன் தன் வரலாற்றைக் கூறித் தன்மீது இரங்கித் தன்னை ஏற்றுக் கொள்ளாவிட்டால் தன் உயிரை மாய்த்துக் கொள்வதாகக் குறிப்பிடுவதை,

**"தாயிலாக் குழவி போலச் சாதுய ரெய்து கின்றேன்**
**வேயுலாந் தோளி னார்தம் விழுத்துணைக் கேள்வநிற்கண்**
**டாயினேன் துறக்கம் பெற்றே னளித்தரு ளாதுவிட்டாற்**
**றீயினு ளமிரம் பெய்தாங் கென்னுயிர் செகுப்ப வென்றாள்"**[60]

என்ற பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது. இருப்பினும் சீவகன் அவள் காதலை ஏற்றுக் கொள்ளாது பெண்ணுடலின் இழிதன்மையை எடுத்துரைக்கிறான். அவ்வாறே மனைவியைப் பிரிந்து ஆற்றாது வருந்தும் பவதத்தனிடம் மகளிர்

இயல்பை எடுத்துரைத்து, தன் மந்திரவலிமையால் பவதத்தன் மீது அநங்கமாவீணையை ஆசைகொள்ள வைக்கிறான்.

**கனகமாலையின் காதலுணர்வு**

மத்திம நாட்டு மன்னன் தடமித்தன் மகன் விசயனுக்கு விற்பயிற்சி அளிப்பதற்காகச் சீவகன் அந்நாட்டிலிருந்தான். மலர்ப்பொழிலொன்றிலிருந்த சீவகன் மலர்மாலைகள் பலவற்றைத் தொடுக்கிறான். கனகமாலையின் தோழியர் அம்மாலைகளைச் சீவகனிடமிருந்து பெற்றுச் சென்று கனகமாலையிடம் அளிக்கின்றனர். மாலையிலிருந்த மலர்களில் சீவகன் எழுதியனவற்றைப் படித்த கனகமாலை, சீவகன் மீது காதல் கொண்டு புணர்ச்சியை விரும்புகிறாள்.

**“மின்னுக் குழையும் பொற்றோடு மிளிர வெருத்த மிடங்கோட்டி**
**என்னு மிமையா னினைத்திருந்தா ளியக்கி யிருந்த வெழிலொத்தாள்”**[61]

காதல் கொண்டு உடல் மெலிவுற்ற கனகமாலையின் நிலையினை,

**“தொடிதோ ணடப்பத் தோடேம்பத் துணைவெம் முலைகள் பசப்பூர**
**நெடுமாத் தோகை மென்சாய”**[62]

என்ற பாடல்வழி குறிப்பிட்டுள்ளார். காதல் கைம்மிகுந்து ஆற்றாத கனகமாலை, பலவாறான மொழிகளைத் தன் நெஞ்சிற்குக் கூறுகிறாள். ‘காமத் தீயால் வெந்த கனகமாலை, பெருமூச்செறிந்து, தான் பிறர் நகைப்பிற்கு இடமாகியமைக்காக வருந்துகிறாள்.

**“வேமென் னெஞ்ச மெய்வெதும்பும் விடுக்கு மாவி வெய்துயிர்க்கும்**
**பூமென் குழலார் புறநோக்கி நகுவார் நகுவ தாயினேன்**
**தாம மார்பன் றான்புனைந்த தண்ணெண் மாலை புணையாக**
**யாமக் கடலை நீந்துவேன் யாரு மில்லத் தமியனே”**[63]

சீவகன் அளித்த மாலையைத் தெப்பமாகக் கொண்டு இரவாகிய கடலைத் தான் நீந்திச் செல்வதை இப்பாடலடிகளில் கனகமாலை புலப்படுத்துகிறாள். காமவேட்கை மிகுந்த அவளது நிலையை,

**"கொம்பு வெந்தீயிடைப்பட்ட தொத்தாள் விரைசெய் கோதையே"[64]**

எனத் திருத்தக்க தேவர் குறிப்பிடுகிறார். காதல் மிகுதியால் கனகமாலை, தீயிடை அகப்பட்ட பூங்கொம்பு போன்று இருந்தமையை இப்பாடலடி உணர்த்துகிறது. மேலும்,

**"மணிநிற மாமை சாயல் வளையொடு வண்டு மூசும்**
**அணிநிறப் போர்வை யாய வரும்பெற னாணும் விற்றுப்**
**பணிநலம் புதிய துண்டான் பன்மலர் மலை கொண்டேன்**
**பிணிநிறப் புறஞ்சொ லென்னும் பெருமிஞி றார்ப்ப வென்றாள்"[65]**

என்ற பாடலில், நீலமணி போன்ற நிறத்தையும், மென்மை இயல்பையும், வளையல்களையும் சீவகனிடம் விற்றுவிட்டுச் சீவகன் கொடுத்த மலர் மாலையையும், அதனால்பெற்ற காதல் நோயையும், பிறரது புறஞ்சொற்களையும் தான் பெற்றுக்கொண்டதைக் கனகமாலை வருந்தி உரைக்கிறாள்.

தன் காதலைச் சீவகனுக்கு உணர்த்த விரும்பிய கனகமாலை, அநங்கவிலாசினி எனும் தோழியிடம் மணிமாலையைக் கொடுத்துத் தூது அனுப்புகிறாள். சீவகன் மீது கொண்ட காதல் நோயால் உடல் வருந்திய கனகமாலைக்கு அநங்கவிலாசினி உள்ளிட்ட தோழியர், பலவழிகளில் அவள் துயரைப் போக்கிட முயலுகின்றனர். அவள் மார்பில் குளிர்ந்த சந்தனக் குழம்பைப் பூசி உடல் வெப்பத்தைத் தணிக்கின்றனர். இருப்பினும் சீவன்அளித்த மாலை மட்டுமே அவள் காமக் கடலைக் கடப்பதற்குத் தெப்பமாக விளங்கியதை,

**"கொம்மை வெம்முலையிற் சாந்தங் குளிர்செயா தாவிவாட்ட**
**அம்மென் மாலை முகங்கரிய நீர்துளும்ப நின்று நீடி**
**வெம்மை மிக்க துவிரன் றொடுத்த விளங்கு மாலை**
**பொம்மெ லோதிக்குத் தானே துணையாம் புணை யாயிற்றே"[66]**

என்ற பாடல்வழி அறியமுடிகிறது.

**விமலையார் இலம்பகம்**

இளமகளிரின் சாந்து பூசப்பெற்ற கொங்கைகள், தவ நிலையில் இருக்கும் ஆடவரின் சிந்தனையைக் குலைத்து அவர்களை இல்லறத்தில் ஈடுபடச் செய்யும் தன்மையுடையன என்ற கருத்து,

**“கத்தி கைக்கழு நீர்கமழ் கோதையர்**
**பத்தி யிற்படு சாந்தணி வெம்முலை**
**சித்தி யிற்படர் சிந்தையி னாரையும்**
**இத்தி சைப்படர் வித்திடு நீரவே”**[67]

என்ற பாடலில் இடம்பெற்றுள்ளது.

**விமலையின் காதலுணர்வு**

தோழியருடன் பந்து விளையாடிக் கொண்டிருந்த விமலை, தெருவில் விழுந்த பந்தினை எடுப்பதற்காகச் சென்றபோது அவ்வழியே வந்த சீவகனைக் காண்கிறாள் என்பதை,

**“நீர்தங்கு திங்கண் மணிநீணிலந் தன்னு ளோங்கிச்**
**சீர்தங்கு கங்கைத் திருநீர்த்தண் டுவலை மாந்திக்**
**கார்தங்கி நின்ற கொடிகாளையைக் காண்ட லோடு**
**பீர்தங்கிப் பெய்யா மலரிற்பிறி தாயி னாளே”**[68]

எனும் பாடலில், சீவகனைக் கண்ட அளவில் மேனியெங்கும் பசலை பூத்துப் பழம்பூவைப் போன்று விமலையின் உடல் வேறுபட்டமையை இப்பாடற்கருத்தின் வழியாக அறியமுடிகிறது. பெண்களுக்கே உரித்தான நாணத்தையும், கற்பையும், மெல்லிய சாயலையும் உடைய விமலை, சீவகன் மீது காதல் கொண்டு அவனை மன்மதனோ என ஐயுறுகிறாள்.

**“பெண்பா லவர்கட் கணியாய்ப்பிரி யாத நாணும்**
**திண்பா னிறையுந் திருமாமையுஞ் சேர்ந்த சாயல்”**[69]

என விமலையின் பண்புலன் குறிப்பிடப்பட்டுள்ளது. இத்தகைய தன்மை உடைய விமலை, மகளிர் ஆடவர்பால் கொண்ட காதல் உணர்வினை,

**“என்றா ணினைந்தா ளிதுபோலுமிங் வேட்கை வண்ணம்**
**சென்றே படினுஞ் சிறந்தார்க்கு முரைக்க லாவ**
**தன்றா யரிதா யகத்தேசுட் டுருக்கும் வெந்நீ**
**ஒன்றே யுலகத் துறுநோய்மருந் தில்ல தென்றாள்”**[70]

எனும் பாடற்கருத்து விளக்குகிறது. ‘காதல் வெம்மையினால் இறக்க நேர்ந்தாலும் அதனைப் பெற்றோர்க்கு உணர்த்திடவும் இயலாது; பொறுத்திடவும் இயலாது; உலகில் உள்ள நோய்களில் எல்லாம் மருந்தில்லாத நோய் இதுவேயாகும் என விமலை கையற்றுப் புலம்புகிறாள். மேலும், பெண்களைக் காமம் எனும் பெருந்தீயானது பற்றினால், அவர்தம் நிறை முற்றிலும் அழிகிறது. காமம் எனும் தீ பற்றாவிட்டால் நிறையில் குறை நேர்வதில்லை. காம நோயைப் பிறர் அறியாவண்ணம் மறைக்கும் போது உடலில் பசலை நோய் தோன்றி, அந்நோயே மகளிர் கொண்ட காதலைப் பறையறைந்து பிறர்க்குத் தெரிவிக்கிறது’ எனக் காதல் கொண்ட மகளிரின் நிலையை விமலை எடுத்துரைக்கிறாள். இக்கருத்தினை,

**“நிறையாது மிலலை நெருப்பிற்சுடுங் காம முண்டேற்**
**குறையா நிறையி னொருகுன்றியுங் காம மில்லை**
**பறையா யறையும் பசப்பென்று பகர்ந்து வாடி**
**அறைவாய்க் கடல்போ லகன்காம மலைப்ப நின்றாள்”**[71]

எனும் பாடலில் இடம்பெற்றுள்ளன.

### சுரமஞ்சரியின் காதலுணர்வு

சுரமஞ்சரியின் கன்னி மாடத்தில முதுமைக் கோலத்திலிருந்த சீவகன், அங்கிருந்த இளம் மகளிர் மயங்கும் வகையில் இன்னிசைப் பாடல்களைப் பாடுகிறான். சீவகனை அடைந்திட வேண்டும் எனப் பெருவிருப்புக் கொண்ட சுரமஞ்சரி தன் தோழியருடன் சென்று காமன் கோவிலில் சென்று வழிபடுகிறாள்.

இந்நிலையில் சீவகன் இளமைக் கோலத்துடன் அங்கே தோன்றுகிறான். இருவரும் காதல் மிகுந்து கூடுகின்றனர். இக்கூட்டத்தைத் தமிழ் அகப்பொருள் மரபிற்கேற்ற கூடல் என்பதைத் திருத்தக்க தேவர்,

**“கலைபுறஞ் சூழ்ந்த வல்குற் கார்மயிற் சாய லாளும்**
**மலைபுறங் கண்ட மார்பின் வாங்கிற் றடக்கை யானும்**
**இலைபுறங் கண்ட கண்ணி யின்றமி ழியற்கை யின்பம்**
**நிலைபெற நெறியில் றுய்த்தார் நிகர்தமக் கிலாத நீரார்”**[72]

என விவரிக்கிறார். மயில்போன்ற சாயலை உடைய சுரமஞ்சரியும், கண்ணியை அணிந்த மார்பை உடைய சீவகனும் தமிழ் அகப்பொருள்நூல் கூறிய இயற்கைப் புணர்ச்சியாகிய இன்பத்தைத் துய்த்தமையை இப்பாடல் விளக்குகின்றது.

தான் பெற்ற புணர்ச்சி இன்பத்தால் மகிழ்ந்த சுரமஞ்சரி, தன் காதலை முறையாகத் தோழிக்கு ‘அறத்தொடு நின்று’ உணர்த்துவதை,

**“பொற்பமை தாமக் கந்து பொருந்திய மின்னுப் போல**
**எற்பக வெரியு மாலைப் பவளத்தூண் பொருந்தி யின்னீர்க்**
**கற்பெனு மாலை வீசி நாணெனுங் களிவண் டோப்பிச்**
**சொற்புக ரின்றித் தோழிக் கறத்தினோ டரிவை நின்றாள்”**[73]

என்ற பாடல்வழி அறியலாம். இனிய தன்மையை உடைய மாலையை வீசி, நாணம் என்னும் களிப்புடைய வண்டை ஒட்டிச் சுரமஞ்சரி தன் தோழியிடம் அறத்தொடு நின்றமையை இப்பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

### இலக்கணையின் காதலுணர்வு

விதேக நாட்டில், மன்னனும் சீவகனின் மாமனுமான கோவிந்தனின் அரண்மனையில் வீற்றிருந்த சீவகனை, மன்னன் மகளான இலக்கணை தன் தோழியருடன் காண்கிறாள். இதனை,

**“தாமரைப் போதிற் பூத்த தண்ணறுங் குவளைப் பூப்போற்**
**காமரு முகத்திற் பூத்த கருமழைத் தடங்கண் டம்மாற்**
**றேமலர் மார்பி னாளை நோக்கினாள்”**[74]

எனும் பாடலில், காதலுணர்வு மிகுந்து இலக்கணை பெருவிருப்புக் கொண்டு சீவகனை நோக்கியமையைக் காணமுடிகின்றது.

### மகளிர் ஊடல்

**“கண்ணுளார்நுங் காதல ரொழிககாம மீங்கென**
**வண்ணிலாய வேட்கையா லூடினாரை யாடவர்**
**வண்ணமே கலைகளைப் பற்றவற் றுதிர்ந்தன**
**எண்ணில்பொன் சுடுநெருப்புக்கமுற்ற மொத்தவே” (சீவக, பா.72)**

என்ற பாடலடிகள், உம்மால் காதலிக்கப்பட்ட மகளிர் உம் கண்களில் உள்ளனர். ஈங்குக் காமம் ஒழிக என மகளிர் ஊடல் கொள்வதை உற்றுநோக்க முடிகிறது.

### இன்பம் துய்த்தல்

காதலுற்றவர்கள் காதல் இன்பத்தில் மூழ்கி எல்லையற்ற இன்பத்தில் மூழ்குகின்றார்கள் காப்பியப் பெண்கள். காதலுற்று இன்பத்தில் திளைத்து மகிழ்ந்ததையும் ஆனந்தக் களிப்பில் மூழ்கி அளவற்ற மகிழ்ச்சியில் இருந்ததையும் களவின்பம் குறிப்பிடுகின்றது.

மனத்தால் ஒன்றுபட்ட தலைவனும் தலைவியும் மணம் புரிவதற்கு முன் ஒருவர் மீது ஒருவர் கொண்ட அன்பினால் இணைந்து வாழும் இன்பமே களவின்பம். களவு வாழ்வில் தலைவியைக் கண்டு இன்புறும் தலைவன், தலைவி இன்பத்தின் எல்லையை அடையும் படி இன்ப சொல்லின் மூலம் தலைவியை மதிமயக்கி இன்பத்தில் திளைத்து மகிழ்வடைகின்றனர் என்பதை அறியமுடிகின்றது.

**தத்தையின் களவின்பம்**

அழகிற்கு எல்லை இல்லை எனக் கூறும்படியாக அழகினைப் பெற்ற தத்தை, வண்டுகள் மொய்க்கும் மலா்க் கூந்தலையுடையவள் தத்தை. சீவகனைக் கண்டவுடன் கைகூப்பி வணங்கும் காமனைக் கண்ணிற் கண்டவா்கள் எந்த அளவு இன்பம் எய்துவாரோ அந்த அளவு இன்பம் அடைந்து இருந்தாள் என்பதை பாடல் விளக்குகிறது.

**“குட்டநீர்க் குவளை யெல்லாம் கூடிமுன் நிற்றல் ஆற்றாக்**
**கட்டமுகுடைய கண்ணாள் நிறையெனும் சிறையைக்கைபோய்**
**இட்டநாண் வேலி யுந்திக் கடல்என எழுந்த வேட்கை**
**விட்டெரி கொளுவ நின்றாள் எரியுறு மெழுகின் நின்றாள்” (சீவக, பா.710)**

சீவகனை கண்ட தத்தை மகிழ்ச்சியால் கண்கள் சிவந்து இன்பம் அடைகின்றாள் நாணம் என்கிற வேலியைக் கடந்து காமம் என்னும் நெருப்பு பற்றி எறிய தீயில் விழுந்தமெழுகைப் போலப் உள்ளம் உருகி நின்றாள் என்ற களவின்பங்களை விவரித்துக் கூறுகின்றது காப்பியம்.

**குணமாலையின் களவின்பம்**

சீவகனைக் கண்டு காதல் கொண்ட குணமாலை சீவகனின் காதல் கடிதத்தைக் கண்டு மகிழ்ச்சியடைந்த காட்சியை,

**“நூல் புடைத்தாற் போன்றினிய வித்தகஞ்சேர் நுண்வரிகள்**
**பால்படுத்துத் தீந்தேன் பருகுவாள் போல் நோக்கிச்**
**சேல்படுத்த கண்ணீா் சுமந்தளைஇ மெய்ம்மகிழ்ந்து**
**மால்படுத்தான் மாா்பின் மணந்தாளே போல் மகிழ்ந்தாள்” (சீவக, பா.1044)**

என்ற பாடல் வரிகள் புலப்படுத்துகின்றது. சீவகன் எழுதிய கடிதத்தைக் கண்டு பாலில் தேன் கலந்து பருகுவது போன்று இனிமையாகப் படித்து அழகான கண்களில் உவகைக் கண்ணீா் பெருகும்படி உடல் குளிா்ந்து இன்பத்தில்

மூழ்குகிறாள். சீவகனைக் கண்டு அவனுடைய மார்பைத் தழுவியது போன்று இன்பம் அடைகிறாள். சீவகன் தந்த கடிதத்தின் வார்த்தைகளே தத்தைக்கு இன்ப ஊற்றெடுக்கச் செய்தது என்பதை உணரமுடிகின்றது.

**பதுமையின் களவின்பம்**

சீவகனை மலர்ப்பொழிலில் கண்டு அவன் மீது ஆசை கொண்டு, அவனும் அவள் மீது ஆசை கொண்டு இன்பமுற்று இருந்தனர் என்பதை பாடல்கள் விளக்குகின்றது.

**"களித்த கண்ணினை காம்பென வீங்குதோள்**
**தேளித்த வெள்வளை சேர்ந்தது மாயையும்**
**தளித்த சுண்ணஞ் சிதர்ந்தன குங்குமம்**
**அளித்த பூம்பப் பணிந்து திகழ்ந்ததே" (சீவக, பா.1330)**

இன்பத்தில் திளைத்த அவளுடைய கண்கள் மகிழ்ச்சியில் திளைத்தன. தோள்களில் அணிந்த சங்கு வளைகள் ஒலித்தன. மேனியின் வனப்பும் மீண்டும் வந்தடைந்தது. சுண்ணமும் குங்குமக் குழம்பும் அழிந்து ஆடை நீக்கிப் பட்டுடையுடன் மேனி திகழும்படி களவின்பம் அடைந்தனர். மலரினை பதுமையின் தலையில் சூடி, கூந்தலைச் சரிசெய்து பூமாலையை வைத்து, இன்பமுறப் பாராட்டியதால் அவள் ஆறுதல் அடைகின்றாள் பதுமையும் சீவகனும் இவ்வாறு களவின்பத்தில் மூழ்கி மகிழ்ந்தனர்.

**கேமசரியின் களவின்பம்**

சீவகன், கேமசரி இருவருக்கும் இடையேயான இன்பம் பற்றி பாடல் வரிகள் கூறுகின்றது.

**"கோதையும் குழலும் பொங்கக் குவிமுலைக் குழங்கன்மாலைப்**
**போதுகப் பொருது பூணும் பொருகடல் முத்தும் மூழ்கக்**
**காதலும் களிப்பும் மிக்குக் கங்குலும் பகலும் விள்ளார்**
**சாதலும் பிறப்பும் இல்லாத் தன்மைபெற் றவர்கள் ஒத்தார்" (சீவக, பா.1494)**

எனும் பாடல், இன்பத்தில் திளைத்த இருவரும், தன்னிலை மறந்து இன்பமுற்று இருக்கின்றனர். கூந்தல் கலைந்து, வாசனையுடைய மாலையின் மலர்கள் சிந்தப்பட்டு, ஒருவரோடு ஒருவர் புணர்ந்த காதலினால் மகிழ்ச்சி மிகக் கொண்டு, இரவும் பகலும் பிரியாதவர்களாக, தேவர்களைப்போல் இறப்பு, பிறப்பு இன்றி உள்ள தன்மையோடு இன்பம் களித்தனர் என்று இப்பாடல்வழி அறியமுடிகிறது.

**கனகமாலையின் களவின்பம்**

வில்வித்தைப் பயிற்சியில் சீவகன் பேறுபெற்று அதன் பயனாய் மன்னன் கனகமாலையைச் சீவகனுக்கு மணம் செய்விக்கிறான். அதன்பின்பு அவர்களின் களவின்பத்தை காமவல்லிக் கென போன்றும் அமுதத்தை இடைவிடாது பருகுபவனைப் போன்றும் உடலால் அவள் கலங்காத வண்ணம் அவள் அழகினை சீவகன் கூறுகிறான் அதனால் கனகமாலை இடைவிடாமல் இன்பம் அடைகிறாள் என்பதை,

**“ஒண்மணிக் குழைவில் வீச ஒளிர்ந்து பொன் னோலைமின்ன**
**வண்ணமே கலைகள் ஆர்ப்ப வான்சிலம் பொலிப்ப முத்தும்**
**கண்ணியும் பசும்பொன் நானும் கதிர்முலை புடைப்பக்கமெர்**
**அண்ணலஸ் குமரன் தன்னோ டாயிழை யாபினாமள” (சீவக, பா.1689)**

எனும் பாடலடிகள், மணிக்குண்டம் வீச, பொன்னோலை ஒளிர, மேகலைகள் ஒலி செய்ய, சிலம்பின் ஒலி ஒலிக்க, முத்து மாலையும், தலை மாலையும் கொங்கையைத் தாங்கி நிற்க, விருப்பத்தோடு கனகமாலை இன்ப நீராடுகிறாள் இருவரும் பிணைக்கப்பட்டு இன்பக் களிப்பில் மகிழ்ந்திருந்தனர்.

**விமலையார் களவின்பம்**

ஜோதிடக் கூற்றுப்படி விமலையின் தந்தையின் கடையில் உள்ள பண்டம் விற்றுத் தீர்ந்து அதன் காரணமானவன் எவனோ அவனே விமலையின் கணவன் என்று குறிப்பிட்டுள்ளார். சீவகன் வந்து பண்டம் விற்றுத் தீரவும் சீவகனே

விமலையின் கணவன் ஆகிறான். பந்து விளையாடிய விமலையின் அழகில் மயங்கிய சீவகன் அவள் மீது காதல் கொண்டு அவளை நோக்குகிறான், அவளும் அவனை நோக்குகிறாள். பின் பெற்றோரின் சம்மதத்தோடு இருவரும் மணம் செய்து கொண்டு இன்பத்தில் களிப்புற்று இருந்தனர் என்பதை,

**“தொழித்துவண் டிமிருங் கோதை துணைமுலை முள்கப் பூம்பட்**
**டழித்துமட் டொழுகுந் தாரான் மணிவள்ளத் தாய்ந்த தேறல்**
**எழிற்பொலி மாதாக கேந்தல், இனிதினி நுகா்ந்து காமக்**
**கொழித்திரை கடலுள் மூழ்கிக் கோதை கண்டுயின்ற அன்றே” (சீவக, பா.1986)**

என்ற பாடல் வரிகள், விமலையின் கொங்கை இன்பத்தில் மூழ்க, தெளிந்த மதுவை விமலைக்குத் தந்து அவள் அதை குடித்துக் காமக்கடலில் மூழ்கிய இருவரும் தன்னிலை மறந்து மகிழ்வுடன் இருக்கின்றனா். விமலை பஞ்சனையின் மேல் ஓவியப் பாவை போலிருந்தாள் என்பது புலப்படுகின்றது.

**சுரமஞ்சரியார் களவின்பம்**

சீவகன் மீது உள்ள காதலில், அவன் சுண்ணப் பொடி காரணமாக சுரமஞ்சரிக்கு எதிராகச் சொன்ன முடிவில், சீவகன் மீது கோபம் கொண்டு ஆடவரைக் காணாத சுரமஞ்சரி இறுதியில் சீவகனைக் கண்டு விருப்பம் கொண்டு இன்பம் அடைகிறாள். இதனை,

**“கலைபுறஞ் சூழ்ந்த அல்குற் காா்மயிற் சாய லாளும்**
**மலைபுறங் கண்ட மாா்பின் வாங்குவில் தடக்கை யாலும்” (சீவக, பா.2063)**

எனும் பாடலில், இருவரும் தமிழ் அகப்பொருள் கூறும் முறைப்படி இயற்கைப் புணா்ச்சி கொண்டு முறைப்படி துய்த்தனா். மேனியை குளிரச் செய்து, அவளது மகிழ்ச்சி அடைய செய்யவும் காதல் மொழியினைக் கூறுகிறாள்.

**“வானாா் கமழ்மதுவும் சாந்தும் ரந்தி**
**மதுத்துளித்து வண்டுஞ் சுரும்புமூசுந்” (சீவக, பா.2065)**

என்ற பாடல், இருவரும் இன்பத்தில் முழ்கி அதன் எல்லையை அடைந்து காதல் மொழி பேசிக்கொண்டு மகிழ்ச்சியில் திளைத்திருந்தனர் என்பதை உணர்த்துகின்றது.

**இலக்கணையார் களவின்பம்**

சீவகனின் மாமன் மகளான இலக்கணையைப் பன்றிப் பொறி இயந்திரத்தை வென்று திருமணம் செய்து கொள்கிறான் சீவகனைக் கண்ட இலக்கணை கண்ணாலே இன்பம் அடைகின்றாள் என்பதனை,

**“திருநிறக் காம வல்ல திருக்கவின் கொண்டு பூத்துப்**
**பெருநிறங் கவின் யார்ந்த கற்பகம் பினைந்த தே போல்**
**அருநிறக் குரிசில் மார்பத் தசைந்தனள் அலங்கல் வேலும்**
**நெரிபுறத் தடற்று வாளும் நீலமும் நிகர்த்த கண்ணாள்” (சீவக, பா.2517)**

என்ற பாடல் அழகிய கண்களையுடைய இலக்கணை, அழகிய நிறமுடைய காமவல்லிக்கொடி, கற்பக மரத்தைத் தழுவிக் கிடப்பதைப் போல அரிய நிறமுடைய சீவகன் மார்பிலே சாய்ந்து அயர்ந்து தூங்குகிறாள். இருவரும் இன்பக் களிப்பில் மூழ்கிப் பின்னிப் பிணைந்து காணப்பட்டனர் என்பதைக் காட்சிப்படுத்துவதாக இவ்வரிகள் புலப்படுகின்றது.

**தொகுப்புரை**

காப்பியத்தில் இடம்பெற்றுள்ள மகளிர்களுள் குறிப்பிடத்தகுந்த எட்டுப் பெண்களும், பிற பெண்களும், பரத்தையரும் சீவகனைக் காமன் போல் கருதி நேசித்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

சீவகன் உலாவரும் போது பருவமகளிர் அனைவரும் வெளியில் வந்து, சீவகனை நோக்கி தங்கள் காதல்மொழியைப் பாடினர் என்ற செய்தியைப் பெறப்பட முடிகின்றது. பசலை கொண்ட மகளிர் சீவனைக் கண்களால் காதல் கொண்டு, தங்கள் பசலை நோயினைத் தீர்த்துக் கொண்டனர் என்ற பதிவினைக் காணமுடிகிறது.

எட்டுப் பெண்களும் சீவகனை வெவ்வேறு வகையில் காதல் கொண்டுள்ளனர். அனங்கமாலையின் காதலுக்கு ஓலையில் எழுதிய காதல் கடிதம் தூதாக அமைகின்றது.

கைம்மிகல் என்னும் உத்தியின் அடிப்படையில் காந்தர்வதத்தையின் காதல் வெளிப்பாடு அமைந்துள்ளது. அதாவது, காந்தர்வதத்தை களவு வாழ்வில் சீவகனின் மார்பினைத் தழுவ விருப்பம் கொண்டவளாகத் திகழ்கின்றாள்.

மதம் கொண்ட பட்டத்து யானையின் மதம் அடக்கி, குணமாலையைக் காப்பாற்றியதன் விளைவாக, குணமாலை சீவகனை மனம் விரும்பி, தன் காதலைத் தெரிவிக்கின்றாள்.

பாம்பு தீண்டியதால், உயிருக்குப் போராடிய பதுமையினைக் காப்பாற்றிய சீவகனின் அருள ் உள்ளம் கண்டு பதுமை, சீவகனை விரும்புகின்றாள்.

உலகில் யாதொரு ஆடவரையும் காண்கின்றபோது, நாணம் கொள்ளாத கேமசரி, சீவகனைக் கண்டதும் நாணம் கொள்கின்றாள், நாணம் கொண்ட அவள், தான் நாணமடைவதற்குக் காரணமான சீவகனைக் காதலித்து மணம் புரிகின்றாள்.

கனகமாலையின் சகோதரனுக்கு வில்வித்தைப் பயிற்சியளித்த சீவகனின் திறன் கண்டு, கனமாலை சீவகனைக் காதல் கொள்கின்றாள். பந்து விளையாடுவதில் சிறப்பு கண்ட சீவகன், விமலையின் மீது காதல் கொண்ட நிகழ்வினை ஆசிரியர் காட்சிப்படுத்தும் பாங்கினைக் காணமுடிகின்றது.

சுரமஞ்சரி, சீவகனின் யாழிசையில் மயங்கிக் காதல் கொண்ட காட்சியைக் காணமுடிகின்றது. இவ்வாறாக, எட்டுப் பெண்களும் வெவ்வேறு வகைகளில் சீவகனைக் காதல் கொள்கின்றனர் என்பதைக் காணமுடிகிறது.

எட்டுப் பெண்களைத் தவிர, பிற மகளிரும் சீவகன் மீது காதல் கொள்ளும் பதிவுகளையும் இவ்வியல் விரிவாக இயம்புகின்றது.

# சான்றெண் விளக்கம்

1. சீவகசிந்தாமணி, பா.412:1-3
2. மேலது, பா.445:1-2
3. மேலது, பா.457
4. மேலது, பா.465:3-4
5. மேலது, பா.468
6. மேலது, பா.489:3-4
7. மேலது, பா.706
8. மேலது, பா.1622
9. மேலது, பா.1949
10. மேலது, பா.1950
11. மேலது, பா.2332.:3-4
12. மேலது, பா.683
13. மேலது, பா.687
14. மேலது, பா.2588:2-3
15. மேலது, பா.2588
16. மேலது, பா.710
17. நச்சினார்க்கினியர், (உ.ஆ.), சீவகசிந்தாமணி, ப.355
18. சீவகசிந்தாமணி, பா.711:4
19. மேலது, பா.712:3-4
20. மேலது, பா.713
21. மேலது, பா.724

22. மேலது, பா.725

23. மேலது. பா.726

24. மேலது, பா.732

25. மேலது, பா.733

26. மேலது. பா.734

27. மேலது. பா.740

28. மேலது, பா.760:2-4

29. மேலது, பா.762

30. மேலது, பா.993

31. நச்சினார்க்கினியர், (உ.ஆ.), சீவகசிந்தாமணி, ப.499

32. மேலது, பா.995

33. மேலது, பா.996

34. மேலது, பா.998

35. மேலது, பா.999

36. மேலது, பா.1001:3-4

37. மேலது, பா.1025

38. மேலது, பா.1026.

39. மேலது, பா.1027.

40. மேலது, பா.1028:1-2

41. மேலது, பா.1036:3-4

42. மேலது, பா.1037

43. உ.வே.சாமிநாதையர்,(ப.ஆ.), சீவகசிந்தாமணி, ப.522

44. மேலது, பா.1044

45. மேலது, பா.1045:1-2

46. மேலது, பா.1050

47. மேலது, பா.1052

48. மேலது, பா.1053

49. மேலது, பா.1291

50. மேலது, பா.1295

51. மேலது, பா.1315

52. மேலது, பா.1328

53. மேலது, ப.675

54. மேலது, பா.1329

55. மேலது, பா.1330.

56. மேலது, பா.1471:3-4

57. மேலது, பா.1472

58. மேலது, பா.1485

59. மேலது, பா.1571

60. மேலது, பா.1581

61. மேலது, பா. 1658.3-4

62. மேலது, பா.1659:3-4

63. மேலது, பா.1663

64. மேலது, பா.1664:4

65. மேலது, பா.1665

66. மேலது, பா.1674

67. மேலது, பா.1946

# இயல் -4

# மகளிரும் கற்பு வாழ்க்கையும்

சீவகசிந்தாமணி தமிழின் அகமரபுக் கூறுகளைத் தன்னகத்தே கொண்டு திகழ்கிறது. அகமரபுக் கூறுகளில் களவும், கற்பும் குறிப்பிடத்தகுந்தனவாகும். கற்பியல் சார்ந்த வாழ்வியல் முறைகளைத் தொல்காப்பியர் அகத்திணையியல், கற்பியல் என்னும் இயல்களில் விளக்கப்படுத்தியுள்ளார். சீவகசிந்தாமணியில் கற்பியல் சார்ந்த கூறுகள் இடம்பெற்றுள்ளன என்ற வகையில், சீவசிந்தாமணி காப்பியக் காலச் சமூகத்தில் ஆண்களின் புறத்தொழுக்கம் கடியப்படவில்லை. இதனால், ஆண்கள் பல பெண்களை மணந்து கொள்ளலாம் என்றும் மனைவியைத் தவிர ஏனைய விலை மாதர்களுடன் கூடி வாழலாம் என்றும் இலக்கியம் குறிப்பிடுகின்றது. சீவகன் தன் வாழ்நாளில் ஒருவனுக்கு ஒருத்தி என்ற கோட்பாட்டில் வாழவில்லை, மாறாக எண் வகை மகளிரை மணமுடிக்கின்றான். கற்பு வாழ்க்கை என்பது தமிழ்ச் சூழலில் ஒரு ஆணும், பெண்ணும் சேர்ந்து வாழ்க்கை நடத்தும் ஒரு வாழ்வியல் மனித சமுதாயப் பண்பாட்டின் வளர்ச்சி என்றும் புனிதமான களம் என்றும் கூறலாம். இவ்வகையில், சீவசிந்தாமணியில் இடம்பெற்றுள்ள மகளிரின் கற்பியல் வாழ்க்கையை எடுத்துரைக்கும் வகையில் இவ்வியல் அமைந்துள்ளது.

**கற்பு**

தொன்மையான பண்பாடுகளைக் கொண்ட தமிழ் மக்களின் மணவாழ்க்கை முறைகள், குறித்துத் தொல்காப்பியர் கூற்று வழியாக அறியமுடிகிறது. இதனை,

**“காமஞ் சான்ற கடைக் கோட்கால**

**ஏமஞ்சான்ற கடைக் கோட்கால**

**அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்**

**சிறந்து பயுற்றல் இறந்ததன் பயனே தொல்.**"[1]

என்று குறிப்பிட்டுள்ளார். இந்நூற்பாவின் பொருள், மணநாள் பார்த்தல் மங்கல நீர் கொண்டு வருதல் முகூர்த்தம் அறிந்து கூறுதல், நிறைகுடம் வைத்தல் ,அம்மி மிதித்தல், அருந்ததி பார்த்தல், தெய்வங்களை வழிபடுதல். மணச்சடங்கு, தீவலம் வருதல், விருந்தோம்பல் உள்ளிட்ட அடிப்படையான மரபுகளைப் பின்பற்றி திருமணம் நடக்கும் என்று, திருமண முறைகளைப் பட்டியலிடுகின்றார் தொல்காப்பியர். அந்தவகையில் தொல்காப்பியர் காலத்திலும் அதற்கு முன்பும் மேற்குறித்த கருத்தின் அடிப்படையில், திருமணங்கள் நடைபெற்றுள்ளன, என்பதை அறியலாம். தமிழரின் திருமண முறைகளைப் போன்று, வடமொழியில் இருந்து தழுவல் செய்யப்பட்ட சீவகசிந்தாமணியிலும் இடம்பெற்றுள்ளதை அறியமுடிகின்றன.

## சிந்தாமணியில் திருமணம்

காப்பியக் காலத்தில் தலைவனும், தலைவியும் ஒருவரை ஒருவர் கண்டு கதைத்துக் காதல் கொண்டுள்ளனர். அதன்பின்புதான், தலைவன் தலைவியரின் காதல் செய்தி பெற்றோர்களின் செவிக்குச் சென்றடைந்துள்ளது. பின்னர், தலைவன் தலைவியரின் வீட்டார் சம்மதத்துடன் திருமணம் நடைபெற்றிருக்கிறது. சீவகனின் எட்டு மணங்களும் காதலித்து பின்பு கற்பு என்னும் திருமணத்தில் முடிந்தனவாக அறியமுடிகிறது. அந்தவகையில், சீவகசிந்தாமணியில் இடம்பெற்றுள்ள திருமண நிகழ்வுகளும், சீவகன் எட்டு மகளிரைக் காதலித்து மணமுடித்த பதிவுகளும் பின்வருமாறு கூறப்படுகிறது.

**சச்சந்தன் - விசயை திருமணம்**

சீவக சிந்தாமணி மணநூல் என்ற பெயரையும் பெற்றுள்ளது. இதற்கு காரணம் அக்காப்பியத்தில் பதிவாகியுள்ள மிகுதியான திருமணங்கள் ஆகும். காப்பியத் தலைவன் சீவகனின் பெற்றோரான சச்சந்தனுக்கும், விசயைக்கும் நடைபெற்ற திருமணம் குறித்த பதிவு காப்பியத்தின் முதன்மைப்பதிவாக இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. சச்சந்தன், விசயை காதல் விருப்பங்கொண்டு இருந்ததை அறிந்த மன்னன், மைத்துனன் என்ற உறவுமுறையால் தன் மகளைப் பெரு மன்னனாகிய சச்சந்தனுக்குத் திருமணம் செய்து வைக்கிறான். இதனை,

**“மருமகன் வந்ததும் மங்கை ஆக்கமும்**
**அருமதிச் சூழ்ச்சியின் அமைச்சர் எண்ணிய**
**கருமமும் கண்டவர் கலத்தற்பான்மையில்**
**பெருமகன் சேர்த்தினார் பிணையனாளையே”**[2]

என்று இப்பாடல் விளக்குகின்றது. முதல்மணம் அரசமகளிரை மணம் புரிய வேண்டும் என்ற காப்பியக் கொள்கையின்படி சச்சந்தன், விசயைத் திருமணம் குறித்தான பதிவு சிந்தாமணி காப்பியத்தில் இடம்பெற்றுள்ளது.

**கோவிந்தை திருமணம்**

கோவிந்தையாரின் திருமணம் பற்றிய செய்தியும் இக்காப்பியத்தில் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. கோவிந்தை ஆயர்குலப் பெண் என்பதால் சீவகன் அவளை திருமணம் செய்ய இயலாத நிலை ஏற்படுகிறபோது, பதுமுகன் திருமணம் புரிகின்றான்.

சீவகன் சிறப்புற்று வரும் நாளில், இராசமாபுரத்து ஆயர்களுடைய நிரைகளைக் கவர்ந்து சென்ற வேடர் கூட்டத்தை, அரசனது வீரர் படைகள் வெல்ல

இயலாமல் புறமுதுகிட்டு ஓடின. சீவகன் தன் தோழர்களுடன் படை மேற்கொண்டு "ஆளற்றமின்றி" வேடர்களுடன் போரிட்டு அவர்களைத் துரத்திவிட்டு ஆநிரையை மீட்டுத் தருகிறான். இத்தகு அரிய செயலுக்குப் பரிசாக ஆயர்குலத் தலைவன் நந்தகோன் தனது மகள் கோவிந்தை என்பவளைச் சீவகனுக்கு மணம் செய்ய எண்ணுகிறான்.

சீவகன் அரசவம்சத்தைச் சார்ந்தவன் என்பதால், கோவிந்தையை மணம் புரியாமல், தன் தோழருள் ஒருவனான பதுமுகனுக்குக் கோவிந்தையைத் திருமணம் செய்து வைக்கின்றான்.

ஆயர்குலத் தலைவன் நந்தகோன் மகள். ஆயர்குலப் பெண் ஆதலால் மரபுப்படி முதலில் திருமணம் புரிவது சரியானது அல்ல எனக் கருதி தம் அரசகுல மகளிரை முதல் மணம் புரிய வேண்டும் என்று மனதுள் எண்ணிய சீவகன் கோவிந்தையைப் பதுமுகனுக்கு மணம் முடிக்க எண்ணி, கோவிந்தையை பதுமுகனுக்குத் தர வேண்டவும், நந்தகோனும் இசைந்தான். இவ்வகையில், சீவகனின் ஆயர்குலப் பெண்ணை மணமுடிக்காத நிலைப்பாட்டிலிருந்து, அவனுடைய மனதில் உள்ள வருண சாஸ்திர சிந்தனை வெளிப்படுவதை இங்கு அறியலாம். சீவகன் தன்னிகரற்ற தலைவன் ஆதலால் எட்டுப்பெண்களை மணந்தான் ஆனால் பதுமுகன் சமூக மனிதன் என்ற முறையில் அவனுக்கு ஒரு மணம் செய்வித்தனர் என அறியமுடிகிறது.

**சடங்கு முறைகள்**

முல்லை நிலத்தைச் சார்ந்த கோவிந்தையின் திருமணத்தில் பல்வேறு வகையான சடங்குமுறைகள் செய்யப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றன. முல்லையும், இருவாட்சியும் கொண்டு மணப்பந்தல் அமைக்கப்பட்டது. குளிர்ச்சி மிகுந்த

மலர்களைக் கொண்டு மாலை தொடுக்கப்பட்டு அதை அணிந்த மகளிர், பொம்மையைப் போன்ற கோவிந்தையை அழைத்து வந்து வாழ்த்துப் பாடல்களைக் கூறி பந்தலில் அமரச் செய்தனர். இதனை,

**"பணிவளர் கோதை மாதர் பாவையைப் பரவி வைத்தார்"**[3]

என்ற வரி புலப்படுத்துகிறது. மேலும், பசுவின் நெய்யினை அருகம்புல் கொண்டு தோய்த்தெடுத்து கோவிந்தையின் கூந்தலில் நெய்யைத் தடவி பசுவும், தொழுவமும் போன்று வாழ்க என வாழ்த்தி, நீரைச் சொரிந்து, ஆய்ச்சியர் அவளை நீராட்டுகின்றதை,

**"நாழியுள் இழுது நாகுஆன் கன்றுதின்று ஒழித்தபுல் தோய்த்து**
**விழிதோறும் ஆவும் தோழும் போன்று உடன்மூக்க என்று**
**தாழ்இருங் குழலினாளை நெய்தலைப்பெய்து வாழ்த்தி**
**மழைநீர் சொரிந்து மொய்கொள் ஆய்ச்சியர் ஆட்டினாரே"**[4]

என்ற பாடல் மேற்குறித்த கருத்தை விளக்குகின்றது. அணிகலன் அணிவிக்கப்பட்டு திருமணத்திற்கு என்று உரிய காதணியை அணிவித்து, மாலையைச் சூட்டி, சந்தனத்தைப் பூசி அழகாக மணக்கோலம் செய்தனர் என்பதை இவ்வரிகளின் மூலம் அறியமுடிகிறது.

**நீர் வார்த்தல்**

பறைமுழங்க ஆயர்கள், கோவிந்தையை அழைத்துச் சென்று கந்துக்கடன் மனையை அடைந்தவுடன் சீவகனிடம் நீரைச் சொரிந்தான். சீவகன் அவற்றைப் பதுமுகனுக்கு என்று கூறி ஏற்றுக் கொள்கிறான். இதனை,

**"ஏறங்கோள் முழங்க ஆயர் எடுத்துக் கொண்டு ஏகி மூதூர்ச்**
**சாறு எங்கும் அயரப் புக்க நந்தகோன் தன்கை ஏந்தி**

**வீறுஉயர் கலசம் நன்னீர் சொரிந்தனன் வீரன் ஏற்பன்**

**பாறுகொள் பருதிவைவேல் பதுமுக குமரற்கு என்றே"[5]**

என்ற பாடல் விளக்குகின்றது.

**சீதனங்கள்**

நலம் மிக்க அழகுடைய கோவிந்தைக்கு இளம் பசுக்கள் இரண்டாயிரமும், நல்ல பொன்னால் ஆன நல் இலக்கணம் அமையச் செய்யப்பட்ட பாவைகள் ஏழும் கொடுத்து நந்தகோன் சென்றதை,

**"நலத்தகை அவட்கு நாகான் ஆயிரத்து இரண்டி நன்பொன்**

**இலக்கணப் பாவை ஏழும் கொடுத்தனன்"[6]**

இப்பாடல் விளக்குகின்றது. இவற்றிலிருந்து, கோவிந்தைக்குக் கொடுக்கப்பட்ட சீதனங்களை அறியலாம்.

**எட்டுப் பெண்களை மணத்தலின் தனித்துவம்**

1. **காந்தருவதத்தை - யாழ்வாசிப்பில் சிறந்தவள்**
2. **குணமாலை - சுண்ணக் கலையில் வல்லவள்**
3. **பதுமை - மிகவும் அழகுடையவள் - பாம்புவிடம் தீர்தல் கண்டு**
4. **கேமசரி - கணவன் மட்டுமே ஆடவராகத் தெரிவர்.**
5. **கனகமாலை - விற்கலையில் சிறந்தவள்.**
6. **விமலை - பந்து விளையாட்டில் திறம் பெற்றவள் பண்டம் விற்றதால் மணம்**
7. **சுரமஞ்சரி - ஆடவரைப் பார்ப்பதில்லை என்ற திடமான முடிவு**
8. **இலக்கணை - பன்றி பொறி இயந்திரம் வென்று மாமன் மகளைத் திருமணம் செய்தல்**

சீவகன் எட்டுப் பெண்களை திருமணம் செய்கின்றான் இக்காரணத்தால் இந்நூலை **“மணநூல்”** என்றும் சிறப்பித்துக் கூறுவர்.

**சீவகன் மணந்த பெண்கள்**

| **வித்தியாதரப் பெண்** | **வணிககுலப் பெண்கள்** | **அரசிளம் பெண்கள்** |
|---|---|---|
| காந்தருவதத்தை | குணமாலை | பதுமை |
| | கேமசரி | கனகமாலை |
| | விமலை | இலக்கணை |
| | சுரமஞ்சரி | |

**எட்டுப் பெண்களை மணப்பதற்குரிய காரணங்கள்**

சீவகன் எண் வினைகளை நீக்க எண்குணங்களாக எட்டுப் பெண்களை மணந்தான் என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார். இதனை,

**“நணிதின் எண்வினையின் நவை கண்ணிறீஇத்**
**துணிய ஈர்ந்ததிடுத் துப்படை சிந்தையான்**
**மணியின் மேல்மணி கட்டியது ஒத்தற்கு**
**அணிய மாய்அவர் ஞாயிறும் ஆயினான்”**[7]

**“வீட்டுலகம் நண்ணார் வினைக்கள்வர் ஆறலைப்ப**
**ஓட்டிடுப எண்குணனும் கோட்பட்டு உயிராவே”**[8]

என்று, அருகன் எண்வகைக் களங்களை உடையவன் என்பதன் விளக்கத்தை நச்சினார்க்கினியர், அடியார்க்கு நல்லார் ஆகிய இருவர் உரைகளில் இருந்து அறிகின்றோம். எண்வகைக் களங்களாக,

**“அநந்த ஞானம், அநந்தவீரியம், அநந்த தரிசனம், அநந்த சுகம், நீர்த் நாமம், நீர்கோத்திரம், நீராயுத அழியா இயல்பு என இவை எண்குணங்கள்”**[9]

என்று ச.வே. சுப்ரமணியன் தமது கருத்தினை வெளிப்படுத்துகிறார். இக்காரணத்தாலும் ஆசிரியர் எட்டுப் பெண்களை மணம் செய்வது போன்ற எண்ணிக்கையில் எட்டு மணம் பற்றியும் எட்டுப்பெண்கள் பற்றியும் கூறியிருக்கலாம். என்பது ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒன்றாகும்.

**எட்டுப் பெண்களின் திருமணம்**

சீவகன் எட்டுப் பெண்களைத் திருமணம் செய்துகொண்ட சிறப்புகளையும், திருமணத்தில் மேற்கொள்ளப்பட்ட பல்வகையான சடங்குமுறைகளையும், மணப்பெண்ணிற்கு வழங்கப்பட்ட சீதனங்களையும் அறியமுடிகின்றன. இவ்வகையில், இவ்எட்டுத் திருமணங்களும், மரபு மற்றும் பண்பாட்டுடன் தொடர்புடையனவாக நிகழ்ந்துள்ளது என்பதை அறியமுடிகிறது. எட்டுத் திருமணங்களைக் குறித்துப் பின்வருமாறு விளக்கலாம்.

**காந்தருவதத்தைத் திருமணம்**

இராசமாபுரத்தில் வாழ்ந்த சீதத்தன் என்ற வணிகன் தன்னிடத்தில் அடைக்கலப்படுத்திய வெள்ளி மலையிலுள்ள வித்தியாதர வேந்தனாகிய கலுழவேகன் என்பவன் மகள் காந்தருவதத்தையை இசைப்போர் செய்து வெற்றி பெறுவோனுக்குத் திருமணம் செய்து தருவதாகத் தெரிவித்துப் பின் யாழ்ப்போட்டி நடத்தி அரசர் பலரும் அதில் கலந்து கொண்டு தோல்வியுற்று, பின் இறுதியாக சீவகன் யாழ்ப்போட்டியில் வென்று தத்தையை மணம் செய்து கொள்கிறான். யாழிசையில் வென்ற சீவகனுடன் காந்தருவதத்தைக்குத் திருமண ஏற்பாடு தொடங்குகிறது. திருமண நாளுக்கு முன்னர் குறிப்பிட்ட ஒரு நாளில் பந்தல்கால் நடும் சடங்கு நடைபெறுகின்றது. வெள்ளிக்கிழமையும் திருதியையும் கூடிய உத்திராட்டதி நாளில் சிம்மராசியில் உதய நாளிகையில் வானம் வெட்கமுறச்

செய்திடும் அழகுடைய ஒரு மண்டபத்திற்கு அடிக்கல் நடுக என நிமித்திகர் கூறுகிறார். இதனை,

**“நாணக்கிடங்கு ஆடைநகர் நாகத்திடை நன்பொன்**
**வான்நக்கிடு மாட்சியதோர் மண்டபம் செய் கென்ன**
**மீனத்திடை நாள் கிழமை வெள்ளிசயை”**[10]

எனும் பாடல், அரசனுடைய ஆநிரைகளின் காவலன் நந்தகோன் தூய்மையான தயிரையும், பாலையும், நெய்யையும் வேள்விக்கு எடுத்துக் கொண்டு வருகிறான் என்பதை இப்பாடல் விளக்குகின்றது. மேலும்,

**“நான்கு நூறாயிரங் குடத்து நல்லன**
**ஆன்தயிர் பால்நெயோ டழகி தாநிறைத்**
**தூன்றிகழ் வேலினான் வேள்விக் கூர்மருள்**
**கோன்தொறுக் காவலன் கொண்டு முன்னனான்”**[11]

என்ற வரிகள், அரிசி, சர்க்கரை, பயறு, உப்பு என அவற்றை நிறைத்த வண்டிகளும், மா, பலா, வாழை என முக்கனியும், கிழங்கு, காய், கரும்பு என அனைத்தும் சுமந்து வந்த மக்கள் நிறைந்து நெருங்க, ஒரு பக்கம் இடம் இல்லாது போகும் அளவு காணப்பட்டுள்ளது. மேலும்,

**“வளைநெற வார்செநெல்லரிசிப் பண்டியோடு**
**அளவறு சருக்கரைப் பண்டி யார்ந்தன**
**பிளவியல் பயறுபெய் பண்டி யுப்புநீர்**
**விளைவமை பண்டியின் வெறுத்த தாய்கொரியங்” (சீவக, பா.826)**
**“மரகத மணிப் பசுங் காய்கொள் வான் குலை கவர் பழுக்**
**கவர்பழுக காய்க் குலை கனியக் காவுறீஇ**

**இவர்தரும் மேல்லிலைக் காவும் ஏந்திய**

**வவர்யாய்ச் சொரிந்திடம் பெறாது தானொர்பால்''**[12]

என்று, தென்னங்குலையும், கமுகின் குலையும் வெற்றிலைப் பெட்டியும் வைத்துள்ள இடங்கள் ஒரு பக்கத்தை மறைத்தும், இருந்தன என்று கூறப்படுகின்றது.

சண்பகமும், மருக்கொழுந்தும், மருவும், மல்லிகையும், தண்ணிய செய்கழுநீரும், குவளையும், தாமரையும் ஆகிய மணமிகு மலர்ச்சுவையை வண்டுகள் மொய்க்கும் புதுமலரினைக் கொண்டு வந்தவர்கள் கூட்டம் மற்றொரு பக்கம் அழகுற விளங்கும்படியாக அவ்விடம் அமைந்திருக்கின்றது. இவ்வாறாக மணநாள் அன்று மணமேடையில் சூழ்ந்திருந்த மக்களையும், மணநன்நாளின் தன்மைகளையும், மணப்பொருட்களையும் மேற்குறித்த சான்றுகள் வழியாக அறியமுடிகின்றன.

**சீதனங்களை எழுதி வைத்தல்**

சீதனம் என்பது, மணப்பெண் வீட்டார் தங்களுடைய மகள், புகுந்த வீட்டில் சீரும் சிறப்புடனும் இருக்க வேண்டும் என்பதற்காகக் கொடுக்கப்படும் அன்புப் பரிசு எனலாம். இத்தகைய சீதனம் கொடுக்கின்ற முறை சமூகத்தில் தொடர்ந்து உள்ளதை அறியலாம். மணப்பெண் வீட்டார் கொடுக்கின்ற சீர் வரிசையினை, இன்று வரை ஏடுகளில் எழுதி வைக்கும் பழக்கம் மக்களிடம் உள்ளது. அதே போன்று தத்தையின் திருமணத்திற்கு வந்த வரிசைப் பொருள்களின் கணக்கை எழுதியவர்கள் கை துன்பம் அடைந்து பட்டோலைகளை எடுத்து வைத்து இளைப்பாறிவிட்டு, பின் எழுதும்படி பொருள்கள் இருந்துள்ளது என்பதை,

**''கையுறை யெழுதினர் கைந்நொந்து ஏறு அறுத்து**

**ஐயென விந்பபமற் றன்ன தாதலான்**

**வைய மருங்கினின் வாழ்நர் மற்றவன்**

**செய்தவ நமக்கிறை கென்னச் சென்றதே”**[13]

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன.

**அணிகலன்கள்**

சீவக சிந்தாமணி காந்தருவதத்தையார் இலம்பகத்தில் வெள்ளி மலையின் வித்தியதாரவேந்தன் கலுழவேகனின் மகள் காந்தருவதத்தைக்கு மணமுடிக்கத் தனது நண்பன் வீட்டுக்கு அனுப்புகிறான். அப்போது அரிய மணிகளும் வயிரமும் இழைத்த அறிய அணிகலப் பெட்டி ஐந்நூறும் ஒளிவிடும் மணியும் செம்பொன்னும் நிறைந்த யவன நாட்டுப் பெட்டி இரண்டாயிரமும் (557), பவளக் கால்கள் கொண்ட மணியிழைத்த கட்டில் நிலைக் கண்ணாடி உயர்வகை இருக்கை, புனுகச் செப்பு (558), பெருமைக்குரிய ஆனைகள் ஆயிரம் வானில் பறந்து செல்லும் தேர்கள் இரண்டாயிரம் ஆகியவற்றையும் மக்களுக்குக் கொடுத்து அனுப்புகிறான் (566), எனக் கூறப்படுகிறது. மணம் மிகக் குழைக்கப்பட்ட சந்தனம், கொடுப்போராலும், வாங்குவோராலும் சிந்தப்பட்ட இடங்கள் நட்சத்திரங்களைக் காட்டிலும் அழகில் மேம்பட்டு இருந்துள்ளன.

**“தொடுத்தன மாலையும் குழையும் சாந்தமும்**

**மருத்துவிண் பூத்ததோ ரழகின் மிக்கதே”**[14]

என்று, சீவகனுக்குக் காந்தருவதத்தையின் தந்தை கொடுத்தனுப்பிய சீர்வரிசைகளை அறியமுடிகின்றன.

**மணமேடை**

அழகான ஓர் இருக்கையில் சீவகனும் முல்லை மாலை அணிந்த தத்தையும் அமர்ந்திருந்தனர். அவர்களைச் சுற்றி மகளிர் பலர் நின்றிருந்தனர் என்பதை,

**“மூழிவாய் முல்லை மாலை முருகுலாம் நிழலினாளும்**

**தாழிவாய்க் குவளை வாடகண் தையலார் பரசவச் சார்ந்தார்”**[15]

என்ற பாடல் விளக்குகின்றது.

**நீர் வார்த்தல்**

அமைக்கப்பட்ட அழகியத் திருமணப் பந்தலில், இன்னிசைக் கருவிகள் முழங்கின. மிகுதியாக தீயை வளர்த்து, அந்தணர் அரச மரத்தால் செய்த துடுப்பினால் நெய் வார்த்து வேள்வித் தீயை வளர்த்தனர். கலசத்தில் இருந்த நீரைச் சீதத்தன் வார்க்கவும், வைகறைப் பொழுதில் சீவகன் அதனை விரும்பி ஏற்றுக் கொண்டான் என்பதை,

**“இன்னியம் முழங்கு யார்ப்பட வீண்டெரி திகழவேதம்**

**நுன்னினர் பலாசிற் செய்த துடுப்பினெய் சொரிந்து வேட்டு**

**மின்னியல் கலச நன்னீர் சொரிந்தன்ன வீரனெற்றாள்**

**முன்னுபு விளங்கு வெள்ளி முளைத்தெழு முருகனன்னான்.”**[16]

என்று, அந்தணர்களால் நெய் வார்த்து வளர்க்கப்பட்ட வேள்வித்தீ நடத்தி மணமக்கள் தீவலம் வரும் சடங்காகும். அழகிய வளையல் அணிந்த முன்கையைப் பற்றி வேள்வித் தீயை வலம் வந்து பொன் கட்டிலில் சீவகன் ஏறி அமர்கின்றான். தேவேந்திரனாலும் கூற இயலாத சிறப்பினைப் பெற்று அத்திருமணம் நடந்துள்ளது என ஆசிரியர் கூறுகின்றார். இதனை,

**“நேட்டிருங் கூந்த லாட னேன்வளை முன்கை பற்றிக்**

**கட்டழல் வலங்கொண் டாய்பொற் கட்டில் தானேறினானே”**[17]

என்ற கருத்துக்கு ஏற்ப பாடல் அமைந்துள்ளது. சீவகனுக்கும் தத்தைக்கும் இடையே நடந்த திருமணத்தை மேற்குறித்த ஆதாரங்கள் வழியாக அறியமுடிகின்றன.

**குணமாலையின் திருமணம்**

குணமாலையும், அவளுடைய தோழிகளும் வேனிற்காலத்தில் இன்பம் கழிக்க வேண்டும் என எண்ணி பொழில் விளையாடச் சென்றனர். பூம்பொழிலுக்குச் சென்றிருந்த பொழுது குணமாலை சுரமஞ்சரி என்ற இரண்டு செல்வ மங்கையர் சுண்ணப்பொடி காரணமாகத் தம்முள் நட்பு மாறுபட்டுப் பிரிந்தனர். அவர்களுள் குணமாலை சுண்ணமே சிறந்தது என்று சீவகன் கூறினான். சுண்ணத்தால் மேம்பட்ட குணமாலை நீராடிவிட்டு வரும்போது, அசனிவேகம் என்னும் யானை, மதம் பிடித்து அவளைக் கொல்ல ஓடிவருகின்ற நேரத்தில், அதைக் கண்ட சீவகன், அவ்யானையை அடக்கி அவளது உயிரைக் காப்பாற்றுகிறான். பின்பு அவன் அவள் மீதும், அவள் அவன் மீதும் காதலை வெளிப்படுத்தி, காதல் மிகுந்து மணம் செய்து கொண்டனர்.

குணமாலையின் விருப்பத்திற்கு இணங்கி சீவகன் வீடு சென்று, குபேரமித்திரன் சார்பில் வந்தவர்கள் கந்துக்கடனிடம் பேசுகின்றனர். சம்மதம் பெற்றுக் கொண்டு வந்து, அந்த நல்ல செய்தியினைக் குபேரமித்திரனுக்கு கூறினர். கரையோடு மோதி ஒலிக்கும் கடலலை போல் ஆரவாரம் கொண்டு கல் என முரசு ஒலிக்க முழவு நல்க வெண்சங்குகள் ஒலிக்க, வண்டுகள் மொய்த்தது போல் மக்கள் நெருங்க, மணம் வந்து பொருந்திய மலர்க் கூந்தலுடைய குணமாலையை சீவகன் மணந்து கொள்கிறான் என்பதை,

**“கரை கொன்றிரங்கும் கடலின்கலி கொன்கல்லென்**

**ரசங் கறங்க முழுவிம்ம வெண்சங்கம் ஆர்ப்பப்**

**பிரசங் கலங்கிற் றென மாந்தர் பிணங்கு வேட்டான்**

**விரைசென் றடைந்த குழலாளையவ் வேனிலானே”**[18]

என்ற பாடல் விளக்குகின்றது.

## குணமாலைக்கு வழங்கப்பட்ட சீதனங்கள்

குணமாலையார் இலம்பகத்தில் குபேரமித்திரன் குணமாலையைச் சீவகனுக்குத் தாரைவார்த்துத் தரும்போது, குபேரமித்திரன் மழைநீரில் தோன்றும் நீர்க்குமிழி போன்ற அழகிய இளைய மகளிர் எழுநூற்றுவரையும், கோடி பொன்னையும், இனிய தேனையுடைய முற்றிய கரும்பு விளையும் கழனிகள் சூழ்ந்த ஐந்து ஊரையும் சீதனப் பொருள்களாக அளிக்கின்றான் என்பதை,

**“மழைமொக்கு ளன்ன வருமென்முறை மாதர் நல்லார்**

**இழைமுற் றணிந்தார் எழுநூற்றுவர் கோடி செம்பொன்**

**கழைமுற்று தீந்தேன் கரும்பார்வய லைந்து மூதூர்**

**குழைமுற்று காதின் மணிக்கொம் பொடுநாய்கன் ஈந்தான்”**[19]

என்ற பாடல் விளக்குகின்றது. இவ்வாறாகக் குணமாலைக்கும் சீவகனுக்கும் இடையே நடந்த திருமணத்தை மேற்குறித்த சான்றுகள் வழியாக அறியமுடிகின்றன.

## பதுமையின் திருமணம்

பல மலைகளையும், காடிடையிட்ட நாடுகளையும் கடந்து பல்லவ தேசத்துச் சந்திராப் என்னும் தலைநகரை அடைந்தான். அந்நகரவேந்தனின் மகன் உலோகபாலன் என்பவனுடன் சீவகன் நட்பு கொண்டான். உலோகபாலன் தங்கையான பதுமையைப் பாம்பு தீண்டிய பொழுது, அவளைக் காப்பாற்ற பலர்

பலவழிகளில் முயற்சிகள் செய்து அவை எதுவும் கைகூடாமல் போகவும், இறுதியில் சீவகன் பதுமையின் உயிரைக் காப்பாற்றினான். சுகமாகிய பதுமையை, மன்னனின் ஆணைப்படி அவளது உயிரைக் காப்பாற்றிய சீவகனுக்கே பதுமையை மணம் செய்து வைக்கின்றனர்.

பதுமைக்கும் சீவகனுக்கும் பெற்றோர் விருப்பப்படித் திருமணம் நடைபெற்றது. தூய வடங்களையுடைய முத்து மாலைகளை எங்கும் தொங்கவிட்டு பூவை விரும்பி அலங்கரித்து அரண்மனை புதிய பொலிவு பெற அமைக்கப்பட்டது. இதனை,

**“தூப்புரி முத்த மாலை தொடக்கொடு தூக்கியெங்கும்**

**பூப்புரிந்த தணிந்து கோயில் புதுவது புனைந்த தன்னே”**[20]

என்ற பாடல் விளக்குகின்றது.

நல்ல நாளிலே நல்லதென்று கருதிய கோயிலிலே, அழகிய மணிகளை அணிந்த மகளிர், மங்கள மரபு கூறி அழகிய தாமரை மலர் போன்ற உள்ளங்கையையுடைய முன்னங் கைகளில் இருவருக்கும் காப்பு நாணைக் கட்டித் தொழுது காவலிருந்தனர் என்பதை,

**“கணிபுனைந் துரைத்த நாளாற் கண்ணிய கோயில் தன்னுள்**

**மணிபுரை மேனி நல்லார் மங்கல மரபு கூறி**

**அணியுடைக் கமல மன்ன அங்கைசேர் முன்கை தண்மேல்**

**துணிவுடைக் காப்புக் கட்டிச் சுற்றுற தொழுது காத்தார்”**[21]

என்ற பாடல் புலப்படுத்துகிறது. புனித நீரால் நீராட்டி, திருமணத்திற்கு ஏற்ற ஒப்பனையைச் செய்தனர். மாணிக்கக் கொடி போன்ற பதுமையை அலங்கரித்து ஒப்பனை செய்தபோது, அவள் தேவர் மகளைப் போல் காட்சி தந்து விளங்கினாள். மீன் போன்ற கண்ணுடைய பதுமைக்குக் குற்றமில்லாத கந்தருவரின் மணத்தைப்

போல முன்னரே பொருந்திய இயற்கைப் புணர்ச்சியால் அன்புடைய அவர்கள் தம்மிற் கூடினர் என்று ஆசிரியர் விளக்கிக் கூறுகின்றார்.

**கேமசரியின் திருமணம்**

தக்க நாட்டை அடைந்த சீவகன் அந்த நாட்டுக் கேமமாபுரத்தில் வாழ்ந்த சுபத்திரன் என்னும் வணிகன் தினந்தோறும் விருந்து செய்கிறான். சுபத்திரன் செய்து வந்த விருந்துக்குச் சீவகன் சென்றான். சுபத்திரனுக்கு கேமசரி என்று ஒரு மகளிருந்தாள். அவள் பிறந்த நாளைக் குறித்த காலக்கணக்கன், இவளுக்குக் கணவனாக எவன் வருவானே அவனையன்றி வேறு பிற ஆடவர் எவரும் இவள் கண்ணிற்கு ஆடவராகத் தோன்றமாட்டார் என்று உரைத்திருந்தான்.

விருந்திற்கு வந்த சீவகனைக் கண்டதும் அவள் நாணித் தலைகவிழ்ந்து நிற்கவும், இவனும் அவள் பால் வேட்கை கொண்டான். கேமசரியும், சீவகனும் ஒருவர் மேல் ஒருவர் காதலுற்று இருந்தனர். கேமசரியின் தந்தை சுபத்திரன் மலைகளின் திரன் போன்ற மதம் பொருந்திய யானைகளையுடைய அரசனுக்கும், தன் சுற்றத்தார்க்கும் தெரியும்படி மணச் செய்தியை அறிவித்தான் என்பதை,

**“கலைத்தொகை நலம்பல கடந்த காளைதான்**
**நலத்தகை யவள்நலம் நினைப்ப நாய்கனும்**
**மலைத்தொகை மதத்தவழ் யானை மன்னவன்**
**நிலத்தவர்க் கறிவுறு நெறியிற் செப்பினான்”**[22]

என்று ஆசிரியர் கூறுகிறார்.

கொடிகள் கட்டப்பட்ட பெரிய நகரில் நல்ல நாளில் சீவகனுக்குக் கேமசரியை இடியின் ஒலியும் அலைகடல் முழக்கமும் போலப் பல திருமண வாத்தியங்கள் ஒலிக்கத் திருமணம் செய்து கொடுத்தனர். இதனை,

**"இடியுமிழ் எறிதிரை முழக்கிற் பல்லியம்**

**கொடியணி வியன்நகர்க் குழுமி ஆர்த்தெழக்**

**கடிமணம் இயற்றினார் கடவுள் நாளினால்**

**வபிலோர்க் கோதையை மைந்தாற் கென்பவே"[23]**

என்ற பாடல் வரிகள் விளக்குகின்றது. இவ்வாறு, கேமசரியின் கண்களுக்கு சீவகன் மட்டுமே ஆடவனாகத் தெரிந்ததால், அவனையே திருமணம் முடிப்பதாக அறியமுடிகிறது.

**கனகமாலையின் திருமணம்**

சீவகன் மத்திமதேசத்து ஏமமாபுரத்தையடைந்து, அந்நகரத்து வேந்தன் மக்களுக்குப் படைக்கலம் பயின்று கொடுக்கும் ஆசிரியனாக அமர்ந்து, வில், வாள் முதலிய படைப்பயிற்சி நல்கி வந்ததோடு, அவ்வப்பொழுது அறநெறியினையும் அறிவுறுத்தி வந்தான். அவ்வரசன் மகள் கனகமாலை என்பாளுக்கும், சீவகனுக்கும் கருத்து ஒருமித்து இருந்தது. அரசன் தன் மகன்களுக்கு இவன் வழங்கியுள்ள பயிற்சியின் சிறப்புக் கண்டு வியந்து, தன் மகளை மணம் செய்து கொடுக்கின்றான்.

கனகமாலையும், சீவகனும் காதல் கொண்டனர். ஆனால் அவற்றை வெளிப்படுத்தவில்லை. பின் தடமித்தன் திருமணத்திற்கு உரிய நாளைக் குறிக்கின்றான். உலகம் எல்லாம் அறியுமாறு முரசும் ஒலிக்கத் தீயில் ஆகுதி செய்து திருமணம் புரிந்தனர் என்பதை,

**"பாரெல்லாம் அறிய நின்ற படாமுர சார்ப்பத் தீவேட்டு**

**ஒருவாங் கோதையின்பத் தீன்நலம் பருகுகின்றான்"[24]**

என்ற பாடல் புலப்படுத்துகிறது. சீவகனுக்கு நடைபெற்ற இத்திருமணம், சீவகனின் போர்ப் பயிற்சித் திறனினால் விளைந்த ஒன்று என்பதை அறியமுடிகிறது.

**விமலையின் திருமணம்**

இராசபுரத்தை அடைந்த சீவகன் தோழர்களை ஓரிடத்தில் இருக்க வைத்துவிட்டு, தான் வேற்று உருவம் கொண்டு நகருக்குள் நுழைந்தான். நுழைந்தவன், அந்நகரில் உள்ள சாகரதத்தன் என்னும் வணிகன் கடைக்குச் செல்கின்றான். அப்போது அவ்வணிகன் மகள் விமலை என்பவள் பந்தாடிக் கொண்டிருந்தவள், சீவகனைக் கண்டு வேட்கை கொண்டாள். இவனும் அவள்பால் வேட்கை மிகுந்தான். இதற்குள் அவன் கடையில் விலைபோகாமலிருந்த சரக்கு விலையாகிவிட்டது. மகளுக்குக் கணவன் வருங்கால், விலையாகாமல் கிடந்த பண்டம் விலையாகிப் போனது என்று சாகரதத்தன் மகிழ்ந்தான். விமலையும் சீவகனும் கண்ட அளவில் ஒருவர் மீது ஒருவர் விருப்பம் கொண்டனர்.

பசும்பொன்னால் செய்யப்பட்ட பெரிய மனையில் பல்வகைப்பட்ட வாத்தியங்கள் ஒலிக்க, அழகிய பொற்கொடி போன்ற விமலையையும், சீவகனையும் இவ்வுலகத்தில் இதற்குமுன் இல்லாததான சிறப்புத் தோன்றத் திருமணம் செய்து வைத்ததாகக் குறிப்பிடுகின்றனர். இதனை,

**“அம்பொற் கொம்பனை யாளையும் வார்குழற்**
**செம்பொற் கன்றளை யானையுந் சீர்பெறப்**
**பைம்பொ னீணகர்ப் பல்லிய மகர்த்தெழ**
**இம்ப றில்லாதா ரின்பம் யற்றினார்”**[25]

என்ற வரிகள் விளக்கி நிற்கின்றது.

**சுரமஞ்சரியாரின் திருமணம்**

சுரமஞ்சரியோடு சுண்ணப்பொடியின் காரணமாக ஏற்பட்ட ஊடல், அவள் ஆடவர் முகத்தைக் காணமாட்டேன் என உறுதி கொண்டு நோன்பு இருப்பதைச்

சீவகனின் நண்பர்கள் சீவகனுக்குக் கூறி அவளை மணந்து வருமாறு தூண்டுகின்றனர். சீவகன் முதியவன் வடிவம் கொண்டு சுரமஞ்சரியின் கன்னிமாடம் சென்று, அவர்கள் மயங்கும்படி இனிய சொற்களைப் பேசி, பாட்டிசைத்து, அவளைக் காமன் கோட்டத்துக்குச் செல்லும்படி செய்து தோழர்களின் உதவியுடன் சுரமஞ்சரியை அடைந்து பின் முறையான மணம் செய்து கொள்கிறான்.

இவ்வகையில், சீவகனும், சுரமஞ்சரியும், ஒருவர் மீது ஒருவர் காதல் வேட்கையோடு இருக்கின்றனர். பெற்றோர் நிச்சயிக்கப்பெற்று மணம் அறிவிக்கப்படுகிறது. குபேரதத்தன் கேட்கத்தக்கதாகிய அதனை விரும்பிக் கேட்டு, சுற்றத்தார்க் கெல்லாம் அறிவித்து, விருப்பப்படுபவரது உணவும், உடையும் சிறந்த பொற்பூணும், பூமாலையும், சந்தனமும் குறைவில்லாமல் யாவர்க்கும் கொடுத்து, மங்கல வாத்தியங்கள் பல கூவி ஒலிக்க, நல்ல நாள் பார்த்து, நறுமணம் மிக்க மாலையணிந்த சீவகனுக்குச் சுரமஞ்சரியைத் திருமணம் செய்து கொடுக்கிறான் என்பதை,

> **"கேட்பது விரும்பி நாய்கன் கணக்கெல்லமே உணர்த்தி யார்க்கும்**
> **வேட்பன அழகில் ஆடை விழக்கலன் மாலை சாந்தும்**
> **கோட்குறை வின்றி ஒக்கக் குழுமிங் கறங்கு கூர்ப்ப**
> **நாட்கடி மாலை யாற்க நங்கையை நல்கினானெ"**[26]

என்ற பாடல்வழி அறியமுடிகிறது.

### சுரமஞ்சரிக்குக் கொடுக்கப்பட்ட சீதனங்கள்

பெருவசதி படைத்த குபேரதத்தன் தன் மகள் சுரமஞ்சரிக்கு வரிசையாக அவள் இனிது வாழ மூன்று ஊர்களையும் ஒன்றரைக் கோடிப் பொன் நாணயங்களையும் ஆடலிலும், வீணை வாசிப்பதிலும் சிறந்த நூற்றெட்டு

பெண்களையும் வழங்கியதாகக் கூறப்படுகிறது. சுரமஞ்சரிக்கு சீதனமாக காஞ்சரி என்னும் அணிகலனும், சிலம்பும், கிண்கிணியும் அணிந்த அடிகளையுடைய ஆடல் மிக்காரும், வீணை வல்லவருமாகிய மகளிர் நூற்றெண்மரையும் ஒன்றரைக் கோடி பொன்னையும் மூன்று ஊர்களையும் என் மகளுக்குச் சீதனமாகக் கொடுத்தேன் என்று எரியும் தீயின் முன்னே நின்று கூறினான் குபேரதத்தன். இதனை,

**“பரியகஞ் சிலம்பு பைம்பொற் கிண்கிணி யார்ந்த பாதத்து**
**அரிவையர் ஆடல் மிக்கார் அருமணி வீணை வல்லார்**
**உரியநூற் றெண்மர் செம்பொன் ஒன்றரைக் கோடி மூன்றும்**
**எரியழல் மன்னர் நேர்ந்தேன் என் மகட்கென்று சொன்னான்”**[27]

என்ற இப்பாடல் வரிகள் விளக்குகின்றது.

### இலக்கணையின் திருமணம்

சீவகனுடைய மாமன் மகள் இலக்கணையாவாள். திரிபன்றி எந்திரம் ஒன்றை நிறுவி, இதனை அம்பெய்து வீழ்த்துபவர்க்கு என் மகள் இலக்கணை உரியாள் என்று இலக்கணையின் தந்தை கோவிந்தராசன் அரசர்கட்கும் கட்டியங்காரனுக்கும் ஓலை விடுத்தனன். அதன்படி அரசர்களும், கட்டியங்காரனும் அவன் மக்கள் நூற்றுவரும் கூடி முயன்றும் அத்திரிபன்றியை வீழ்த்த முடியாமல் மெலிவுற்றனர். சீவகன் அதனை வீழ்த்தி வெற்றி கொண்டான். அவன் யார் என்பதை கோவிந்தன் அறிவித்தான். சீவகன் சிங்கம் கட்டியங்காரன் என்ற யானையின் உயிரைக் கொல்லும் என்று கூறினார். இதனைக் கேட்டு கட்டியங்காரன் சினம் கொண்டு போருக்கு எழுந்து பின் தோல்வியுற்றான். சீவகன் போரில் வெற்றி பெற்று, பின் அரசனாய் மணிமுடி சூட்டி, அரசமுறைப்படி இலக்கணையே திருமணம் புரிந்தான். எட்டுப் பெண்களின் திருமணத்தில்

இலக்கணையின் மணம் சடங்குகள், பழக்கவழக்கங்கள் என அரச முறைப்படி நடந்தது என்பது சிறப்புக்குரிய ஒன்றாகும்.

**திருமணப்பாடல்**

திருமணம் நடக்கும் பெண்ணிற்கு அரசியற் கலையில் வல்ல மகளிர் அழகிய அணிகளை அணிந்த இலக்கணையைச் சங்கு ஒலிக்க பாடல் பாடுகின்றனர். அவளது கூந்தலிலே அருகம்புல்லால் தோய்த்து நெய்யை இடுகின்றனர். இதனை,

**"வரைவினை வளர்பொன்னே வலம்புரி ஒருமணியே**
**திரைவினை அமிர்தம்மே திருவிழை யெனரத்தி**
**வரிவளை முழவிம்ம மணிகிளர் ஒலிஜம்பால்**
**அரைவிளை கலைநல்லார் அறுகின்நெய் யணிந்தனரே"**[28]

என்ற பாடல் மூலம் காணமுடிகின்றது.

**திருமணச் சடங்குகள்**

மதயானைகள் இரண்டின் மீது சிறந்த மணிக்குடங்களை ஏற்றிக் கொண்டு தெளிந்த மஞ்சன நீரைக் கொண்டு நீராட்டினார் என்பதை,

**"வெள்ளை மதயானை விழுமணிக் குடமேற்றித்."**[29]

என்ற பாடல் விளக்குகின்றது. முத்துக்கள் பதித்த பொன் விகானத்தின் நிழலிலே, அவளை அழைத்து வந்து அமர்த்தினர் என்பதை,

**"ஈன்ற பொன் விதானத்தின் நீழலுய்த் திரீஇயனரே"**[30]

என்ற பாடல் கூறுகின்றது. மேலும்,

**"கரும்பே தேனே அமிர்தே காமர் மணியாரே**
**அரும்பார் மலர்மால் அணங்கே மழலை யன்னமே**

**கரும்பார் சோலை மயிலே குயிலே சுடர்வீசும்**

**பெரும்பூண் மன்னன் பாவாய் பூவாய் பிணைமா"**[31]

என்று திருமணப் பாடல் அமைந்துள்ளது. ஒளிவிடும் பொற்காலத்தில் நெற்பொரியை நிறையப் பெய்து அம்மியையும், பசுவின் பாலுடன் கலந்த நெய்யையும் வைத்து கருப்பையால் பிரம்மமுடி முடித்து மூன்று புறமும் தருப்பை அணிந்து மந்திர வீதியினால் சிறப்புற்று விளங்கும் முன்னர்க் கூறிய நெய்யை ஆக நெற்படி கழுவித் தீயிலே இட்டு வேதம், ஓதித் தியானித்து, ஓமத்தீக்கு அருகில் ஓமம் செய்ய வேண்டிய இடத்தில் வைத்தனர்.

ஒரு சாண் உயரமும் எட்டு விரற்கிடை அகலமுமாக அமைந்த ஓமகுண்டத்தில், பதினாறு சமிதைகளையும் அகப்பையில் நெய்யையும் சொரிந்த அளவில் தீக்கடவுள் அவற்றை ஏற்றுக் கொண்டு பொங்கியது. முழவும் சங்கும் முழங்கி ஒலிக்க, சீவகன் கலச நீரைத் தன் அகங்கையில் ஏற்று ஓமத் தீயில் வார்த்தான் என்பதை,

**"தண்டிலத் தகத்திற்சாண்மேல் எண்விரற் சமிதைதூனான்கு**

**எண்டிசை யவரும் ஏத்தத் துடுப்புநெய் சொரிதலோடும்**

**அரைசருள் அரசன் ஆய்பொற் கலசநீர் அங்கை பேற்றான்"**[32]

என்ற பாடல் விளக்குகிறது. இலக்கணையின் முகத்தை அவள் மூடி மறைத்திருக்க மங்கையர் அதனை விடுவித்தனர். சீவகன், அவளது இடது கையைப் பற்றி வளரும் ஓமத்தீயை வலம் கொண்டு ஓமச்சடங்குகளை முடித்து, சாந்தியும், ஆலத்தியும் எடுத்து சடங்கினை முடித்தனர் என்பதை,

**"குளிர்மதி கொண்ட நாகம் கோள்விடுக்குன்றதே போல்**

**தளிர்புரை கோகை மாதர் தாமரை கோகை**

**மாதர் தாமரை முகத்தைச் சேர்ந்த**

**ஒளிர்வளைக் கையைச் செல்வன் விடுத்தவன் இடக்கை பற்றி**

**வளரெரி வலங்கொண் டாய் பொற் கட்டில்தான் ஏறினானே.**

**விளங்கொளி விசும்பிற் பூத்த அருந்ததி காட்டி ஆண்பால்**

**வளங்கொளப் பூத்தகோல் மலரடி கழீஇய பின்றை**

**இளங்கதிர்க் கலத்தின் ஒத்த அயின்கண் டமர்ந்திருந்தான்**

**துளங்கெயிற் வழுவை கொல்சீர்த் தோகை யோடிந்ததொத்தான்''**[33]

என்பதை, ஒளி விளங்கும் வானத்தில் தோன்றி மின்னும் அருந்ததி நட்சத்திரத்தை மனைவிக்குக் காட்டி அதை வாசலில் பொலிவு மிக்க மலரடியைப் பசுவின் பாலால் கழுவிய பிறகு, அழகொளி விளங்கும் பொற்காலத்தில் பாவையர் இன்னடியில் ஏந்த அதனைக் கண்ணால் பார்த்து இலக்கணையுடன் அமர்ந்திருந்தான்.

**பிரிவுத்துயர்**

பிரிவு என்பது காதலர்களுக்கு மனரீதியாக ஏற்றுக்கொள்ள முடியாத ஒன்றாக உள்ளது. சூழ்நிலை காரணமாக சில பிரிவுகளும், ஊடல் காரணமாக சில பிரிவுகளும், காதல் துன்பத்திலே திழைத்து பின் பிரியும் போது ஏக்கப்பட்டு, உடல் மெலிந்து, உடல் மாறுபட்டு, உணவு உண்ணாமலும், அணிகலன் வெறுத்தும், மகிழ்ச்சிக்குரிய செயலில் ஈடுபடாமலும், ஆடவனை எண்ணி ஏங்கிக் கொண்டும் மற்றவர்களிடமும் பகிர்ந்து கொண்டு வருத்தப்படுவதை அறியமுடிகின்றது.

காதலும் காமமும் உயிரினும் மேலானதாக சிந்தாமணியில் கூறப்பட்டுள்ளது. காதலனைப் பிரிந்த பெண்கள் அப்பிரிவின் துயரால் எத்தகு துன்பநிலையை அடைந்தனர். என்பது விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. காதலும் காமமும் மேலானது என்பதை சிந்தாமணி மட்டும் அன்றி கலித்தொகையும் ஒருவரியில் காட்டுகின்றது.

**''பெரிதே காமமெனின் உயிர்தவச் சிறிதே''**[34]

என்ற கலித்தொகைப் பாடல் வரிகள் காதல், காமம் பற்றி ஒரு வரியில் குறித்துச்செல்வதைப் பார்க்கமுடிகின்றது.

**பிரிவின் தன்மை**

களவு வாழ்வில் காதலனைப் பிரிந்து காதலி தனிமைத்துயா் அடைவாள். அதுபோல், கற்பு வாழ்வில் காதலனைப் பிரிகின்ற போது, மிகுந்த மன உளைச்சலுக்கு ஆளாகுவாள். இவ்வாறு, சீவகன் எட்டுப் பெண்களை மணமுடித்தான். ஒவ்வொரு பெண்ணையும் மணமுடிக்கும் போது, மணமுடித்த பெண் அவனுடைய பிரிவில் மிகுந்த மனவேதனை அடைந்திருப்பாள். இவ்வகையில் எட்டுப் பெண்களும் சீவகனின் பிரிவில் அடைகின்ற துயரங்களை அறியமுடிகின்றன.

காதலியின் துன்ப உணர்ச்சி எல்லையற்ற ஒன்றாக உள்ளது. இத்தகைய காதல் துன்பம் காதலனைப் பிரிந்த காதலிக்கு ஒரு கடலாகவே உள்ளது. அந்தக் கடலைக் கடப்பதற்குக் காதலா்க்கு ஒரு தோணி வேண்டும் அத்தோணி பாதுகாப்பாக இருக்க வேண்டும். அது காதலனுடைய அன்புதான். காதலனின் அன்பு கிடைத்தால் அவளுக்கு அது துன்பமாகத் தோன்றுவது இல்லை. என்பதை,

**“காமக் கடல்மன்னும்**
**உண்டே அது தீா்ந்தும்**
**ஏமப் புனைமன்னும் இல்.” (சீவக, பா.116)**

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. இதுபோல், வள்ளுவா்,

**“இன்பம் கடல்மற்றுக் காமம் அஃது அடுங்கால்**
**துன்பம் அதனின் பெரிது.”**[35]

என்று காதல் பிரிவுத்துன்பம் கடலைவிடப் பெரியது என்பதாகக் குறிப்பிடுகின்றாா். மேலும், “காதல் என்பது காவடிபோல் இருபக்கமும் ஒத்திருந்தால் தான் இன்பமானது ஒரு பக்கம் மட்டும் இருப்பது துன்பமானதே” என்ற கருத்து காதல் தன்மை பற்றிக் கூறுகிறது. மேலும், அகநானூற்றூப் பாடலில்,

**“மணங்கமல் கான இணைத்தம்கேண்**

**ஒருநாள் பிரியினும் உய்வரிது.”**[36]

என்ற பாடலின் பொருளானது, ஒருநாள் பிரிந்தாலும் பெருந்துன்பமாகக் கருதப்பட்டதைக் காட்டும்படியாக உள்ளது. அதே போன்று அகநானூற்றுப் பாடல் காதல் என்பது வாழ்தல் போன்றது என்றும் பிரிதல் என்பது சாதல் போன்றது என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இவற்றிலிருந்து, களவு மற்றும் கற்பு வாழ்க்கையில் தலைவனைப் பிரிந்து நிற்கும் தலைவியின் பிரிவுத்துயரினை ஒருவாறு அறியமுடிகிறது. இத்தகைய பிரிவுத்துயரம், தலைவனைத் தாண்டியும், தலைவியின் இல்லத்தில் இருக்கும் தந்தை, தாய், தமையன் ஆகியோரைப் பிரிந்து நிற்கும் ஒவ்வொரு பெண்ணின் பிரிவு வருத்தத்தையும் உணரமுடிகிறது. அந்தவகையில், சீவகசிந்தாமணியில் சீவகனை மணமுடித்த எட்டுப் பெண்களும், சீவகனை நினைந்தும், பிரிவில் மிகுந்த வருத்தமடைவதைக் காணமுடிகிறது.

## தத்தையின் பிரிவுத்துயர்

சீவகனைப் பிரிந்து நிற்கும் தத்தையின் மனநிலையை சிந்தாமணி வழியாக அறியமுடிகிறது. அதாவது, தஞ்சை மலர் சூடினாலே இடை ஒடியும் என்று வருந்திக் கையில் உள்ள நல்ல மலர்களைக் கீழே இருப்பவராகிய காதலர் இப்போது நம்மை நெருங்காமல் துறந்தார் இவ்வாறு அவர் செய்ய கைவளைகளைக் கைகள் நீங்கக் கண்கள் இடைவிடாமல கண்ணீர் உறங்காமல் மயக்கத்தில் இருக்கிறேன். கொவ்வைக்கனி போன்ற வாயின் அழகு, சீவகனை எண்ணி மாறுபட்டு உடல் மெலிந்ததை,

**“நுண்ணிய வரியொடு திரண்டு நோக்குநர்**
**கண்மனிங் கவற்றிய காமர் தெண்டைவொம்**
**அண்ணலை நினைத்து வெய் துயிர்ப்ப ஆய்நலம்**
**வண்ணத்தின் மழுங்குவாட் கண்ணி வாடினாள”**[37]

என்ற பாடல், காதல் துயரில் உடல் மாறுபட்டு இருப்பதையும், அதன் இயல்பான கருத்தையும் கூறுகின்றது. மகளிரின் வேலியாகிய நாணத்தை நீக்கி கடல் போல் எழுந்த வேட்டையாகிய நெருப்பு கொழுந்து விட்டுப் பற்றிக் கொள்ளத் தீயில் உற்ற மெழுகைப் போல உருகி நிற்கிறாள் என்பதை,

**"கட்டழுகுடைய கண்ணாய் நிறையெனும் சிறையைக் கைபோய்**
**விட்டெரி கொருவ நின்றாள் எரியுறு மெருகுன் நின்றாள்."**[38]

எனும் பாடல் உணர்த்துகின்றது. சீவகனை எண்ணிப் பெருமூச்சு விடுவதால் பழைய நிறத்தினின்றும் மாறுபட்டு வாள் போன்ற கண்ணை உடையவள் மாறுபட்டுக் காணப்படுகிறாள் என்பதை பின்வரும் பாடல் விளக்குகிறது.

**"வண்தே அம்மருங்குல் தோமென்று பூமாலை**
**கோடார் பூங் கண்துயிலா தோழி துயர்வேனோ"**[39]

என்று, சீவனைப் பிரிந்து நிற்கும் துயரினைக் குறித்துத் தத்தை தனது தோழியிடம் வருத்தப்பட்டுக் கூறுவதைப் பார்க்க முடிகின்றது.

**குணமாலையின் பிரிவுத்துயர்**

சீவகனைப் பிரிந்த குணமாலை சீவகனை நினைத்துத் தனிமையில் துறவிகளைப் போல, உறவினர்களின் பேச்சினை வெறுத்து எல்லாவற்றிலும் மீது விருப்பம் இல்லாதவள் என்பதை,

**"பிறப்பு ணர்ந்தவர் போற்றமர் பேச் செலாம்**
**வெறுத்து யாவரையும் மேவல ளாயினாள்."**[40]

என்ற பாடலால் அறியலாம். மேலும்,

**"பூமி யும் பொறை யாற்றருங் தன்மையில்**
**வேமென் நெஞ்சமும் வேள்வி முளிரிபோல்**
**தூம மார்பனைக் சீவக சாமியைக்**
**காமனைக்கடி தேதம்மின் தேவிர்கள்."**[41]

என்ற பாடலில், பொறுத்தலிற் சிறந்த பூமியும் பொறுத்துக் கொள்ள முடியாதவாறு நேர்ந்த துன்பத்தால், வேள்வித்தீயில் இட்ட தாமரை மலர்போல் குணமாலையின் உள்ளம் வெந்துவிடுகின்றன. காமதேவனிடம், தேவர்களே சீவகனை விரைவாகக் கொண்டு வந்து தாருங்கள் என்று கூறித் தவிக்கிறாள் குணமாலை என்பதை அறியமுடிகிறது. மேலும் ஒரு பாடலில்,

**“கண்ணும் வாளற்ற கைவனை சோறுமாற்**
**புண்ணும் போன்று புலம்புமென் நெஞ்சரோ**
**எண்ணில் காமம் எரிப்பினும் மேற்செலாப்**
**பெண்ணின் மிக்குத பெண்ணல தில்லையோ.”**[42]

என்ற பாடல் கண்களும் ஒளியிழந்து கை வளையல்கள் கழன்று நெஞ்சமும் புண்பட்டது போல் வருந்துகிறது. புலம்பியும் எல்லையற்ற காமத்தீ பற்றினாலும் அதை வெளியே சொல்ல இயலாது வருந்தும் பெண்ணினத்திலும் கொடுமை மிக்கது, பெண்ணேயன்றிப் பிறந்தில்லை என வருந்துகிறாள் குணமாலை என்பதை அறியலாம். குணமாலையின் பிரிவுத்துயரம் கண்டு, நந்தட்டன், சீவகனிடம் சென்று, துணையாக மலர்ந்த காந்தங்கள் பூ உதிர்வன போலத் தோன்றிய அழகிய கை வளையல்கள் மேனியழகுடன் கழன்று வருந்தியிருக்கின்றாள் என்பதை,

**“துணைமலர்க் காந்தள் ஊழ்த்துக் செரிவ போற்றோன்றி முன்கை**
**அணிவளை நலக்கோ டேக அன மிருந்து தைவாள்.”**[43]

என்றும்,

**“துன்னு நோயுற்ற மஞ்சைத் தோற்றம்போல இருந்தநங்கை**
**பின்னைநாட் குவளை நீர்விழ் பெற்றிய கண்ணளாகி.”**[44]

என்ற பாடல் வழியாகவும், துன்பம் அடைந்த மயிலைப்போல குணமாலை இருந்தாள் என்றும், குவளை மலரின் அழகு அழிந்து, அம்மலரிலிருந்து வடியும் நீர் போலக் கண்ணீர் வடித்தாள். பொன்னால் ஆகிய பூங்கொடி புழுதியில் சேர்ந்தது போல சோர்ந்து பெருநிலத்தில் வீழ்ந்த பெண்மாலையின் தோற்றத்தையுடைய அவள்

துன்பம் கண்டு அங்கிருந்து திரும்பினேன் என்று குணமாலையின் துயரநிலையினை நந்தட்டன் சீவகனிடம் எடுத்துச் சொல்கிறான்.

**பதுமையின் காதல் துயர்**

சீவகனைக் கண்டு காதல் கொண்ட பதுமை அவனைப் பார்த்த பார்வையில் மனம், நாணம், நிறம், அழகு, கை வளையல்கள் ஆகியவற்றைப் போக்கி, பசுமை மேனியைப் போர்த்திக் கொண்டாள். அமிழ்தத்தை அடைய தேவர்கள் திரண்டு, தம் அறிவால் அதனைக் பெறும் வழியை ஆராய்ந்து அக்காலமத்தில் மந்தார மலையை மத்தாகக் கொண்டு கடைந்த போது கலங்கிய பாற்கடல் போல் நெஞ்சம் கலங்குகிறது, என்று துயரத்தின் அளவினை அறியும் படி கருத்துக்கள் கூறப்பட்டுள்ளதை இப்பாடல் விளக்குகின்றது.

**“இறுதியின் அமிர் தெய்துநர் ஈண்டியன்று**
**அறிவின் நாடிய அம்மலை மத்தமா**
**நெறியின் நின்று கடைந்திடப் பட்டநீர்**
**மறுக மாக்கடல் போன்றுதென் நெஞ்சமே.”**[45]

எனும் பாடல், பிரிந்து இருப்பவர்க்கு துன்பம் தருவது பிரிவே என நிகழ்வுகள் கூறப்படுகின்றது. வெண்மை ஒளியுடன் கூடிய நிலவும், அன்றில் பறவைகளும், காளைகள் தாடியில் கட்டிய மணியின் ஒலியும், துன்பம் தரும் மாலைப் பொழுதும், துன்பமூட்டும் ஆம்பல் பண்ணையுடைய குழலும் புகையில்லாது எழுகின்ற நெருப்புப் போல என்னைச் சுடுகின்றன எனப் பதுமை சீவகனை நினைத்து ஏங்குவதை பாடல் வழி அறியமுடிகின்றது.

**“நகைவெண் திங்களும் நான்மடல் அன்றிலும்**
**புகைகொள் மாலையும் பையுள்செய் ஆம்பலும்**
**புகையில் பொங்கழல் போல் சுடுகின்றது.”**[46]

பதுமைக்கு இப்பிரிவினால் மாலைகள் வாடிப்போகும்படி மூச்செரித்து, தன் கண்ணால் ஏற்பட்ட காமநோயால், ஓர் இரவுப்பொழுதும் ஓர் ஆண்டு என எண்ணும் படியாக அவளது துயர் இருந்ததாக சிந்தாமணி விளக்குகின்றது.

**கேமசரியார் பிரிவுத்துயர்**

சீவகனைக் கண்டதும் கேமசரியின் பார்வையும் சீவகனை பார்வையும் ஒன்றிப் பொருந்தியதை,

> **“கண்ணுறுக் காளையைக் காண்டலும் கைவளை**
> **மண்ணுறத் தோய்ந்தடி வீழ்ந்தின மாமையும்**
> **உண்ணிறை நாணும் உடைந்தன வேட்கையும்**
> **ஒண்ணிறத் தீவினைத் நாளும் குற்றாள்.”**[47]

என்ற பாடல் சீவகனைக் கண்டவுடனே கேமசரியின் கைவளைகள் அவள் காலடியில் வீழ்ந்து மண்ணிலே பொருந்தின மாமையும், உள்ளிருந்த நிறையும் நாணமும் கெட்டு ஆசையை ஒளிரும் போன்று அவள் வளர்த்துக்கொண்டு அத்தீயாலே அவளும் வருகிறாள்.

காதலனைக் காணாது வருந்தும் கேமசரி, தன் கண்ணின் கருமணிப் பாவை போன்ற கணவன் மறைந்து சென்ற இடத்தினைக் காணாதவளாய், மாடத்தில் எரியும் மணி விளக்கின் ஒளி உள்ளவரை தேடி அலைந்து, ஒரு நாகப்பாம்பு தன் அரிய மாணிக்க மணியை இழந்து வருந்துவதைப் போல வருந்தினாள் என்பதை, கீழ்வரும் பாடல் விளக்குகின்றது.

> **“திருமணி குயின்ற செம்பொற் றிருந்துழல் கொம்பனாள் தன்**
> **கருமணிப் பாவை யன்னான் காந்துழல் காண்டல் செல்லாள்**
> **எரிமணி விளக்க மாடத் திருளறு காறும் ஒடி**
> **அருமணி யிழந்தோர் நாகம் அலமரு கின்ற தொத்தாள்.”**[48]

நள்ளிரவு துன்ப மயமானதாயிருக்கிறது என்றும் வெண்ணிலவு இரங்காமல் என்னை வருத்தும், இவ்வளவு துன்பத்திற்கும் எனக்குத் துணையாக இருந்த அறக்கடவுளே அருள் செய்ய மாட்டாயா என்று வருந்துகிறாள்.

காதலின் பிரிவால் கேமசரி கொழுந்து விட்டெரியும் தீயில் பட்ட மாந்தளிரைப் போன்று மயங்கி வாடித் தன் அழகான குரல் ஒலியை, யாழொலியினின்றும் வேறாக நீக்கி, வருந்தி அழ அதனால் உண்டான அழுகை ஒலி கேட்டு வீட்டிலுள்ளவர்கள் திரண்டு ஆறுதல் கூறும்படி அவளது நிலை உள்ளதை,

**“எரிநுதி யுற்ற மாவின் இளந்தளிர் போன்று மாழ்கிப்**
**புரியும் விசையற் றள்ளிப் புன்கணுற் றழுத லாலே**
**அரிகுரற் கொண்ட பூசல் அகத்தவர்க் கிசைப்ப இண்டித்.”**[49]

என்ற பாடல் எடுத்துரைக்கின்றது. இதுபோல், படம் எடுக்கின்ற பாம்பு விழுங்கப்பட்ட ஒளி வீசும் நிலவைப் போல அழகு கெட்டு, பிரிவு என்னும் துயரத்திலே மூழ்கி நடுநடுங்க, நெஞ்சம் உருகி வருத்தம் கொள்ளும் கருமையான கூந்தலையுடைய கேமசரி தன் கணவனை வலை விரித்துத் தேடுவது போல் எங்கும் தேடியும் காணமுடியவில்லை என்று ஏக்கம் கொண்டு இருந்த நிலையினை கீழ்வரும் பாடல் விளக்குகின்றது

**“பையர விழுங்கப்பட்ட பசுங்கதிர் மதியம் ஒத்து**
**மெய்யெரி துயரின் மூழ்க விதிர்விதிர்த் துருகி நையம்**
**மையிருங் குழலி னாள்தன் மைந்தனை வலையிற் சூழ்ந்து**
**கையரிக் கொண்டு காணாள் காளையும் காலிற் சென்றான்.”**[50]

என்ற வரிகள் புலப்படுத்தி நிற்கின்றது.

**கனகமாலையின் பிரிவுத்துயர்**

கனகமாலை சீவகனின் பிரிவை உணர்ந்து முன்கை வளையல்களை தோள்வரை வருமாறு தோள்கள் மெலிய, இணையான கொங்கைகளில் பசலை பரவ, தன் நெஞ்சிற்குக் கூறிக் கொள்ளுவது போன்று பாடல் அமைந்துள்ளது.

**“தொடி தோள் நடக்கத் தோள்தேம்பத் துறணவெம் முலைகள் பசப்பூர**
**நெடுமாத் தோகை மென்சாயக் நெஞ்சிற் இவ்வா றுரைக்கின்றாள்.”**[51]

என்றும். மேலும், இத்துயரமானது வள்ளுவரின் குறளுக்கு ஏற்றபடியாக உள்ளது என்பதை,

**“பசந்தாள் இவள் என்பது அல்லால் இவளைத்**
**துறந்தார் அவர் என்பவர் இல் திரு.”**[52]

என்றும், ஒற்றைப் பல்லையுடைய பெரும் பேய் உலகை விழுங்குவதற்கு வாயைத் திறந்து நின்றாற்போல். இம்மாலைப் பொழுது திங்களாகிய எயிறு ஒளியை உமிழ்ந்து விளங்க, சிவந்த வானமாகிய வாயைத் திறந்து என்னை இன்றே விழுங்குவற்கு வந்த தன்றோ இனி என் உயிர் என்னமோ அது இம்மாலைப் பொழுதிடத்தோ அல்லது என்னிடத்தோ என்று துயரநிலையில் தன் வருத்தத்தை வெளிப்படுத்துகிறாள். இதனைப் பின்வரும் பாடல் வழி அறிய முடிகின்றது.

**“ஒன்றே எயிற்ற தொருபேரும் பேய் உலகம் விழுங்க அங்காந்த**
**நின்றாய போல நிழலுமிருந்து நெடுவேண திங்கள் எயிரிலிங்க**
**இன்றே குருதி வானவாய் அங்காந் தென்னை விழுங்குவான்**
**அன்றே வந்த திம்மாலை அனியேன் ஆவி யாதாய் கொல்.”**[53]

என்று, கனகமாலையின் மனம் காமத்தீயால் வெந்து அதலால் உடல் வெதும்பி உயிரும் போகாமல் பெருமூச்சு விடும் நானும் மலை அணிந்த மெல்லிய கூந்தலையுடைய மகளிரின் தீங்கு நோக்கிச் சிறப்பவரின் சிரிப்புக்கு இடமானேன், இங்கனம் யாரும் இல்லாத தனியாளன் ஆனேன், மாலை மார்பின் கொடுந்தனுப்பில் மாலையைத் தெப்பமாகக் கொண்டு இரவாகிய கடலை நீந்திச் செல்வேன் ஆனால் அங்ஙனம் நீந்துதல் அரிதாகும் எனப் பிரிவின் ஆற்றாமைத் துயரினை இதன் வழி விளக்குகின்றார்.

## விமலையின் பிரிவுத்துயர்

சீவகன் விமலையை பிரிந்து செல்ல என்னும் போது விமலை பிரிவை நினைத்து வருந்தி நிற்க சீவகன் ஆறுதல் சொல்லி பிரிந்து செல்கிறான், இதனை,

**"என்றவ னுரைத்தலு மெழுது கண்மலர்**
**நின்ற ரிடைமைப் பாவை நீத்தலின்**
**மன்றனர் நரிவையைத் தெருட்டி மாமணிக்"**[54]

என்ற பாடல் மையெழுதிய கண் மலரில் ததும்பிய கண்ணீரில் அவளது கண்மணி பாவை நீந்தி வருத்தமுற்று இருந்ததைக் காட்டுகின்றது. இவற்றிலிருந்து விமலையின் பிரிவுத் துயரத்தை அறியமுடிகிறது.

## சுரமஞ்சரியின் காதல்துயர்

சீவகன் மீது கொண்ட சினம் அவனை அடைய வேண்டும் என்ற ஆவல் அவள் உள் மனதில் இருந்தது. ஆனால் அதை நேரடியாகக் கூறாமல் மறைமுகமாக சிதைத்துக் கூறுவது போன்று கூற்று அமைந்துள்ளது.

**"தோற்று வந்தென் சிலம்பி கைபொழ**
**நோற்ப நோற்றனை நீயென ஏகினாள்."**[55]

என்ற பாடல் தன் சுண்ணப்பொடி குற்றம் உடையது என்று அறிந்தும் அதன் சினத்தை இவ்வாறு காட்டுகிறாள். சுரமஞ்சரி சீவகனை எண்ணி வருத்தமுற்ற போது அவளது தோழியர் கிளியின் மூலம் அவன் உயிருடன் இருப்பதை அறிந்து கொள்கின்றனர். அதனை சுரமஞ்சரியிடம் கூறி அவள் வருத்தத்தை நீக்குகின்றனர். மற்ற பெண்கள் அனைவரும் சீவகனை மனதில் எண்ணிக் காதல் கொண்டு இல்லறம் புரிந்து பின் வருத்தம் கொண்டனர், ஆனால் சுரமஞ்சரி இச்செயல்பாடுகள் எதுவும் இன்றி மனதில் காதல் கொண்டு வருந்தியதை பாடல் வழி அறியலாம்.

**"காலுற்ற காம வல்லிக் கொடி யெனக் கலங்கி நங்கை**
**மாலுற்ற மயங்க யாங்கள் மடக்கிளி தூது விட்டோம்**

**சேலுற்ற நெடுங்கட் செவ்வாய்த் தத்தையின் செவ்வாய் கண்டே**
**பாலுற்ற பவளச் செவ்வாய்த் தத்தையாற் பிரிவு தீர்ந்தோம்."**[56]

என்ற பாடல் விளக்குகிறது. சீவகனைப் பிரிந்து மற்ற மனைவியர் வருத்தமுற்றனர். ஆனால் சுரமஞ்சரி துன்பத்தை அடைந்த பின் மகிழ்வுடன் அவனை வழியனுப்புகிறாள் என்பது சிந்திக்கதக்கது.

**இயற்கையோடு பேசுதல்**

காதலில் மூழ்கி அதன் நிலையினை உணர்ந்து தாங்கிக்கொள்ள இயலாச் சூழலில் அதன் துயரத்தை அ..்.றிணைப்பொருளிடமும் பறவைகளிடமும் தனது ஏக்கத்தைக் காட்டும் மகளிரின் செயல்களைக் காணமுடிகின்றது.

**குணமாலை பறவையிடம் பேசுதல்**

சீவகனைப் பிரிந்து வருந்திய குணமாலை கிளியிடம் வருந்தி பேசுகிறாள். என்பதை,

**"நாளை வரும் நையலென நன்றென் விரும்பி**
**நாளையெனும் நான் அனிமைத் கோபெரிதும் சேய்தேர்**
**நாளையுரை என்றுகிளி யோடுநகத் சொல்லும்**
**நாளினுமிங் நங்கைதுயர் நாளினுமற் றிதுவே."**[57]

என்ற பாடல்வரிகள், சீவகன் நாளை வருவான் என கிளி கூற நல்லது மகிழ்ந்து நீ கூறியநாளை என்னும் நாள் அண்மையில் உள்ளதா? தொலைவில் உள்ளதா? அந்தநாளைக் கூறுவாயாக என்று கிளியும் நகைக்குமாறு குணமாலை வினவுவதையும் அதே போன்று குணமாலை காதல் தூது சென்று சீவகனிடம் இருந்து பதில் பெற்று அதை குணமாலையிடம் தெரியப்படுத்துகின்றது.

**"உய்யு மாறுரை யுன்னை யலாலிலேன்**
**செய்ய வாய்க்கிளி யேசிறந் தாயென**
**நையல் நங்கையிந் நாட்டகத் துண்பெனின்**
**தைய லாஞ்சம் முாதுரை என்றதே."**[58]

என்ற பாடல் வரிகள், குணமாலை கிளியிடம் சிவந்த வாயையுடைய கிளியே, சிறந்தவனாகிய நீ மட்டுமே சிறப்பு பொருந்தி உள்ளாய், உன்னைத் தவிர வேறொரு துணையில்லை, தான் பிழைக்கக்கூடிய வழியைக் கூறுக என்று கிளியிடம் கூறுகிறாள். அதற்கு மறுமொழியாக கிளி நங்கையே துன்புறாதே நீ விரும்பியது இந்நாட்டில் இருக்கின்றது. வருத்தப்படாமல் இரு என்று கூறி அவளின் துன்பத்திற்குக் காரணமான காதலை அறிந்து அவள் மகிழ்ச்சி அடையும் படியாக செய்வதைக் காணமுடிகிறது.

**பதுமையாரின் பிரிவுத்துயரம்**

சீவகனைப் பிரிந்து துயரமுற்ற பதுமை பிரிவித்துயரால் கிளியிடமும் நாகணவாய்ப் புள்ளிடமும், பெண் அன்னத்திடமும் மயிலிடமும், ஒளி விளக்கை நோக்கையும், மேகத்திடமும் தன் பிரிவின் துயரினை வெளிப்படுத்தியதை,

**“புல்லும் போழ்தினும் பூணுறின் நோமென**
**மல்லற் காளையை வைது மிழற்றுவாய்**
**இல்லின் நீக்க முரைத்தலை நீ யெனச்**
**செல்வப் பைங்களி தன்னையும் சீறினாறள்.”**[59]

என்ற பாடல் அவன் வீட்டை விட்டுப்போனதை நான் கூறவில்லை என்று கிளியிடம் வருத்தத்தைத் தெரிவிக்கின்றான். நாகவாய்ப் புள்ளிடம் பஞ்சணையிலிருந்து போவது செய்யத்தகுந்தன்று என்று தடுக்கவில்லையே என்று வருந்துகிறாள்.

**“பாவை பேதுறப் பாயலின் நீய்கிநீ**
**போவ தோபொரு ளென்றிலை நீயெனப்**
**பவைப் யோடும் புலம்பி மிழற்றனாள்.”**[60]

எனும் பாடல், அன்னத்திடும் நீ போவதாக இருந்தால் பதுமையுடன் போ என்று சீவகனை தடுத்து வந்து சேர்க்கவில்லை என வருந்துகிறாள்,

**“பொன்னொப் பாளெரும் போகனைப் போகடாய்**
**துன்னிய தந்திலை நீயெனங் தூச்சிறை**

**அன்னப் பேடையொ டாற்றக் கழற்றினாள்.''**[61]

மயிலைக் கைகளால் தொழுது உண்மையினை நீ அறிவாய், தலைவன் சென்ற இடத்தைக் கூறுவாயாக என வருந்தி வேண்டிக்கொள்கிறேன்.

**''மையில் வாள்நெடு கண்கள ராதன**
**மெய்யெ லாமுடை யாய்மெய்ம்மை காண்டி நீ**
**ஐயன் சென்றுழிக் கூறுகென் ராய்மயில்**
**கையி னாற்றொரு தாள்கயற் கண்ணினாள்.''**[62]

மேலே கூறப்பட்ட பாடல்கள் அனைத்தும் பதுமை பிரிவுத்துயரால் பறவையினம் வருந்தமுற்றுப் புலம்பியதைக் கூறும் படியாக உள்ளது. குளிர்ச்சி பொருந்திய மலரில் படிந்து பாடுவதை, பிரித்தறியேன் அவனோடு சேர்ந்திருந்து நான் அவன் வெறுப்பனவற்றைச் செய்தறியேன் இப்போது பிரிந்து வருந்துகிறேன். பெண் உயிர் இப்படி தவிர்க்கலமா, இரக்கமில்லாது இருந்தால் பாதகம் அல்லவா எனவே எனக்கு இனியவனாகிய சீவகன் இங்கெங்காவது வண்டுகளை வேண்டி வருந்துகிறார்.

**''துனியாயினதுன்னுபுசெய்தறியேன்**
**தனினொருபெண் ணுயிரன் னொடுதான்**
**இனியா னிங்கூனே யுனளே யுரையிர்**
**பனியார் மலர்மேற் படுவேன் பினமே.''**[63]

மேலும், பதுமை குன்றுகளிடமும் நீர் நிலைகளிடமும் புன்னை மரங்களிடமும், மலர்களிடமும், வெண்ணிலாவிடமும் தலைவன் இருக்கும் இடத்தை உரைப்பீராக என்று கண்ணில் படுகின்ற எல்லாவற்றையும் கண்டு வருந்துகிறாள்.

**கேமசரி காதல் துயரத்தைப் பேசுதல்**

சீவகனைப் பிரிந்த கேமசரியர் மயிலிடமும், அறக்கடவுளிடமும் கண் மலர்களிடமும், தேனீயிடமும், கூறித் தன் துயரத்தைத் தெரிவிப்பதை,

**''மடமா மயிலே குயிலே மழலை**
**நுடைமான அனமே நலமார் கிளியே**

**உடனோ டுமென்று யனையென் றுருகாத்**

**தொடையாத் மழலை மொழி சோர்ந்த தனனே.”[64]**

என்கின்றாள். மேலும், யாழிசையினைப் போல் இனிய மொழிகளுடைய கேமசரி அழகிய இளமை பொருந்திய மயிலே, இளமை பொருந்திய நடையால் மேம்பட்ட அன்னப்பெடையே, அழகான கிளியே என்னுடன் விளையாடும் தலைவனைத் தேடுங்கள் என்று வருந்திக் கூறுகிறாள்.

தினைப்புனத்தில் வாழும் மயிலே, பொழிலே, நீர் மிகுந்த பொய்கையே அழகு பொருந்திய புன்னை மரமே, மலையே, கடலே, பல்வகை மணிகளால் ஆன அழகிய துணிகளை அணிந்து என் கணவனை நான் அடைவேனோ, உங்களையும் போற்றி வணங்குகிறேன் அவன் இருக்கும் இடத்தை உரைப்பீராக என்று சொல்லி வருந்துவதை,

**“புனமா மயிலே பொழிலேக் புனலே**

**வனமார் வழையே வரையே திரையே**

**இனமா மணிசூழ் எரிப ணவனைத்**

**துனயான பொறுகோ தொழுந்தேன் உரையீர்.”[65]**

என்ற பாடல்வழி கேமசரி தன் துயரினை வண்டினங்களிடமும், பறவைகளிடமும் வெளிப்படுத்துவதைக் காணமுடிகின்றது.

**கனகமாலை குயிலிடம் பேசுதல்**

சீவகனை எண்ணி துயரமுற்ற கனகமாலை சோலையில் இருக்கும் குயிலைப் பார்த்து வெறுத்துப் பேசுகிறாள்,

**“வருந்தி யீன்றான் மறந்தொழிந்தாள் வளர்த்தாள் சொற்கேட்டில் கடிந்தாள்**

**முருத்தின் காறுங் கூழையை முனிவார் னின்னை என முனிவார்**

**பொருந்திற் நன்றாய் இதுவென்னாய் பொன்னும் அளித்தின் வியிரென்னாய்**

**திருநது சோலைக் கருங்குயிலே சிலம்ப இருந்து கூவுதியால்.”[66]**

எனும் பாடற்கருத்தானது, குயிலைப் பார்த்து கனகமாலை மாலை நேரத்தில் இப்படி கூவுகின்றாய், பிரிந்து தனித்திருக்கும் வருத்தம் உண்டாகும் என எண்ணமாட்டாயா? உயிர்போகும் என்றும் எண்ணாமல் கூவுகின்றாய். இத்தன்மையால் தான் உன்னைப் பெற்றவன் உன்னைத் துரத்திவிட்டான், உன்னை வளர்த்தவள் குரல் கேட்டு மாய்ந்துவிட்டாள். எலும்பு வரை மயிரை உடைய நீ பிறப்பாலும், வளர்ப்பாலும் வடிவாலும் வெறுக்கப்பட்டாய் என்று வெறுப்பில் குயிலிடம் தன் துயரினை வெளிப்படுத்துகிறாள்.

கனக மாலையின் துன்ப நிலையினை உணர்ந்த கிளிகளான மாலையிடம் மலரால் தொடுத்து மாலையரால் பழிச்சொல் உடையதாக ஆகாமல் நீங்குமோ ஆதலால் வருந்த வேண்டாம் எனக் கனக மாலையை ஆற்றுவிக்கிறது இதனை,

**“காதலன் காதல் போல அகன்று நீண் டலாாந்த வாள்கண்**
**போதுலாம் கோதை மாதர் புனைந்தலர் தொடுத்த மாலை**
**ஆதலால் அலர தாகா தொழியுமே அழுங்கல் என்று**
**மாதுலாம் மழலைச் செவ்வாய் மடங்கிளி மொழிந்த தன்றே.”**[67]

என்ற பாடல் உணர்த்தி நிற்கின்றது.

### இலக்கணையார் கிளியிடம் பேசுதல்

சீவகனிடம் ஊடல் கொண்ட இலக்கணையிடம் கிளி அறிவுரை கூறுவது போன்ற கருத்துக்கள் இடம்பெற்றுள்ளது. சான்றாக,

**“பழியொடு மிடைந்த தேனும் சீறபி பரலி னாற்கு**
**வழிபாடு தெய்வ மாக வரங்கொடுத் தருளல் வேண்டும்**
**ஒழிபடைக் களிறுபோல உயங்கவும் உருகி நோக்கம்**
**வழிபாடு கோதை போலாம் பெண்டிரைக் தெடப்பிறந்தான்.”**[68]

என்ற பாடல் வரிகளில், கணவன் செய்யும் செயல் பழியாக கூறப்படுவதாயினும் அதனைப் பொருத்தருள வேண்டும். அடிதொழுதவனுக்கு வழிபடும் தெய்வம்போல் விரும்பிய வரத்தைக் கொடுத்து அருளுதல் வேண்டும் எனக் கிளி இலக்கணையிடம்

கூறுகின்றது. இவ்வாறு பறவைகளிடமும், உயிரற்ற பொருட்களிடமும் தன் காதல் ஏக்கத்தினையும் காட்டியுள்ளார்கள் காப்பியப் பெண்கள் என்பதை மேற்கண்ட பாடலடிகள் உறுதிசெய்கின்றன.

## தொகுப்புரை

தற்கால அவசரமான சூழலில் எளிமையான சீர்திருத்தத் திருமணங்களே பொருத்தமானதாகும். காப்பியக் காலக் கற்பனைத் திருமணங்கள் கண்டு களிப்பதற்கு மகிழ்ச்சியாக உள்ளது.

காப்பியக்காலக் கற்பனைக் கெட்டாத ஆடம்பரத் திருமணங்களை நம்மால் படித்து மட்டுமே இரசிக்க முடிகிறது. புகைகளையும், விளக்குகளையும் முளைப்பாலிகைகளையும் நிறைகுடங்களையும் மகிழ்வுடன் ஏந்தி வந்தனர்.

திருமணம் கண்ட கண்ணகி தன் காதல் கணவனைப் பிரியாமல் கை நெகிழாமல் இனிதே கூடி என்றும் இன்புற்று வாழ்க தீது அற்று நலம் பெற்று இனிது வாழ்க வளமெல்லாம் பெற்றுக் பொங்குக என்று பெண்கள் மலர்தூவி வாழ்த்தி மகிழ்ந்தனர் என மணச் சடங்குகளைப் பற்றிக் காப்பியம் கூறுகின்றது.

ஒவ்வொரு காப்பியமும் சிறிது மாறுபாட்டுடன் திருமணச் சடங்குகளைப் பற்றிக் கூறுகின்றது. சீவகன் மணமுடித்த எட்டுப் பெண்களின் திருமணமுறைகளையும், அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட பல்வகையான சீதனங்களையும் அறியமுடிகின்றன.

சீவகன் எட்டுப் பெண்களையும் மணமுடிக்கின்றான். ஒவ்வொரு பெண்களையும் மணமுடித்துப் பிரியும்போது, காப்பிய மகளிர் மிகுந்த மனவேதனை அடைந்துள்ள நிலைப்பாட்டை இவ்வியலில் அறியமுடிகின்றது.

# சான்றெண் விளக்கம்

1. தொல்காப்பியம், கற்பியல், நூ.51
2. சீவகசிந்தாமணி, பா.187
3. மேலது, 486
4. மேலது, 487
5. மேலது, 489
6. மேலது, 490
7. மேலது, 3064
8. மேலது, 3065
9. மேலது, 3066
10. மேலது, 590
11. சீவகசிந்தாமணி, பா.823
12. மேலது, பா.826
13. மேலது, பா.829
14. மேலது, பா.831
15. மேலது, பா.833
16. மேலது, பா.834
17. மேலது, பா.835
18. மேலது, பா.1063
19. மேலது, பா.1064
20. மேலது, பா.1343
21. மேலது, பா.1344
22. மேலது, பா.1489

23. மேலது, பா.1490

24. சீவகசிந்தாமணி, பா.1684

25. மேலது,

26. சீவகசிந்தாமணி, பா.2078

27. மேலது, பா.2079

28. சீவகசிந்தாமணி, பா.2430

29. மேலது, பா.2431

30. சீவகசிந்தாமணி, பா.2433

31. சீவகசிந்தாமணி, பா.24353

32. மேலது, ப.2461

33. மேலது, ப.2468

34. கலித்தொகை, பா.137

35. சீவகசிந்தாமணி, பா.1166

36. அகநானூறு, பா.203

37. சீவகசிந்தாமணி, பா.1772

38. மேலது, பா.710

39. மேலது, பா.1700

40. மேலது, பா.996

41. மேலது, பா.997

42. மேலது, பா.998

43. மேலது, 1742

44. மேலது, பா.1743

45. மேலது, பா.1313

46. மேலது, பா.1315

47. சீவகசிந்தாமணி, பா.742

48. மேலது, பா.1743

49. மேலது, பா.1533

50. மேலது, பா.1540

51. மேலது, பா.1659

52. மேலது, பா.1188

53. மேலது, பா.1660

54. மேலது, பா.377

55. மேலது, பா.899

56. மேலது, பா.2044

57. மேலது, பா.1879

58. மேலது, பா.1000

59. மேலது, பா.1363

60. மேலது, பா.1364

61. மேலது, பா.1360

62. மேலது, பா.1366

63. மேலது, பா.1375

64. மேலது, பா.1526

65. மேலது, பா.1519

66. மேலது, பா.1661

67. மேலது, பா.1666

68. மேலது, பா.2512

# இயல் -5

# மகளிரும் கலைகளும்

நாடோடி வாழ்க்கை முறைகளில் இருந்து நிலையான வாழ்வியலைக் கைக்கொண்ட மனித இனம், காலப்போக்கில் நாகரிக வாழ்வியல் நிலையை எட்டியது. மனித நாகரிக வாழ்வியல் நிலையின் உச்சத்தில், கலைகள் போன்ற சிறப்பம்சங்கள் தோற்றம் பெற்றன. மனித நாகரிகத்தின் பொழுதுபோக்காகவும், தனித்திறனின் வெளிப்பாடாகவும் அமைந்த கலைகள் இன்று வாழ்க்கையில் பிரிக்க இயலாத ஒன்றாக அமைந்துள்ளது. இலக்கியங்கள் கலைகளின் வெளிப்பாட்டுத் திறன்களை, வெளிப்படுத்துவதில் முக்கியப் பங்காற்றியுள்ளதை அறியமுடிகிறது.

சீவகசிந்தாமணி காப்பியத்தில் கலைகள் குறித்தான பதிவுகள் இடம்பெற்றுள்ளன. குறிப்பாக சமூகத்தில் ஆண்களுக்கு இணையாகப் பல்வேறு கலைத்திறன்களைக் கைக்கொண்டவர்களாக மகளிர் இருந்துள்ளனர் என்பதற்குச் சான்றாதாரங்கள் இடம்பெற்றுள்ளன. அந்தவகையில், சீவகசிந்தாமணியில் மகளிர் கைக்கொண்டிருந்த பல்வேறு வகையான கலைகளைக் குறித்து ஆராய்ந்து விவரிப்பதாக இவ்வியல் அமைந்துள்ளது.

**கலை விளக்கமும் வரையறையும்**

தனிமனித சிந்தனையின் வெளிப்பாடாகவும், சமூகத்தின் கூட்டிணைவாலும் கலை வெளிப்பாடு அமைகிறது. அத்தகைய கலை குறித்த விளக்கமானது பின்வருமாறு, ‘‘கலைகள் இரண்டு வகை ஒன்று கலை கலைக்காகவே உள்ளது. கலை வாழ்க்கைக்காக உள்ளது. என்பர் முன்னதை ரசிக்கலாம் ரசித்துக் கொண்டே இருக்கலாம் அதில் எந்த பிரதிபலிப்பையும் காண முடியாது. அழகை ஆராதிக்கலாம் அவ்வளவு தான் ஆனால் பின்னதில் ஒரு சிக்கலான ரசனை

பொதிந்து கிடக்கும் அந்த ரசனையை மீண்டும் மீண்டும் சிந்தித்து ரசித்தால் தான் உண்மை அழகைக் காணமுடியும். கலை வாழ்க்கைக்காகவே என்ற பிரிவில் தொழில் முறைக்கலைகளை அடக்க வேண்டியிருக்கிறது. இதனால் பயனில்லா நோக்கமில்லாக் கலைகளே இல்லை. கலைகள் நோக்கத்தோடே கருத்துப் புலப்பாட்டு நோக்கத்தோடு படைக்கப்படுகிறது."[1] என்ற கருத்து கலை என்பது என்ன என்பதை எடுத்துக்காட்டும் விதமாக அமைந்துள்ளது.

சகமனிதனுடன் உறவாடுவதும் கலையாகக் கருதப்படுகிறது. இதனை, ‘‘கலை என்பது ஏட்டளவில் நின்றுவிடும் ஒன்று அன்று தூய உடைஅணிவது ஓர் அழகுக்கலை குறித்த மணியில் குறிப்பிட்ட இடத்திற்குச் செல்வது ஒழுங்குக்கலை தம் நண்பருடன் முகமலர்ந்து செல்வது ஒழுங்குக்கலை தம் நண்பருடன் முகமலர்ந்து இனிய சொல் பேசிப் பழகுவது நட்புக்கலையாகும்’’[2] இவ்வாறாக, வாழ்க்கையில் கலை என்பது மக்களோடு இணைந்து, பிரிக்க இயலாத ஒன்றாக இருக்கின்றது. கலையுணர்வு என்பது அனைவரிடத்திலும் காணக்கூடிய ஒன்று மனிதன் இவ்வுலகில் ஆறறிவுடன் இயங்கத் துவங்கிய போதே கலையும் அவனுடன் இயல்பாகப் பிறந்துவிட்டது. கற்காலத்தில் உள்ள மனிதன் கலையுணர்வுடன் வாழ்ந்தான் என்பதை ஆய்ந்து அறிந்த வரலாற்று அறிஞர்கள் கலையுணர்வுடன் வாழ்ந்ததைக் குறிப்பிடுகின்றனர். இதனை மெய்ப்பிக்கும் வகையில் அமைந்த கூற்றானது. ‘‘தாம் வாழ்ந்த கற்குகைகளின் சுவர்களைத் தம்மால் முடிந்த அளவில் வண்ண ஒவியங்களில் அழகாக்குகின்றனர். தம் மனம் விழைந்த படங்களைக் கற்களில் பதித்துக் சிலைகளாக்கினர் தாம் வாழ்ந்த குகை இல்லங்களைத் தூயனவாய் வைத்திருக்க முயன்றனர்’’[3] என்ற கூற்று மிகப்பழங்காலத்தில் வாழ்ந்த மக்களும் கலையுணர்வுடன் வாழ்ந்தனர் என்பதை எடுத்துக்காட்டுகின்றது.

கலை வெறும் செல்வந்தருவதோடு மட்டும் அன்றி நம் மனத்தையும் பண்படுத்த வல்லது என்பதை பலரும் கூறிவருகின்றனர். அதாவது, “யாழின் மெல்லிய நரம்புகளில் இருந்து எழும் இன்னோசை தினைப்புனத்திற்கு உணவு கொள்ள வரும் களிற்றையும் அதிலும் மதக்களிற்றையும் கட்டுப்படுத்தியதை இலக்கியங்கள் இயம்புகின்றன இது இசைக்கலையின் சிறப்பு”[4] என்ற இக்கருத்து இசைக்கலையின் சிறப்பைக் கூறும்படியாக அமைந்துள்ளது. இவ்வாறு மனிதனின் ஒவ்வொரு செயலும் கலையினை உள்ளடக்கியதாக உள்ளதை மேற்குறித்த கருத்துக்கள் மூலம் அறியமுடிகின்றன.

**கலைத்திறன்களில் மகளிர்**

‘மங்கையராகப் பிறப்பதற்கே நல்ல மாதவம் செய்திட வேண்டுமம்மா’ என்ற கவிஞரின் கூற்று பெண்குலத்திற்குப் பெருமை சேர்க்கும் படியாக அமைந்துள்ளது. பண்டைக் காலம் முதல் தற்காலம் வரையில் தொன்று தொட்டு பெண்கள் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு, என்று நான்கையும் அணிகலன்களாகக் கொண்டுள்ளனர். அவை மட்டும் இன்றி கலைத்திறன்களில் கைதேர்ந்தவர்களாகவும், தொழில்களில் தனித்திறமைகள் பெற்றவர்களாகவும், திகழ்ந்துள்ளனர். மேலும், ஆண்களுக்கு இணையான தொழில்களில் பெண்களும் தங்களை ஈடுபடுத்திக் கொண்டுள்ளனர்.

பெண்கள் பல்கலைகளில் வல்லுனர்களாகவும் திறமைமிக்க திறனாய்வாளர்களாகவும் இருந்துள்ளனர். குறிப்பாக ஆலோசனை வழங்குபவர்களாகவும், அரசியல் அறிவுடையவர்களாகவும் மருத்துவப் பெண்ணாகவும், மந்திரம், ஆற்றல் உடையவர்களாகவும் ஆடல் கலையில் சிறந்தவர்களாகவும் எனப் பல்வகைத் துறையிலும் தங்கள் திறமையினை நிலைநிறுத்திக் கொண்டுள்ளதை சீவகசிந்தாமணி காப்பியம் பதிவுசெய்துள்ளது.

ஆணாதிக்கக் கண்ணோட்டம் கொண்ட சிலரின் செயல்பாடுகளால் திறமை மிகுந்த பெண்கள் கூட வீட்டில் முடக்கப்பட்டு ஒடுக்கப்பட்டு இருக்கும் நிலை இருந்து வருகின்றது. காப்பியத்தில் இடம்பெற்றுள்ள பெண்களின் திறமைகள் பல்வேறு இடங்களில் பதிவாக்கம் பெற்றுள்ளன. எனவேதான், பல்திறன் கொண்ட கலை வல்லுனர்களாக அக்காலத்தியப் பெண்கள் இருந்துள்ளதை சீவகசிந்தாமணி காப்பியம் எடுத்துக்காட்டுகிறது.

### சீவக சிந்தாமணியில் மகளிரின் கலைத்திறன்கள்

சீவக சிந்தாமணியில் ஆடல், கூத்து ,நாடகம், போன்ற கலைகளில் திறமை மிக்கவர்களாகப் பெண்கள் காட்டப்பட்டுள்ளனர். கலைகள் மனிதனுடைய மனத்தில் உணர்ச்சியைக் தோன்றச்செய்து. அழகையும், இன்பத்தையும் அளிக்கக் கூடியது. பெண்கள் தங்களுடைய அறிவினாலும், கற்பனையாலும், திறமையை வெளிக்காட்டுகின்றனர். இவ்வகையில், காப்பியத்தில் இடம்பெற்றுள்ள மகளிரின் கலைத்திறன்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். அவை, ஒன்று நுண்கலைகள் சார்ந்த மகளிர், மற்றொன்று தொழிற்கலை சார்ந்த மகளிர் என்பதாகும்.

### நுண்கலைகள் சார்ந்த மகளிர்

கலைகளைப் பொழுதுபோக்கிற்காகவும், திறமையினை வெளிக்காட்டும் நோக்கத்தோடும் செயல்படுத்தப்படுகின்ற கலைகள் உள்ளன. அந்தவகையில், இவ்விரு தன்மையிலும் மகளிர் தங்கள் கலைத்திறன்களைக் கைக்கொண்டிருந்துள்ளதை அறியமுடிகிறது. நுண்கலைப் பிரிவானது, மிகவும் மென்மைத் தன்மையுடையதாகவும், கூர்மையுடைத்ததாகவும் அமையும். குறிப்பாக நுண்கலைகளாக சுண்ணம் இடித்தல், வாழை இலையில் ஓவியம் வரைதல், கோலமிடுதல், ஒப்பனைக்கலைகள், சிற்பம் செய்தல், ஆடல், பாடல், மருத்துவம்

போன்றவற்றைக் குறிப்பிடலாம். தொழிற்சார்ந்த கலைகளாக, அரசியல்கலை, பேச்சுக்கலை, போர்க்கலை, மந்திரக்கலை ஆகியனவற்றைக் குறிப்பிடலாம்.

**சுண்ணக் கலை**

சீவகசிந்தாமணி காப்பியத்தில் பல்வேறு வகையான நுண்கலைகளைக் கைக்கொண்டு, பாண்டித்தியம் பெற்ற மகளிர்கள் குறித்தான பதிவுகளைக் காணமுடிகின்றன. அந்தவகையில், சுண்ணப்பொடி இடிக்கின்ற கலையில் மகளிர் தேர்ந்தவர்களாக இருந்துள்ளனர். மகளிர் தம் வாழ்வில் சிறந்த பண்புகளையும், அடக்கத்தையும் பெற்றதோடு கலைகளில் பிறப்பிடமாகவும் கொண்டு விளங்கினர். எதிர்வாதம் செய்யாத பெண்கள் இருந்த அதே காலத்தில் ஆண்களை எதிர்த்து வாதம் செய்யும் குணமும், பிடிவாதம் குணம்கொண்டு செயல்பட்ட முனைப்புடைய பெண்களும் இருந்துள்ளனர். அவர்களின் நுண்ணறிவுத் திறனை வெளிக்காட்டுப்படியாக போட்டி நடைபெறுகின்றது. குணமாலை சுரமஞ்சரி தயார் செய்த சுண்ணப்பொடியில் சுண்ணம் தயாரிப்பதோடு மட்டும் இன்றி அதன் தன்மையும் ஆரயப்பட்டு கருத்து கூறப்பட்டுள்ளது.

குணமாலை, சுரமஞ்சரி சுண்ணம் தயார் செய்து அதை நீராடச் செல்லும் பொழுது எடுத்துச் செல்கிறனர். யாருடைய சுண்ணம் சிறந்தது என்ற போட்டி இருவருக்கும் நடைபெறுகின்றது. இதனை,

**“சுண்ண மென்பதொர் பேர்கொடு சோர்குழல்**
**வண்ண மாலை நுசுப்பு வருத்துவான்**
**எண்ணி வந்தன கூறிவை யோவென**
**நண்ணி மாலையை நக்கன ளென்பவே.”**[5]

என்ற பாடல், நுண்ணறிவுடன் பெண்கள் தங்கள் பொழுதைக் கழித்ததை மேலே கூறப்பட்ட வரிகள் காட்டும் படியாக உள்ளது. சுண்ணப்பொடி என்பது பெண்கள் கண்ணில் இடக்கூடிய ஒன்று என்ற கருத்து கூறப்படுகின்றது.

**வாழை இலையில் கலை**

மகளிர், இளங்குருத்து உடைய கன்னி வாழையின் வெள்ளிய குருத்தினை எடுத்து அதனுள்ளே சிற்பத்தொழில் செய்வானைப் போன்று, கொடியின் இடையே கயல்மீன்கள் பிணைக்கப்பட்டது போன்ற ஓவியமாக கைவிரலின் நகத்தாற் கிள்ளிச் சிறந்த முறையில் மார்பகத்திலே சூடியுள்ளதோடு, சீவகனைக் கூடி மகிழ நினைத்த மகளிர் குலை ஈனாத வாழையின் குருத்தில் இத்தகு சிறப்பான கலையினைச் செய்துள்ளனர். கலையாற்றலுக்கு இவை சிறந்ததொரு உதாரணம் என்றே குறிப்பிடலாம். இதனை பின்வரும் பாடல் வரிகள் வழியாக அறியலாம்.

**“கொழுமடற் குமரி வாழைத் துகிற்சுருள் கொண்டு தோன்றச்**
**செழுமலர்க் காம வல்லிசெருக்கயல் சிற்ப மாகக்**
**கழுமணிச் செம்பொ னாழிக் கைவிர லுகிரிற் கிள்ளி.”**[6]

இன்றைய காலகட்டத்திலும், நட்சத்திர விடுதிகள், கண்காட்சிகளில் வாழைக்குருத்தில், வாழைப் பழங்களில், வாழைப்பூவில், வாழைப்பட்டையில் சில வடிவங்களைச் செய்து அழகுபடுத்துகின்றனர்.

**கோலமிடல்**

கலைநயத்துடன் செய்யும் செயல்பாடுகளில் பெண்களுக்கே உரிய சிறப்புகள் தனித்துவம் மிக்கவை. எந்த ஒரு செயலும் எழிலுடன் இருப்பதற்கும் அமைப்பதற்கும் தகுதியுடைவர்கள் பெண்கள். திருமணத்திற்கு வண்ணப் பொடியாலே கோலமிட்டு மேலவுதானம் அமைத்து அழகு பெறச் செய்கின்ற கலையில் கைதேர்ந்தவர்கள் என்பதை அறிவதற்குப் பின்வரும் வரிகள் சான்றாக அமைந்துள்ளன.

**“விரிந்துவான் பூத்தென விதானித் தாய்கதிர்**
**அருங்கலப் பொடியினா லாய்பொற் பூமகள்**
**மருங்குல போற் குறிற்றிய நகரின் மங்கல”**[7]

என்ற பாடலில், பெண்கள் மாக்கோலமிடுவதில் சிறந்த நிபுணத்துவம் வாய்ந்தவர்களாக விளங்கியுள்ளதைக் காணமுடிகிறது.

**மாலை தொடுத்தல்**

மகளிர் கூரிய நகத்தால் கீறி ஒரு செங்குழ நீர் மாலையை புனைந்ததாகக் காப்பியத்தில் குறிப்புகள் காணப்படுகின்றன. அதாவது, நகத்தைக் கொண்டு மாலை தயார் செய்துள்ளதை கீழ்வரும் பாடல் விளக்குகின்றது.

**“கூருகிர் விடுத்ததோர் கோல மாலையைப்**
**பேரிசை வீணையிற் சூட்டிப் பெண்கொடிக்**
**காரிகை யுலகுணர் கடவுப் பாடுமே.”**[8]

என்ற பாடல் வரிகள் மாலையை வீணையிலே சூடிக் கடவுளை வணங்கியதைக் காட்டுகின்றது. மாலை தொடுத்து அருகனை வழிபட்டதையும், மாலை தொடுத்தலில் தங்கள் திறமையினை மகளிர் வெளிப்படுத்தியுள்ளதையும் அறியமுடிகிறது.

**மந்திரக்கலை**

தத்தை தன் மனதில் எண்ணியதை நினைத்தவுடன் அறியும் மந்திரம் கற்றவளாகக் காட்டப்படுகிறாள். அம்மந்திரத்தைத் தகுந்த நேரத்தில் சரியான முறையில் பயன்படுத்துவதை சில நிகழ்வுகளின் வாயிலாக வெளிக்காட்டியுள்ளார். இதனை,

**“மாண்டதோர் விஞ்சை யோதி மதிமுகந் தைவந் திட்டா**
**நீண்டது பெரிது மன்றிநினைத்துழி விளக்கிற றன்றே.”**[9]

என்ற பாடல் வரிகள் சீவகனைக் காணாத அவனுடைய நண்பன் நந்தட்டன் தத்தையின் உதவியை நாடுகின்றான். அவளுடைய மந்திர ஆற்றலால் “ஓர் விஞ்சையைக் கூறித் தன் திங்களனைய முகத்தைத் தடவினாள். நீண்ட தொலைவும் அரியதுமாக அல்லாமல் அவ்விஞ்சை சீவகன் இருக்கும் இடத்தைக் காட்டுகின்றது. இவ்வாறு தான் கற்ற கலையின் வழியாக தன் கணவனைக் கண்டு

அறியும் மந்திரக்கலையினைப் பொருத்தமான இடத்தில் பதிவு செய்துள்ளார் ஆசிரியர்.

**பொறியியல் கலை**

காப்பியக் காலத்தியப் பெண்கள் அறிவியல் பாங்குடன் இருந்துள்ளனர். தங்களுக்கென தனித்தன்மையுடன் இருந்துள்ளதை நிரூபிக்கும் விதமாக பல இடங்களில் ஆசிரியர் நிகழ்வுகளைக் காட்டியுள்ளார். விசயை வானூர்தியைச் செயல்படுத்தும் விதம் போற்றுதற்குரிய ஒன்றாக உள்ளது. சான்றாக,

**"ஆடியன் மாமயி லூர்தியை யவ்வழி**
**மாடமுங் காவும டுத்தொர்சின் னாள்செலப்**
**பாடலின் மேன்மேற் பயப்பயத் தான்றுரந்**
**தோடமு றுக்கிய ணர்ந்தவு ணர்ந்தாள்."[10]**

என்ற பாடலில், விசயை மயிற்பொறியினை இயக்கும் விதத்தினைக் காணமுடிகின்றது. விசயை காண்பவர் மயங்குமாறு யாழ் நரம்பில் தவழும் தன் விரல்களால் பொறியை வலப்பக்கம் திருப்பி, எழுப்பி வானில் உலவும் முகிலைப் பிளந்து வானிலே பறக்குமாறு திரிப்பி நன்றாகக் கற்று அறிந்து கொண்டாள் என்பதை,

**"பண்டவழ் விரலிற் பாவை பொறிவலஞ் திரிப்பப் பொங்கி**
**விண்டவழ் மேகம் போழ்ந்து விசும்பிடைப் பறக்கும் வெய்ய**
**பண்டவழ் வேற்கட் பாவை பொறியிடந் திரிப்பத் தோகை**
**கண்டவர் மருள வீழ்ந்து கால்குவித் திருக்கு மன்றே."[11]**

என்ற பாடல் வரிகள் விளக்குகின்றது. பெண் சாதிக்க முடியாத துறைகளே இல்லை முயற்சி செய்தால் விண்ணையும் மண்ணாக மாற்றமுடியும் முயற்சியும் தன்னம்பிக்கையும் செயல்பாட்டில் கொண்டால் அவை பொய்க்காது என்ற கூற்றுகளை இலக்காகக் கொண்டவர்களாகக் காப்பியக் காலத்தியப் பெண்கள் திகழ்ந்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது..

**பந்தாடல் கலை**

பந்தாடல் கலை பொழுது போக்கு சார்ந்த கலை வகைப்பட்டதாகும். விமலையின் பந்தாடும் திறம் சிறப்பான ஒன்றாக சிந்தாமணியில் பேசப்படுகின்றது. சாதாரணமாக பந்து விளையாடுவதிலிருந்து, விமலை ஐந்து பந்துகளைக் கொண்டு ஆடும் திறன் சிறப்புப்படுத்திக் கூறப்பட்டுள்ளதை,

**“மாலை யுட்க ரந்த பந்துவந்து கைத்த லத்தவாம்**
**ஏலநாறி ருங்கு ழும்புறத்த வாண்மு கத்தவாம்**
**நூலி னேர்ப சுப்புநோவவுச்சி மாலை யுள்ளவாம்**
**மேலெ முந்தமீநி லத்தவிரல கைய வாகுமே.”**[12]

என்ற பாடல் வரிகள் மாலையிலே மறைந்த பந்து கையிலே வந்து அகப்பட்டும், பின்னால் உள்ள பந்து முகத்திலே வந்தும், தலையிலே சென்ற பந்து மார்பிலேயும், மாலையின் மேலே போன பந்து மீண்டும் விரலிடத்திலும், கையிடத்திலும் வந்து, மாறி மாறி ஆடும் திறன் கொண்டவளர்களாக விளங்கிய மகளிரின் பந்தாடும் திறன் விவரிக்கப்படுகின்றது.

**பாடல் கலை**

பாடுவதில் சிறப்பு பெற்றவர்களாகப் பெண்கள் இருந்துள்ளதை வெளிப்படுத்தும் நோக்கில் கேமசரியாரை ஆசிரியர் காட்டியுள்ளார். மூன்றுலகமும் அன்பினால் பாடப்படுவதாகிய அருகனுடைய பாடலைக் கேமசரி பாடுகிறாள் என்று கருத்து இடம்பெற்றுள்ளது இதனை பாடல் வரிகள் காட்டுகின்றன.

**“முத்துமிழு முந்நீர் மணிவண்ண்ன் மூன்றுலகம்**
**பத்திமையாற் பாடல் படுவான்றான் பாடக் கேட்டு”**[13]

என்ற பாடல் வரிகளில் இருந்து, பெண்கள் பாடும் திறன் பெற்றவர்களாக இருந்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

**ஆடல் கலை**

மன்னர்களின் பொழுது போக்கிற்காக ஆடல் கலை, நாடகம் நிகழ்த்தப்பட்டுள்ளது. ஆடல் மங்கையாக அநங்கமாலை காட்டப்பட்டுள்ளார். ஆடல் மகளிர் என பொதுவாகவும் குறிப்பிட்டுள்ளனர். சச்சந்தன் இறந்த பொழுது அவர்கள் வருத்தமுற்றதைக் கூறும் பொழுது அரம்பை போன்ற முற்றுங்கற்ற ஆடல் புரிகின்ற நாடக மகளிர் ஆடியுள்ளனர் என்பதை அறியமுடிகிறது. இதனை,

**"மந்தீ கிளவியா ரைஞ்நூற்றுவ ரவைதுறை**
**போயாட லரம்பை யன்னா."**[14]

என்ற பாடல் மூலம் ஆடல் கலையில் காண்போரும் வியந்து நிற்கும்படி ஆடிய அனங்கமாலையின் ஆடும் திறனை அறியமுடிகின்றது. மேலும்,

**"தெண் மட்டுத் துவலை மாலை தோனாடு துளிப்பத் திங்க**
**ஞண்ணட்ட குவலை போலு முருவக்கண் வெருவி யாட**
**விண்விட்டுக் கடவுள் வீழ நுடங்குன புரவ நெஞ்சம்**
**பண்விட்ட திருந்து கானும் பன்மனிக் கழலினார்க்கே."**[15]

என்ற பாடல் வரிகள் ஆடும் வேகத்தில் தேன் துளியினை வண்டுடன் மாலைகள் துளிப்பது போன்றும் திங்களுடன் சேர்ந்த குவலையைப் போலும் அழகான கண்கள் பிறழ்ந்து ஆட வானிலிருந்து தெய்வங்கள் விழப் புருவங்கள் அசைந்தன. அப்போது அதனைக் காண்பவர்க்கு நெஞ்சம் நிலை குலைந்தது என்று கூறும் படி அவள் ஆடல் அமைந்திருந்ததாகக் குறிப்பிடுவதைக் காணமுடிகின்றது.

இதே போன்று தேசிகப்பாவையின் ஆடல் திறனும் சிறப்பிக்கப்படுகின்றது. சந்திராய நகரத்து நாடகப்பெண் அணங்கமாலையில் தோழியான தேசிகப் பாவை, ஆடல், பாடல், என இரண்டிலும் சிறந்து விளங்குபவளாக காட்டப்படுகின்றாள். பல்லவநாட்டிற்க்குச் சீவகன் சென்றபோது தலைநகர் சந்திராபத்தில் மன்னன்

தளபதியின் மகன் உலோகபாலன் காணும் படியாகத் தேசிகப் பாவை எனும் ஆடல் மகள் ஆடிக் கொண்டிருந்ததை,

**“குழலெடுத் தியாத்து மாட்டார் கோதையிற் பொலிந்துமின்னும்**
**அழலவிர் செம்பொற் பட்டங் குண்டலம் மாரந் தாங்கி**
**நிழலவி ரல்குற் காசு சிலம்பொடு சிலம்ப டோள்**
**அழகிகூத் தாடு கின்றாள் ளரங்கின்தமே லரம்பை யன்னாள்.”**[16]

என்ற பாடலில், அரம்பை போன்ற நீண்ட தோளையுடையவள், தன் கூந்தலை எடுத்துக்கட்டி தேன் நிறைந்த மாலையைச் சூட்டி பொலிவு பெற்றாள். மேலும் தீயைப் போல ஒளிரும் பட்டமும், குண்டலமும், ஆரமும் அணிந்து அல்குலின் மேல் உள்ள மனிகள் காற்சிலம்போடு ஒலிசெய்ய அரங்கில் ஆடல் நிகழ்த்துகிறாள் என்ற கருத்து சிலப்பதிகார ஆடல்மகள் மாதவியின் கூத்தினை நினைவுபடுத்துவதாக உள்ளது.

**இசைக்கலை**

இசைக்கு முக்கியத்துவம் கருதியும் பெண்ணின் திறனை வெளிக்காட்டும் விதத்திலும் காந்தருவதத்தையார் இலம்பகத்தில் இசைக் கலைகள் குறித்தான கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன. அதாவது, ‘‘இசைக் கலைஞர் கட்குக் கந்தருவர், கந்தருவி எனப் பட்டங்கள் வழங்கப்பட்டன. வாத்தியக் கலைஞர் வாச்சிய மாராயன் எனப் பெயர் பெற்றார்.”[17] மேலும்,

‘‘இசையால் நெஞ்சங்களை அசையவைத்து இறைமையோடு இயுல்புடையதாகும் புறக்கட்டமைப்பில் இசைத்தமிழ் என்றே ஒரு வகைமை கொண்டு விலங்குகின்ற தனித்திறமை உடையது.”[18] என்ற கருத்துக்கு ஏற்றது போல இசை மனதினை மாற்றவல்லது. எல்லா இடத்திலும் இசை முக்கியத்துவம் உடையது என்பதைக் காட்டுவதற்கும் இசைக்கு மயங்காத உள்ளத்தோர் இல்லை என்பது முற்றிலும் மெய்யான கூற்று. கல்விக்கு உருவகமாகக் கையில் வீணையுடன்

கலைமகளைக் காட்சிப்படுத்தினர். ஓவியர்கள் வீணை செய்யும் ஒலியில் கலைமகள் வீற்றிருப்பதாய்க் கவிதை சொன்னவர் பாரதி எந்திரங்களின் துணையின்றிக் கைகளை மட்டும் சார்ந்து காலம் காலமாக மீட்கப்பட்ட யாழின் தன்மையும், அதன் சிறப்பையும், குற்றம் உடையது, குற்றம் அற்றது என்று யாழின் சிறப்பினை திறம்படக் கூறுவதாகவும், பெண்னை அடையாளப்படுத்தி இருப்பதை இவ்இலம்பகம் தத்தை வழியாகச் சிறப்பித்துக் கூறுகின்றது.

இசைக்கலையில் பெண்கள் சிறந்து விளங்கியதை சீவகசிந்தாமணி குறிப்பிடுகின்றது. சிந்தாமணியில் சுரமஞ்சரியார் இலக்பகமும், காந்தருவதத்தையார் இலம்பகமும் இசை நுட்பங்கள் சிலவற்றைக் கூறுகிறது.

புருவம் உயர்தல், கண் ஆடல், மிடறு வீங்குதல் பல் தோன்றல், போன்றவை குற்றங்களாகக் கூறப்பட்டன. இதன் வழி அக்காலத்தில் இசையில் ஏற்பட்டிருந்த பெருவளர்ச்சியினை அறியலாம். யாழ் வாசிப்பில் சிறந்தவளான தத்தை பல மன்னர்களோடு யாழ்ப்போர் கொண்டு, சீவகனைத் தவிர்த்து மற்றவர் தோற்கும் படி யாழ் மீட்டினாள் என்ற செய்தி புலப்படுகின்றது.

அவளுடைய யாழ் வாசிப்பினைக் கண்டு பறவைகள் மயங்கியதை அறியமுடிகிறது. அவளுடைய வீணைப் போருக்கு இசைநூலோடே வாசிக்கத் தொடங்கிய நுண்ணிய நுணுக்கலையுடைய வணிகரும் தோற்றுவிடுகின்றனர். வாடைக் காற்றுப் பட்டால் பொருத்துக் கொள்ளும் தன்மை இன்றி கருகும் அழகிய தாமரைப் பூவைப் போன்று வாடினார்கள் என்பதை.

**“வாலரக் கெறிந்த காந்தன்மணியரும் பனைய வாகிக்**
**கோல்பொரச் சிவந்த கோலக் குவிவிரன் மடந்தை வீணை**
**நூல்பொரப் புகுந்த நுண்னுல்வணிகருந் தொலைந்து மாதோ**
**கால் பொரக் கரிந்த காமர்பங்கயப் பழன மொத்தார்.”**[19]

என்று, தத்தையின் வீணைப் போருக்கு ஈடுசெய்பவன் இங்கு இல்லை, வானவரின் அறிவைக் கெடுக்கின்ற நீண்ட வில்லையுடைய காமனே இவருக்கு இணையானவன் என்று கட்டியங்காரன் கூறுவதை,

**“தேனுயர் மகர வீணைத் தீஞ்சுவை யிவளைவெல்வான்**
**வானுயர் மதுகை வாட்டும் வார்சிலைக் காமனாகும்**
**ஊனுயர் நுதி கொள் வேலீ ரொழிகவீங் கில் யென்றான்**
**கானுய ரலங்கன் மாலைக் கட்டியங்கார னன்றே.”**[20]

என்ற பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றது. மேலும்,

**“இளிவாய்ப் பிரசம் யாழாக.”**[21]
**“குரல்குர லாகப் பண்ணிக் கோதைதாழ்- குஞ்சியான்றன்**
**உருகின மரமுங் கல்லு மோர்த்தொழிஇப் பாடுகின்றான்”**[22]

என்று, இசைக் குரலாகப் பல இருப்பினும் அவற்றுள் நரம்புக் கருவியான யாழ் முதலிடத்தைப் பெறுகின்றது. யாழின் வளர்ச்சி நிலையை வீணை என்று கூறுகின்றனர். தத்தை மட்டும் இன்றி விமலையும் யாழ் வாசித்துப் பாடுகிறாள் என்பதை,

**“பண்ணமை மகர வீணைநரம்புரீஇப் பாடலை பாட”**[23]

என்ற வரி புலப்படுத்துகிறது. பந்தாடல் திறன் மட்டும் இன்றி யாழ் வாசிப்புத்திறனும் உடைய பெண்ணாக விமலை காட்டப்படுகிறாள். தன்னுடைய திறமைக்கு ஏற்ற துணையைப் பெண்கள் தேர்ந்தெடுக்கும் உரிமையைப் பெற்றுள்ளதை காட்டுவதாக கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன.

**அரசியல் கலை**

இன்றைய சூழலில் அரசியல் திறன்வாய்ந்த பெண்கள் நாட்டின் கண்களாக மதிக்கப்பட்டு போற்றப்பட்டு வணங்கப்படுகின்றனர். அரசியல் சாணக்கியர்களாக, இரும்பு பெண்களாக இன்று இருப்பது போல் அன்று அரசியல் அறிவு அறிந்தவர்களாக அரசியல் சூட்சமங்களை எடுத்துக் கூறுபவர்களாக பெண்கள்

இருந்துள்ளனர். அன்றைய மன்னர் ஆட்சியில் பெண்கள் அரசியல் அறிவில் சிறந்தவர்களாகத் திகழ்ந்துள்ளதைக் காப்பியத்தின் மூலம் அறியமுடிகிறது.

காப்பியத்தில் சீவகன் அரசாட்சி செய்வதற்கு வேண்டிய அரசியல் சூட்சமங்களை விசயை எடுத்துரைக்கிறாள். இவற்றிலிருந்து, விசயையின் அரசியல் அறிவினை அறியமுடிகிறது. இதனை,

**"சுற்றஞ் தங்களை யொற்றரி னாய்தலும்**
**கற்ற மாந்தரைக் கண்ணெனக் கோடலும்**
**சுற்றம் சூழ்ந்துபெ ருக்கலுஞ் சூதரோ**
**கொற்றங் கொள்குறிக் கொற்றவற் கென்பவே."**[24]

என்ற பாடல் வரிகள் விசயை சீவகனுக்கு கூறும் அறிவுரையைக் காட்டுகின்றது. ஆட்சிநிலையில் இருக்கும் பொழுது ஓர் ஒற்றனை இன்னொரு ஒற்றனைக் கொண்டு ஆராய வேண்டும் என்றும் கற்ற அமைச்சர்களைக் கண்களைப் போலக் காக்க வேண்டும் மந்திரிகள் சுற்றம் தந்திரிச்சுற்றம் என்று இருவகைச் சுற்றங்களையும் பெருக்கிக் கொண்டு செயல்படல் வேண்டும். சிந்தித்துச் செயல்படுதல் வெற்றியை விரும்பும் அரசர்க்குரிய செயல் என்று நூலில் சிறந்தோர் கூறுவர் என்று விசயை சீவகனுக்கு அரசியல் சூட்சமங்களைக் கூறுகிறாள்.

வலிமை குறைந்தவர்கள் பொருளைக் கொண்டு வலிமை உடையவர்களாக மாற்ற முடியும். பொருள் படை வன்மை உண்டாகும், இடையால் நாடு கிடைக்கும் நாட்டால் மிகுந்த செல்வம் கிடைக்கும். செல்வம் கிடைத்தால் அதைக்கொண்டு வாங்க இயலாததையும் வாங்கிவிடலாம், என்று சீவகனுக்கு விசயை அரசியல் நுணுக்கங்களை எடுத்துக்கூறுவதை,

**"குன்றி னார்களைக் குன்றென வாக்கலும்**
**பொன்றுந் சாகத்தின பொருள் செய்யுமே**
**பொன்னி னாகும் பொருவடை யப்படை**

**தன்னி னாகுந் தரணி தரணியிற்**
**பின்னை யாகும் பெரும்பொரு ளப்பொருள்**
**துன்னுங் காலைத்துன் னாதன வில்லையே.”**[25]

எனும் பாடல், சீவகனை ஆட்சி செய்யும் முறையினையும் செயல்படும் விதங்களையும் விவரிக்கும் படியாக விசயை அரசியல் திறனை அறியமுடிகிறது.

### தொழிற்கலை சார்ந்த மகளிர்

இன்றைய காலத்தியப் பெண்கள் சாதிக்காத துறைகளே இல்லை என்ற கருத்துக்கு ஏற்ப, காப்பியக் காலத்தியப் பெண்களும் அனைத்துத் துறைகளிலும் சாதனை புரிந்தவர்களாக இருந்துள்ளனர். கலைகள் மட்டும் பொழுதுபோக்காக கொண்டவர்கள் மட்டுமின்றி தொழிலாளகச் செய்த மகளிர்கள் குறித்தான பதிவுகளைச் சீவகசிந்தாமணியில் காணமுடிகின்றன.

### காவல் மகளிர்

சிந்தாமணி காப்பியத்தில், ஆசிரியர் மகளிரை ஏவல் பெண்டிராய் மட்டும் எடுத்துரைக்காமல், வீரம் மிக்க காவல் மகளிராகவும் கூறியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. வீணைப் போருக்காக காந்தருவதத்தையார் சுயம் வர மண்டபத்திற்குச் செல்லும் போது காவல் மகளிர் கையில் கேடயத்தையும், வாளினையும் அம்பாறத் துணியையும், தோளில், வேலினையும், ஏந்தி பாதுகாவலுக்கு செல்கின்றனர்.

மார்புக் கச்சை அணிந்தும், ஆண் உடையினை உடுத்தியும், செம்பொன்னால் செய்த பாவை போன்றும், அம்பை விட விரைந்து செல்லும் திறன்மிக்கவர்களாக தந்தைக்கு முன்னே செல்லும் காவலராய்க் காட்டப்பட்டுள்ளனர். காவல் மகளிரின் தோற்றமிடுக்கைக் குறித்து,

**“ஆணை யாணை அகழமின் நீர் என**
**வேணுக் கோலின் மிடைந்தவ ரொற்றலின்**

**ஆணை யின்எம தேரென் றணிநகர்**

**காணுங் காதலிற் கண் ணெருக் குற்றவே’’**[26]

என்ற பாடல் வரியில், காவல் மகளிர் புறத்தோற்ற மிடுக்கினையும் அக எழுச்சியினையும் ஒருங்கே அமைவது போன்று விளக்கமாகக் கூறியுள்ளார். ஆசிரியர் காப்பிய காலத்தில் ஆண்கள் செய்ய வேண்டிய பணியினைப் பெண்கள் செய்துள்ளதையும் பெண்களை இவ்வாறு முதன்மைப்படுத்தி முன்னிருத்தி குறியிருப்பதையும் சிந்திக்கும் போது இன்றையக் காலகட்டத்தில் ஆச்சரியப்படக்கூடிய ஒன்றாக உள்ளது.

இன்றைய காலத்தில் மகளிர் நிலவிலும் காலடி வைத்து தன் திறனை வெளிப்படுத்திக் காட்டியுள்ளனர். காப்பியத்தில் இடம்பெற்றுள்ள மகளிரும் இன்றைய பெண்களுக்கு முன் உதாரணமாக உள்ளனர். இலக்கணையார் திருமணத்திற்கு முன் சீவகன் அரண்மனையில் வீற்றிருந்த போது, சீவகனுக்கு மகளிர் காவல் புரிந்துள்ளதை அறியமுடிகிறது. மேலும், அம்மகளிர்களே காவல் பணியில் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர். இதனை,

**“கலையீன்ற சொல்லார் கமழ்பூவணைக் காவல் கொண்டார்**

**கொலையீன்ற வேல்கண் ணவர்கூடிய மார்பற் கன்றே.’’**[27]

என்ற பாடல்வரிகள், ஆணுக்குப் பெண் காவலாக காப்பியக் காலத்தில் இருந்துள்ளதை எடுத்துக்காட்டுகின்றன. சுரமஞ்சரியார் இலம்பகத்தில் சுரமஞ்சரி காமன் கோட்டம் செல்லும் பொழுது காவல் மகளிர் ஆடவர் நெருங்கக் கூடாததால் கையில் கோல் கொண்டு அரசானது கட்டளையால் விலகிப் போங்கள் என்று கூறிக்கொண்டு சுரமஞ்சரியின் முன் செல்வதை,

**“ஆடவ ரிரிய வேகி யஞ்சொல்லார் சூழக் காமன்**

**மாடத்து ளிழிந்து மற்றவ் வள்ளலை மறைய வைத்து’’**[28]

என்ற பாடல் வரிகள் காவல் மகளிர் சூழ்ந்து செல்ல சுரமஞ்சரி காமன்தோட்டம் சென்றதைக் காட்டுவதாக அமைகின்றது.

## எருது ஓட்டும் மகளிர்

காப்பிய காலத்தில் எருதைச் செலுத்திச் செல்லும் தொழிலை மகளிர் செய்து வந்துள்ளனர். சுரமஞ்சரி காமன் கோட்டதிற்கு எருது பூட்டிய வண்டியில் செல்லுகின்றாள். எருதுபூட்டிய அவ்வண்டியைப் பணிப்பெண் ஒருத்தி ஓட்ட தோழியர்களோடு சுரமஞ்சரி செல்வதை,

**“பொன்னியன் மணியுந் தாருங் கண்ணியும் புனைந்து செம்பொன்**
**மின்னியற் பட்டஞ் சேர்த்தி யானெய்ப்பால் வெறுப்பவூட்டி**
**மன்னியற் பாண்டில் பண்ணி மடந்தைகோல் கொள்ள வையம்**
**இன்னியற் பாவை யேற்பத் தோழியோ டேறி னாளே.”**[29]

என்ற பாடலில், விரைவாகச் செல்லும் தன்னுடைய எருதைப் பொன்னால் ஆன மணியும், மாலையும், கண்ணியும், அணிவித்து மின்னலைப் போல ஒளிரும் பட்டத்தைச் சூட்டி, நெய்யையும் பாலையும் ஊட்டி எருதைச் செலுத்துகின்ற கோலைக் கையில் கொண்டு, சுரமஞ்சரியுடன் தோழிகள் வண்டியில் ஏறிச் செல்வதை இப்பாடல்வரிகள் புலப்படுத்தி நிற்கின்றது.

இக்கால மகளிர் பெண் விமானிகளாக, இரயில் ஓட்டுனர்களாக, கார் ஓட்டுனர்களாகப் பல்துறையிலும் சாதனைப்படைத்து வருகின்றனர். ஆனால், தோழிகளோடு சேர்ந்து மகிழ்ந்து எருது வண்டிகளை ஓட்டிக்கொண்டு அக்காலப் பெண்களும் சென்றுள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

## ஆடைகளைத் தூய்மை செய்யும் மகளிர்

நாகரிக வாழ்க்கை முறையில் மக்கள் தங்கள் வேலைகளைச் செய்வதற்குப் பல்வேறு இயந்திரங்கள் வந்துவிட்டன. துணிகளைப் துவைப்பதற்கு சலவை செய்யும் இயந்திரம் இன்றும் பயன்படுத்தப்படுகிறது. இதனால், தங்கள் துணிகளைத்

தாங்களே தூய்மை செய்துகொள்வதற்கு இயலாத சூழல் இன்று உள்ளது. அக்காலத்தில் துணிகளைத் தூய்மை செய்வதற்குத் தனியாகப் பணிப்பெண்கள் இருந்துள்ளதை அறியமுடிகிறது. காப்பிய காலத்திலும் தங்கள் ஆடைகளை தூய்மைப்படுத்த பணிப்பெண்களை வைத்திருக்கின்றனர். காப்பியத்தில் இடம்பெற்றுள்ள மகளிர் தங்களுடைய ஆடைகளை தாங்கள் வெளுத்ததாக எக்குறிப்பிலும் கூறப்படவில்லை. ஆகையால், துணிகளை வெளுப்பதற்கென்று மகளிர் இருந்துள்ளனர் என்பதை இப்பாடல்வழி அறியமுடிகின்றது.

**“பசைவிரல் புலைந்தி நெடிது பிசைத்துட்டிய பந்துகில்.”**[30]

என்ற பாடல் ஆடைவெளுத்த மகளிர் பற்றி விளக்குவதாக அமைகின்றது.

**மருத்துவ மகளிர்**

காப்பிய காலப் பெண்கள் ஆடல், பாடல், ஒப்பனை கலைகளை அழகியல் சார்ந்த அறிவுடன் நுட்பம் நிறைந்த கலைகளோடு மட்டும் கற்றுவிட்டுச் செல்லாமல் புனிதத் தன்மை மிக்க மருத்துவப் பணியினையும் சிறப்பாகச் செய்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

சீவகனோடு போருக்குச் சென்று போரில் ஏற்பட்ட விழுப்புண் காயங்களை அறுவை சிகிச்சை செய்து குணப்படுத்தும் மருத்துவர்களாகவும், ஆறாப்புண் பட்டு இருக்கும் வீரர்களுக்கு அவர்களின் உடல்நலனைப் பாதுகாத்து, முறையான மருத்துவம் செய்வதில் செவிலியர்களாகவும் இருந்துள்ளனர். புண்களை அனுதினமும் சுத்தம் செய்து மருந்து நெய் தோய்த்தும் எலிமயிரால் ஆன துணியினைக் கொண்டு கட்டுகள் கட்டியும் அனுதினமும் முறையாகப் பராமரித்து விழுப்புண் பட்ட வீரர்களுக்கு மருத்துவப் பணியினைத் திறம்படச் செய்துள்ளதை,

**“முதுமரப் பொந்து போல முழமெயும் புண்க ளுற்றார்க்**
**கிதுமருந் தென்ன நல்லா ரிழதுசேர் கவளம் வைத்துப்**

**பதுமுகன் பரவை மார்பி னெய்க்கிழி பயிலச் சேர்த்தி”**[31]

என்ற பாடல் வரிகள் உணர்த்தி நிற்கின்றது. மருத்துவ மகளிர் செய்யும் சேவையினையும் அதனுடன் மருந்துகளை அளித்து திறம்படச் செய்யும் முறைகளையும் விவரித்துக் கூறுகின்ற தன்மையினை அறியமுடிகிறது.

**தூதுக்கலையில் மகளிர்**

காப்பியத்தில் இடம்பெற்றுள்ள மகளிருள், தூதுக்கலைக்கு உதாரணமாக அணங்கமாலை, நாகமாலை, தேசிகப்பாவை ஆகியோரைக் குறிப்பிடலாம். இத்தூதுப் பெண்டிர்கள் அரசியல் நிமித்தமும், காதல் நிமித்தமும் புலப்படத் தூது சென்றுள்ளனர் என்பதைத் தொல்காப்பியம்,

**“ஓதமும் தூதும் உயர்ந்தோர் மேன”**[32]

என்று குறிப்பிட்டுள்ளது. இவற்றுள், தூது செல்வோர்கள் உயர் வகுப்பினைச் சேர்ந்தவர்கள் என்ற குறிப்பு இடம்பெற்றுள்ளது. ஆனால், பாலினப் பாகுபாடு குறிப்பிடப்படவில்லை. அதாவது, உயர் வகுப்பினருள் ஆண்களோ பெண்களோ தூது செல்லமுடியும் என்பதாக உணரமுடிகிறது. அவ்வவகையில், சீவகசிந்தாமணி காப்பியத்தில் இடம்பெற்றுள்ள தூது குறித்தான பதிவுகளை இப்பகுதியில் காணமுடிகின்றன.

**அரசியல் தூது**

நாகமாலை என்ற பெண் தூது செல்கின்றாள். அவள் தூதாக வருகின்ற பொழுது, தூதாக ஓலையைக் கொண்டு வருகின்றாள். இதனை,

**“மறைவல்லாற் குரைக்கும் போழ்திற் கோயிலு ணின்று மாலைப்**
**பிறைவெல்லு நுதலினா ளோர் பெண்கொடி வந்து கூந்தல**
**உறைசெல நீக்கிப் பைந்தா ளொண்மணிக் குவளை நீட்ட**
**நறை வெல்லு நாக மாலை நோக்கொடு பூக்கொண் டானே.”**[33]

என்ற பாடலில், கட்டியங்காரனின் அரண்மனையில் இருந்து நாகமாலை என்பவள் குவளை மலரில் எழுதிய மடலை அணங்காலை என்னும் பெண்ணிடம் கொடுத்தனுப்ப அம்மடலைக் கந்துக்கடன் வாங்கிப் படிக்கிறான். கட்டியங்காரன் சீவகன் மீது சினம்கொண்டு அவனை அழிக்க முற்பட்டுள்ளான் என்னும் செய்திகளை அம்மடல் எடுத்தியம்புகின்றது. இதனால் சீவகன் யாழிசைப் போட்டிக்குப் பாதுகாப்பாக செல்லுவதற்கு இத்தூது உதவுகின்றது. இவ்வாறு காப்பியத் தலைவனைக் காப்பாற்றக் கூடிய புத்திக்கூர்மை கொண்டவர்களாகப் பெண்கள் இருந்த நிலையினைச் சிந்தாமணிக் காப்பியம் சுட்டிக்காட்டுகிறது. பெண்ணின் நுண்மான் அறிவை வெளிப்படுத்த இவ்அரசியல் தூது நிகழ்ச்சியினை ஆசிரியர் கையாண்டுள்ளார். அத்துடன் தூது சென்ற பெண்ணிற்கு பரிசுப்பொருள் கொடுக்கப்பட்டுள்ளதையும் இப்பாடல்வழி அறியமுடிகின்றது.

### காதல் தூது

காதலுக்குப் பெண் தூதாக இருந்ததை கனகமாலையார் இலம்பகத்தில் காணும்படியாகக் கருத்து பதிவு இடம்பெற்றுள்ளது. கனகமாலையின் பணிப்பெண் தூதாக இருந்து செயல்பட்டதைப் பின்வரும் பாடல்,

**“நெடிய வாட்கண்கள் வாயாவிமைப் பெனுஞ் சொல்லின் மற்றெங்**
**கொடியிற் கொத்த விவை யென்றா ணம்பியுங் கொள்க வென்றான்**
**வடுவும் வேலு மலருங் கயலும் வனப்பழித்த கண்**
**அடியஞ் சிலம்பினாட்குயத்திறைஞ்சிக் காட்ட வவள் கொண்டாள்.”**[34]

உணர்த்தி நிற்கின்றது. சீவகன் மீது காதல் கொண்டுள்ள கனகமாலை, மகிழ்ச்சி அடையும் விதமாக சீவகன் கொடுத்த மாலையைக் கனகமாலைக்குப் பொருந்தும் என்று கூறி அதைப்பெற்றுக் கனகமாலையிடம் கொடுத்து அவள் மகிழ்ச்சி அடையச் செய்கிறாள். இவ்வகையில், அக்காலத்தில் மகளிர் காதல் தூதில் ஈடுபட்டு அதனை மகிழ்வுடன் தோழியர்கள் ஏற்றுக்கொண்டுள்ளனர் என்பதைக் காணமுடிகின்றது.

**ஒப்பனை மகளிர்**

அன்று முதல் இன்றுவரை ஒப்பனைக்கு என்று தனிமகளிர் அமர்த்துவது வழக்கமாகவே இருந்துள்ளது. காப்பியக் காலத்தில் பெண்களின் மகிழ்ச்சி நிறைந்த செயல்பாடுகளில் ஒப்பனையும் ஒன்றாக இருப்பதை நாம் காப்பியத்தின் வழியாக அறியமுடிகிறது. காந்தருவத்தைக்கும் இலக்கணைக்கும் ஒப்பனைக்கலையில் சிறந்த மகளிர் ஒப்பனை செய்துள்ளதை அறியமுடிகிறது. அக்காலத்தியச் சமூகத்தில் பெண்கள் அனைவரும் ஒப்பனை இன்றி இருந்ததாகக் குறிப்பிடப்படவில்லை. ஆனால் ஒப்பனைக்கு என்று மகளிர் இருந்த கருத்தினைக் காப்பியத்தின் வழியாக அறியமுடிகிறது. ஒப்பனைக் கலையில் சிறந்திருந்த மகளிரின் செயல்பாடுகளைப் பின்வரும் பாடல் வரிகள் மூலம் அறியலாம். சான்றாக,

**“கருங்கய லல்ல கண்ணே யெனக்கரி போக்கி னாரே.”**[35]

என்றும்,

**“பொருந்துபொற் றூண்க ணான்கின்பொலிந்துநூற் புலவர் செந்த**
**வருந்தியும் புகழ்த லாகா மரகத மணிசெய் கூடத்**
**திருந்திளை யார்கள் கோல மிந்திர னிருமித் தாற்போற்**
**றிருந்தச்செய் ததற்ப ணங்கை திருவிற்கோர் திலக மொத்தாள்.”**[36]

என்ற பாடல் வரிகளும், கண்ணுக்கு மை எழுதி, மரகத மணியால் செய்த ஒப்பனைக் கூடத்தில், ஒப்பனை செய்வதில் சிறந்த மகளிர் ஒப்பனையை அழகுறச் செய்தனர் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது. இலக்கணையின் திருமணத்தின் போது, அலங்கார மாலை, விலாசி ஆகிய இருவரும் சேர்ந்து ஒப்பனை செய்துள்ளனர் என்ற செய்தியை அறியமுடிகிறது. அத்தகைய ஒப்பனையில், கூந்தலை வகுத்தும் தொகுத்தும் விரித்தும் தன் கையினால் அழகாக வாரி, கஸ்தூரி கலவை, அகில் புகை கமழும் படியாக புகைஊட்டி ஒப்பனை நூலில்

கூறிய படி, அழகிய எருதின் திமில் போல முகத்துக்கு ஏற்பக் கூந்தலை ஒப்பனை செய்ததைக் குறித்து,

**“மைந்நூற் றனைய மாவீ ழோதி வகுத்துந் தொகுத்தும் விரித்தும்**
**கைந்நூற் றிறத்திற் கலப்ப வாரிக் கமழு நானக் கலவை**
**ஐந்நூற்றி றிறத்தின் னகலின் னாவியளைந்து கமழ வூட்டி**
**எந்நூற்றிறமும் முணர்வா ளெழிலேற் றிமிலின் னேற்ப முடித்தாள்.”**[37]

என்ற பாடல் வழியாக அறியமுடிகிறது. இக்காலக்கட்டத்திலும் இளம்பெண்களிடம் எருதின் திமில்போல முகத்துக்கு ஏற்ப வகுத்துத் தொகுத்து வாரி கட்டுதல் பழக்கமாக உள்ளது. சிந்தாமணிக்காலத்திலே இவ்வகையான சிகை அலங்காரம் செய்யப்பட்டுள்ளதை மேற்குறித்த பாடல் வழியாக அறியமுடிகின்றது.

## தொகுப்புரை

இனக்குழு வாழ்வில் காட்டுமிராண்டிகளாக வாழ்ந்த மனித இனம், நாகரிக வாழ்க்கையில் கலைத்திறன்களைக் கைக்கொண்டு வாழ்ந்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது. கலை சமூகம் மற்றும் தனிமனித வெளிப்பாடாக, கலை, அதன் தன்மைக்கு ஏற்ப இரண்டு வகையாகப் பாகுபடுத்தப்பட்டுள்ளது. அவை நுண்கலை மற்றும் தொழிற்கலை என இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

காப்பிய காலத்தியச் சமூகத்தில் மகளிர் ஆண்களுக்கு இணையாக நுண்கலைகளையும், தொழிற்கலைகளையும் கற்றுத் துறைபோகியவர்களாக விளங்கியுள்ளனர் என்பதை மேற்கண்ட பாடல்வரிகள் உணர்த்தி நிற்கின்றன.

நுண்கலைகளான சுண்ணப்பொடி இடித்தலில் சுரமஞ்சரி தேர்ந்தவளாக அறியப்படுகின்றாள். வாழை இலையின் குருத்துக்களில் பல்வேறு வடிவங்களில் கலைப்படுத்தியுள்ளதை அறியமுடிகிறது.

கோலமிடுதல் கலைகளில் சிறப்புப் பெற்றவர்களாக மகளிர் திகழ்ந்துள்ளனர். சமூகத்தில் மகளிர்களுக்கு என ஒப்பனை செய்வதற்கு மகளிர்களே இருந்துள்ளனர்.

காந்தருவதத்தைக்கும் இலக்கணைக்கும் ஒப்பனை செய்ததற்கானக் குறிப்புகளைக் காணமுடிகின்றன.

பூக்களைக் கொண்டு மாலை தொடுக்கும் நுண்ணிய கலைகளை மகளிர் கைக்கொண்டிருந்திருக்கின்றனர். மந்திரக் கலையில் தேர்ச்சி பெற்றவளாகவும், தனது கணவன் சீவகன் இருக்கின்ற இடத்தைத் தன் மந்திர அறிவினால், வெளிக்கொணர்பவளாகவும், காந்தருவதத்தைக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளாள் என்பதைப் பார்க்க முடிகின்றது.

விசயை வானூர்தியை இயக்குகின்ற அறிவினைப் பெற்றவளாக இருந்துள்ளதை, இன்றைய காலத்தில் விமானம் ஓட்டுகின்ற பெண்களுக்கு இணையானவளாக விசயை காட்சிப்படுத்தப்பட்டிருப்பதைக் காணமுடிகின்றது.

விமலை பந்தாடல் என்னும் பொழுதுபோக்குக் கலையில் சிறந்தவளாக விளங்கியுள்ளதைக் காணமுடிகிறது. பாடல், ஆடல், இசை போன்ற நுண்கலைகளிலும் மகளிர் தேர்ச்சி பெற்றவர்களாக விளங்கியுள்ளனர்.

சுரமஞ்சரி, இலக்கணையர் இலம்பகத்தில் இசை குறித்தான குறிப்புகள் பல இடம்பெற்றுள்ளன. தொழிற்சார்ந்த கலைகளான அரசியல் கலை, தூதுக்கலை, மருத்துவக் கலை, ஆடைகளைத் தூய்மைப்படுத்துதல், எருது ஓட்டுதல், காவல் காத்தல் போன்ற பல்வேறு கலைப்பணிகளை மகளிர் மேற்கொண்டிருந்தனர் என்ற குறிப்பினை இவ்வியல் விளக்கி நிற்கின்றது.

# சான்றெண் விளக்கம்

1. துளசி. இராமசாமி, தமிழ் பண்பாட்டு மரபுக்கலைகள், ப.90
2. மேலது, ப.78
3. மேலது, ப.93
4. சீவகசிந்தாமணி, பா.1470
5. மேலது, 876
6. மேலது, 2716
7. மேலது, 2409
8. மேலது, 1466
9. மேலது, 1709
10. மேலது, 238
11. மேலது, 239
12. மேலது, 1954
13. மேலது, 1470
14. மேலது, 292
15. மேலது, 676
16. மேலது, 1254
17. சு.கண்ணகி, காலந்தோறும் தமிழ்க்காப்பியங்கள், ப.21
18. எழிலவன், தமிழகத்தின் மரபுக்கலைகள், ப.177
19. திருத்தக்கதேவர், சீவகசிந்தாமணி, பா.663
20. மேலது, 664
21. மேலது, 2691
22. மேலது, 723

23. மேலது, 1984

24. மேலது, 729

25. மேலது, 1922

26. மேலது, 634

27. மேலது, 2351

28. மேலது, 2055

29. மேலது, 2054

30. மேலது, 2055

31. மேலது, 2054

32. தொல். பொருள். நூ.28

33. சீவகசிந்தாமணி, பா.819

34. மேலது, 977

35. மேலது, 626

36. மேலது, 624

37. மேலது, 2437

# துணைநூற்பட்டியல்

## முதன்மைச் சான்றாதாரம்

1. சாமிநாதையர்.உ.வே., (உ.ஆ), - **சீவகசிந்தாமணி,**
ஸ்ரீதியாகராச விலாச வெளியீடு,
சென்னை.
எட்டாம் பதிப்பு, 1969.

## துணைமைச் சான்றாதாரங்கள்

1. அடைக்கலசாமி, எம். ஆர்., - **இலக்கியவரலாறு,**
பால்நிலா பதிப்பகம்,
சென்னை.
ஐந்தாம் பதிப்பு, 1963.

2. அறவாணன், க.ப., - **சமணம் வளர்த்த தமிழ் இலக்கணம்**
சமணாலயம்,
புதுச்சேரி.
முதற்பதிப்பு, செப், 1974.

3. அனந்தராமையர், இ.வை.,(ப.ஆ.), - **கலித்தொகை,**
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

4. ஆதிநாதனார், சிவ.,(மொ.ஆ.), - **ஜைன தத்துவம்,**
முதலூர்,
வந்தவாசி.

**5.** இராகவையங்கார், (உ.ஆ.), - **குறுந்தொகை,**
அண்ணாமலை பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர்,
முதற்பதிப்பு, 1993.

**6.** இராமகிருஷ்ணன், ஆ., - **தமிழக வரலாறும் தமிழர் பண்பாடு,**
சர்வோதயா இலக்கியப் பண்ணை,
மதுரை,
மறுபதிப்பு, 2012.

**7.** இளம்பூரணர், (உ.ஆ.), - **தொல்காப்பியம்,**
கழக வெளியீடு,
மறுபதிப்பு, 1967.

**8.** இளவழகனார்,(உ.ஆ.), - **ஏலாதி,**
கழக வெளியீடு,
முதற்பதிப்பு, 1970.

**9.** எழிலவன், - **தமிழகத்தின் மரபுக்கலைகள்,**
சென்னை கைரோ பிரிண்ட்,
சென்னை, 16.

**10.** ஔவை துரைசாமிப் பிள்ளை, சு., - **யசோதர காவியம்,**
கழக வெளியீடு,
மறுபதிப்பு, 1963.
1963.

**11.** கலியாணசுந்தரனார், திரு.வி., - **திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள்,**
சாது அச்சுக் கூடம்,
சென்னை
முதற்பதிப்பு, 1944.

**12.** கிருஷ்ணமூர்த்தி, ச., - **நடுகற்கள்,**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம்.
முதல் பதிப்பு, 2004.

**13.** கண்ணகி. சு., - **காலந்தோறும் தமிழ்க்காப்பியங்கள்,**
தமிழய்யா வெளியீட்டகம்,
திருவையாறு.
முதல்பதிப்பு, 2012.

**14.** கோவிந்தராச முதலியார், க. ர., - **நம்பியகப்பொருள்**
கழக வெளியீடு,
மறுபதிப்பு, 1963.

**15.** சக்ரவர்த்தி, யு.இ., (ப.ஆ.), - **நீலகேசி,**
கழக வெளியீடு,
மறுபதிப்பு, 1936.

**16.** சந்தானம், ஏ.இ., (உ.ஆ.), - **நாககுமார காவியம்,**
நந்தனார் பதிப்பகம்,
சிதம்பரம்.

**17.** சரோஜினி, - **கற்பு அன்று முதல் இன்று வரை,**
அரசி பதிப்பகம்,
திண்டுக்கல்.
முதற்பதிப்பு, 1995.

**18.** சரளா இராசகோபாலன், - **சமயம் வளர்த்த மகளிர்,**
ஒளிப் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு, 2000.

**19.** சாந்தலிங்கம், சொ., - **மதுரையில் சமணம்,**
கருத்துப் பட்டறை,
மதுரை.
முதற்பதிப்பு, 2014.

**20.** சாமி. சிதம்பரனார், - **பதினெண் கீழ்க்கணக்கும் தமிழர் வாழ்வும்,**
அறிவுப் பதிப்பகம்,
சென்னை.
இரண்டாம் பதிப்பு, 2007.

**21.** ……, - **பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும்,**
இலக்கிய நிலையம்,
சென்னை.
இரண்டாம் பதிப்பு, 1964.

**22.** சாமிநாதையர், உ.வே., (உ.ஆ.), - **புறநானூறு,**
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.
நிழற்படப் பதிப்பு, 1985.

**23.** சிம்மசந்திர ஜைன் சாஸ்திரி,யு.(ப.ஆ.)- **சமணர் வழிபாட்டு முறை (பாகம்-1),**
சம்யக்ஞான பிரச்சார சங்கம்,
சென்னை.
முதற்பதிப்பு, 2014.

**24.** சிம்மசந்திரஜைன் சாஸ்திரி, (மொ.ஆ.),- **இரத்தின கரண்டக சிராவகாசாரம்,**
சம்யக்ஞான பிரச்சார சங்கம்,
சென்னை.
முதற்பதிப்பு, 2018.

**25.** ……….., - **பரம திகம்பர ஜைன முனிவர்,**
ஸ்ரீ சம்யக்ஞான திகம்பர
விராக் வித்யாபீடம்,
செஞ்சி,
முதற்பதிப்பு, 2007.

**26.** சிவகுமார், இரா., - **உதயணகுமார் காவியம் உணர்த்தும் வாழ்வியல் நெறிகள்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
முதற்பதிப்பு, 2012.

**27.** சீனி வேங்கடசாமி, மயிலை., - **சமணமும் தமிழும்,**
கழக வெளியீடு,
சென்னை.
மூன்றாம் பதிப்பு, 2000.

**28.** சீனிச்சாமி, து., - **தமிழில் காப்பியக் கொள்கை,**
முதற்பகுதி,
தமிப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு, 1985.

**29.** …………., - **தமிழில் காப்பியக் கொள்கை,**
இரண்டாம் பகுதி,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு, 1994.

**30.** சீனிவாசன், ச., - **தமிழ் நீதிச் செல்வம்,**
சாந்தா பப்ளிஷர்ஸ்,
சென்னை.
முதற்பதிப்பு, 1995.

**31.** சுப்பிரமணியன், ச.வே.,(உ.ஆ.), - **பதினெண் கீழ்க்கணக்கு,**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
இரண்டாம் பதிப்பு, 2012.

**32.** செண்பகம், மா., - **தமிழ்க் காப்பியங்கள்,**
சரபோஜி வெளியீடு,
மதுரை.
முதற்பதிப்பு, 1977.

**33.** சோமசுந்தரனார், பொ.வே.,(உ.ஆ.), - **பரிபாடல்,**
கழக வெளியீடு,
மறுபதிப்பு, 1964.

**34.** சோமசுந்தரனார், பொ.வே.,(உ.ஆ.), - **சூளாமணி (முதற்பாகம்),**
இராமசாமிப் புலவர், சு. அ.,
கழக வெளியீடு,
முதற்பதிப்பு, 1962.

**35.** ………., - **சூளாமணி (இரண்டாம் பாகம்),**
கழக வெளியீடு,
முதற்பதிப்பு, 1962.

**36.** சோமசுந்தரனார், பொ.வே.,(உ.ஆ.), - **உதயணகுமார காவியம்,**
கழக வெளியீடு,
முதற்பதிப்பு, 1964.

**37.** …………, - **வளையாபதி,**
கழக வெளியீடு,
முதற்பதிப்பு, 1964.

**38.** ………., - **குண்டலகேசி,**
கழக வெளியீடு,
முதற்பதிப்பு, 1964.

39. சோமசுந்தரனார், பொ.வே.,(உ.ஆ.), - **ஐங்குறுநூறு,**
கழக வெளியீடு,
மறுபதிப்பு, 1964.

40. சௌந்தரபாண்டியன், எஸ்., - **தமிழில் காப்பியங்கள்,**
ஸ்டார் பிரசுரம்,
சென்னை.
முதற்பதிப்பு, 1988.

41. தட்சிணாமூர்த்தி, அ., - **சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்,**
மங்கையர்க்கரசி பதிப்பகம்,
தஞ்சாவூர்.
முதற்பதிப்பு, 2001.

42. தமிழண்ணல், - **புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு,**
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை.
ஏழாம் பதிப்பு, 1987.

43. தன்யகுமார், சிரே., (ப.ஆ.), - **மேருமந்தர புராணம்,**
ஜைன இளைஞர் மன்றம்,
சென்னை.
முதற்பதிப்பு, 2014.

**44.** துளசி. இராமசாமி, - **தமிழ் பண்பாட்டு மரபுக்கலைகள்,**
கலை பண்பாட்டியல் துறை,
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்.
சென்னை.
முதல் பதிப்பு, 1997.

**45.** துரைசாமி, மு., - **இரட்டைக் காப்பியத்தில் சமணம்,**
நாம் தமிழர் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு, 2016.

**46.** தேவநேயன், ஞா., - **பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும்,**
நேசமணி பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு, 1966.

**47.** …………., - **தமிழர் திருமணம்,**
திருவள்ளுவர் தவச்சாலை,
திருச்சிராப்பள்ளி.
முதற்பதிப்பு, 1997.

**48.** நச்சினார்க்கினியர், (உ.ஆ.), - **தொல்காப்பியம்,**
கழக வெளியீடு,
மறுபதிப்பு, 1969.

**49.** நாராயணசாமி ஐயர், அ., (உ.ஆ.),- **நற்றிணை நானூறு,**
கழக வெளியீடு,
மறுபதிப்பு, 1962.

**50.** பரிமேலழகர், (உ.ஆ.), - **திருக்குறள்,**
கழக வெளியீடு,
ஒன்பதாம் பதிப்பு, 1953.

**51.** பாலசுந்தரம் பிள்ளை, தி.சு., (உ.ஆ.),- **நாலடியார்,**
கழக வெளியீடு,
மறுபதிப்பு, 1964.

**52.** பாலசுப்பிரமணியன், சி., - **தமிழ் இலக்கிய வரலாறு,**
நறுமலர் பதிப்பகம்,
சென்னை.
பதினெட்டாம் பதிப்பு, 1983.

**53.** பாலுசாமி, நா., (ப.ஆ.), - **வாழ்வியற் களஞ்சியம்,(தொகுதி-10)**
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

**54.** பிள்ளை, கே. கே., - **தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும்,**
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
மறுபதிப்பு, 2008.

**55.** புன்னைவனநாத முதலியார், பு.சி.,(உ.ஆ.)-**சிறுபஞ்சமூலம்,**
கழக வெளியீடு,
மறுபதிப்பு, 1960.

**56.** பூர்ணசந்திரன் வீடுர்., (உ.ஆ.), - **யசோதரகாவியம்,**
சாது அச்சுக்கூடம்,
சென்னை.
முதற்பதிப்பு, 1951.

**57.** மகாதேவ முதலியார், வா., - **இனியவை நாற்பது,**
கழக வெளியீடு,
மறுபதிப்பு, 1965.

**58.** மாணிக்கம், வ. சுப., - **தமிழ்க்காதல்**
மெய்யப்பன் தமிழாய்வகம்,
சிதம்பரம்.
முதற்பதிப்பு, 2002.

**59.** ………..., - **சங்க நெறி,**
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம்.
முதற்பதிப்பு, 1987.

**60.** மீனாட்சி சுந்தரனார். தெ. பொ., - **சம்பந்தரும் சமணரும்,**
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம்.
முதற்பதிப்பு, 2009.

**61.** வசந்தமாலை, இரா., - **தமிழரின் இசைநுகர் பழக்கம்,**
வ.உ.சி. நூலகம்,
சென்னை.
முதற்பதிப்பு, 1997.

**62.** வேங்கடசாமி நாட்டார், ந. மு., - **அகநானூறு,**
கழக வெளியீடு,
மறுபதிப்பு, 1961.

**63.** ……….., - **சிலப்பதிகாரம்,**
கழக வெளியீடு,
இரண்டாம் பதிப்பு, 1999.

**64.** வேங்கடசாமி நாட்டார், ந.மு.,(உ.ஆ.),- **நானாற்பது,**
கழக வெளியீடு,
மறுபதிப்பு, 1967.

**65.** …………., - **மணிமேகலை,**
கழக வெளியீடு,
நான்காம் பதிப்பு, 1960.

**66.** ஸ்ரீபால், டி. எஸ்., - **தமிழகத்தில் ஜைனம்,**
ஸ்வஸதிஸ்ரீ லஷ்மி சேன பட்டாரக
பட்டாசார்ய வர்ய மகாசுவாமிகள்
ஜைன மடம்,
கோலாப்பூர்,
முதற்பதிப்பு, 1975.

**67.** ஸ்ரீ1008 விஷ்வேஷ் சாகர் முனிமுகராஜ்,- **குழந்தை ஞானம்,**
ஸ்ரீ1008 மகாவீர் ஜினாலயம்,
வந்தவாசி,
முதற்பதிப்பு, 2010.

**68.** ஜைன் சாஸ்திரி, எ.எஸ்.,(ப.ஆ.) - **பகவான் மஹாவீரரும் தீபாவளித் திருநாளும்,**
தீபாவளி மலர்,
மகாவீரர் பரிநிர்வாண ஆண்டு 2545,
சென்னை.

**அகராதி**

**1.** கதிரைவேற்பிள்ளை, நா., - **தமிழ்மொழியகராதி,**
ஏசியன் எடுகேஷனல் சர்வீஸஸ்,
புதுதில்லி.
மூன்றாம் பதிப்பு, 1987.

**2.** கந்தையா, ந. சி., - **செந்தமிழ் அகராதி,**
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை.
மறுபதிப்பு, 1999.

# இயல் -6

# மகளிரும் சமயவாழ்வும்

சீவக சிந்தாமணி ஒரு சமணக் காப்பியம். சமணசமயக் கொள்கை, கோட்பாடுகள் பல இந்நூலில் பொதிந்து கிடக்கின்றன. திருத்தக்க தேவர், சமணசமயக் கொள்கைகளைக் காப்பியத்தில் இடம்பெற்றுள்ள காப்பிய மாந்தர்கள் வாயிலாக ஏற்ற இடங்களில் எடுத்துரைத்துள்ளார். மனித வாழ்வியலுக்குத் தேவையான பல்வேறு நல்லொழுக்கங்கள் பற்றி காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன. சமண சமய நீதிநூல்களில் இடம்பெற்றுள்ள கருத்துக்கள் பல காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன. ஆடவர், மகளிர் ஆகிய இருதிறத்தாருக்கும் உரிய சமயக் கோட்பாடுகள் பலவற்றைத் திருத்தக்க தேவர் சீவகசிந்தாமணியின் வாயிலாக எடுத்துரைத்துள்ளார். வைதீக சமயம் சார்ந்த கடவுளர்கள் பற்றிய குறிப்புகள், புராணக் கதைகள், இதிகாசச் செய்திகள் முதலியன நூலின் ஏற்ற இடங்களில எடுத்தாளப்பட்டுள்ளன. சமண சமய வழிபாட்டு முறைகள், நோன்புகள் ஆகியனவற்றை எடுத்துரைக்கும் வகையில் இவ்வியல் அமைகின்றது.

தமிழ்க்காப்பிய வரலாற்றில் சமணர்களுடைய பங்களிப்பு சொல்லுவதற்கு இயலா சிறப்பு பெற்றது. தமிழில் உள்ள காப்பியங்களில் பெரும்பான்மையான காப்பியங்கள் சமணம் சார்ந்த காப்பிய நூலாக இருக்கின்றன. சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி, வளையாபதி ஆகிய மூன்று பெருங்காப்பியங்களும் சமணர்கள் நமக்கு அளித்த கொடையாக உள்ளது. இதில் சீவகசிந்தாமணியில் மகளிர் எவ்வாறு சமண சமயக் கருத்துக்களைப் பின்பற்றி வந்துள்ளனர் என்பதையும் பெண்களுக்குச் சமமான உரிமை அளிக்கப்பட்டு இருத்தலையும் இவ்வியலில் விரிவாகக் காணலாம்.

சீவகசிந்தாமணியில் சமணசமயம் எவ்வாறு இருந்துள்ளது என்பதையும் அதில் மகளிரின் பங்களிப்பு பற்றியும் அவா்களின் சமணத்தொண்டு சமணத்துறவு பற்றிய விதம், மகளிரின் பங்களிப்பு பற்றிய செய்திகளையும் காணலாம். சமண சமயத்தில் மகளிா் ஆற்றிய பங்கு குறிப்பிட்டு கூறக்கூடிய ஒன்றாக உள்ளது. ஐம்பெருங்காப்பியத்தில் சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி, வளையாபதி மூன்றும் சமணக் காப்பியங்களாக உள்ளன. இதில் கூறப்படும் காப்பியப் பெண்களைக் கருவியாகக் கொண்டு சமண சமயக் கொள்கை, கோட்பாடு மற்றும் சிறப்புத் தன்மைகளை இப்பாடல்வழி அறியமுடிகின்றது.

**சீவக சிந்தாமணியில் சமயக் கருத்துகள்**

பண்டைத் தமிழர்களின் கடவுள் கொள்கை வேதகாலக் கடவுளர்களோடு தொடர்புடையதாகவே இருந்துள்ளது. தொல்காப்பியம் முதலே இதற்குச் சான்றுகள் உள்ளன. “வேதகால ஆரியர் இந்திரன், சந்திரன், வருணன், வாயு போன்ற சிறு தெய்வங்களையும் பஞ்ச பூதங்களையும் வணங்கினர். பின்னரே அவர்களிடம் மும்மூர்த்திகளும் முப்பத்து முக்கோடி தேவர்களும் வழிபாடு பெறலாயினர். ஒரு பிரமக் கோட்பாடும் வரலாயிற்று.”[1] எனச் ச. சோமசுந்தர பாரதியார் குறிப்பிடுகிறார். இவர்தம் கூற்றின் அடிப்படையில், சிவன், விஷ்ணு, பிரம்மன் முதலான வேதகாலக் கடவுளர்கள் ஆரியர்களின் வழிபாட்டிற்குரியவர்களாகத் திகழ்ந்தமையை அறியமுடிகிறது. ஆரியர்கள் தமிழகத்திற்கு வருவதற்கு முன்னர் தமிழர்கள் தமக்கென ஒரு கடவுட் கொள்கையைக் கொண்டிருந்தனர் என்பதைக் காணமுடிகின்றது.

**சமண சமயக் கருத்துக்கள்**

சமணா்கள் தங்களுக்கு என்று ஒருசில கொள்கைகள் வகுத்து வந்துள்ளனா். கொள்கைகளை அனுசரித்து பின்பற்றி வந்துள்ளனா். சுமண சமயத்தின்

தலையாயக் கொள்கை ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும் என்பதாகும். ஆன்மாவின் இன்ப துன்பங்களுக்கு வினைகள் உரியதாகும் என்பது அடிப்படைக் கொள்கையாகும். வினைக் கோட்பாட்டை வாய்ப்புக்கிடைக்கும் இடங்கள் தோறும் திருத்தக்க தேவர் வலியுறுத்திச் செல்கின்றார். சீவக சிந்தாமணியின் தொடக்கத்தில் இடம்பெற்றுள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்கள் சித்தசரணம், அருகசரணம், சாது சரணம் என்னும் முறையில் அமைந்துள்ளன என்பதை,

**“ஓவாது நின்ற குணத்தொண்ணிதிச் செல்வ னென்ப**
**தேவாதி தேவ னவன் சேவடி சேர்து மன்றே”[2]**

எனும் சித்தசரணப்பாடலில், ‘தன்னை விட்டு நீங்காது நின்ற குணங்களை உடைய ஒண்ணிதிச் செல்வன்’ எனச் சித்தர்களைப் போற்றுகிறார் திருத்தக்க தேவர். சித்தன் என்பதற்கு, “காதி, அகாதியென்னும் இருவகைக் கருமங்களையும் வென்று அக்கினியிந்திரனால் உடம்பைத் துறந்து பரிநிர்வாணம் பெற்று மூவுலகத்து உச்சியிலிருப்பவன்”[3] என விளக்கம் தருகிறார் நச்சினார்க்கினியர்.

அருகக் கடவுளைப் போற்றிப் புகழும் பாடல்கள் காப்பியத்தில் ஆங்காங்கே இடம்பெற்றுள்ளன. முக்குடையின் கீழ் வீற்றிருக்கும் அருகப் பெருமானை மலர்களால் தூவி வழிபடாதார் வீட்டுலகை அடையமாட்டார் என்ற கருத்து,

**“வீங்கோதை வண்ணன் விரைததும்பு பூம்பிண்டித்**
**தேங்கோத முக்குடைக்கீழ் தேவர் பெருமானைத்**
**தேவர் பெருமானைத் தேனார் மலர்சிதறி**
**நாவி னவிற்றாதார் வீட்டுலகை நண்ணாரே”[4]**

என்ற பாடலில் இடம்பெற்றுள்ளது.

**வைதீக சமயக் கருத்துக்கள்**

ஆரியக் கடவுட் கொள்கைக்கு முற்றிலும் மாறான கடவுட் கோட்பாட்டை உடையவர்கள் சமணர்கள். ஆரிய வழிபாட்டு முறைமைகளும், சமண வழிபாட்டு

முறைகளும் வேறு வேறானவை. இருப்பினும் தொல்காப்பியர் காலம் முதலே இத்தகைய வழிபாட்டு முறைகள் தமிழகத்தில் கலந்து விட்டன. இம்முழுமுதற் கடவுளர்களைப் பற்றிய குறிப்புகள் பலவற்றைச் சங்க இலக்கியங்களிலும் காணமுடிகிறது.

**“நனந்தலை யுலகம் வளைஇ நேமியொடு**
**வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை**
**நீர்செல நிமிர்ந்த மாஅல் போல”**[5]

சக்கரத்தையும் வலம்புரிச் சங்கினையும் தன் பெரிய கைகளில் கொண்டு, திருமகளைத் தன் மார்பில் கொண்டுள்ள திருமால் பற்றிய குறிப்பினை முல்லைப்பாட்டின் வாயிலாக அறியமுடிகின்றது.

திருத்தக்க தேவர் காலத்தில் பண்டைத் தமிழகத்தில் வைதீக சமயமும் சிறப்புற்றுத் திகழ்ந்துள்ளது. இக்கடவுளர்கள் பற்றிய செய்திகளும் புராணக் கதைகளும் சீவசிந்தாமணியில் இடம்பெற்றுள்ளன.

சச்சந்தனும் விசயையும் புணர்ச்சி இன்பத்தில் மகிழ்ந்திருந்தமையை சிவபெருமானும் உமையம்மையும் கொண்டிருந்த புணர்ச்சியின்பத்திற்கு நிகராகக் குறிப்பிடுகிறார் திருத்தக்க தேவர், இதனை,

**“இனந்தமக் கெங்கு மில்லா ரியைத்தன ரென்ப முக்கட்**
**சினந்திகழ் விடையி னானுஞ் செல்வியுஞ் சேர்ந்த தொத்தே”**[6]

என்ற பாடற்கருத்தின் வழியாக அறியமுடிகிறது. விசயை, திருமகளுக்கு நிகரான அழகினைக் கொண்டிருந்ததை,

**“அருமணி மரகதத் தங் ணாறிய**
**எரிநிறப் பொன்னித ழேந்து தாமரைத்**
**திருமக ளிவனெனத் திலக வெண்குடைப்**
**பெருமகன் கோயிலுட் பேதை வைகுமே”**[7]

என்ற பாடல், சைவ சமயக் கடவுளான முருகப் பெருமான் குறித்த பல்வேறு செய்திகள் சீவக சிந்தாமணியில் இடம்பெற்றுள்ளன. கிரவுஞ்ச மலையை முருகப் பெருமான் அழித்த வரலாற்றினை,

**“குன்றமார் பரிந்து வெள்வேற் குடுமிமா மஞ்ஞை யூர்ந்து**
**நின்றமால் புருவம் போல நெரிமுரி புருவமாக்கி”**[8]

எனும் பாடலடிகள் வாயிலாகவும், முருகப்பெருமான் வள்ளியை மணம் செய்தமையை,

**“கொழுங்கயற்கண் வள்ளி**
**நலனுகர்ந்தா னன்றே நறுந்தார் முருகன்”**[9]

எனும் பாடலடிகள் வாயிலாகவும் அறியமுடிகிறது.

புராணக் கதைகள் சில காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன. தேவகணிகையான திலோத்தமை காரணமாக பிரம்மதேவன் நான்கு முகங்களைப் பெற்று, விண்ணக வாழ்வை இழந்து, பின்னர் தவத்தால் பாவம் தீர்ந்த புராணக்கதை,

**“பெரும்பெயர்ப் பிரம னென்னும பீடினாற் பெரிய நீரான்**
**அரும்பிய முலையி னாளுக் கணிமுக நான்கு தோன்ற**
**விரும்பியாங் கவளை யெய்தான் விண்ணக மிழந்த தன்றித்**
**திருந்தினாற் கின்று காறுஞ் சிறுசொல்லாய் நின்ற தன்றே”**[10]

என்ற பாடலில் இடம்பெற்றுள்ளது. காமத்தின் இழிநிலையை விளக்கிக் கூறும் இடத்தில் வைதீகக் கடவுளர்களுக்கு நிகழ்ந்தனவற்றை ஏற்றவிடங்களில் திருத்தக்க தேவர் எடுத்தாள்கின்கிறார். அவ்வாறே பாண்டவர்கள், பாஞ்சாலி என்ற ஒரு பெண்ணை மணந்து பழி பெற்ற மகாபாரதக் கதையினை,

**“படுபழி மறைக்க லாமோ பஞ்சவ ரன்று பெற்ற**
**வடுவரை யாவர் பேர்ப்பார் வாய்ப்பறை யறைந்து தூற்றி**
**இடுவதே யன்றிப் பின்னு மிழுக்குடைத் தம்ம காமம்**
**நடுவுநின் றுலகமோம்ப னல்லதோ போலு மென்றான்”**[11]

என்ற பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

சீவகசிந்தாமணியில் இடம்பெற்றுள்ள முதன்மையான மகளிர் பாத்திரங்களைத் திருமகளின் அழகிற்கு ஒப்புமை காட்டும் திருத்தக்க தேவர், சீவகனின் வீரச்செயலை வெளிப்படுத்தும் போது வைதீகக் கடவுளர்களின் செயல்களை ஒப்புமை காட்டியுள்ளார். பல்வேறு கடவுளர் பற்றிய செய்திகளைக் காப்பியத்தில் திருத்தக்கதேவர் குறிப்பிட்டுள்ளமை குறித்து, கா.கோ. வேங்கடராமன், “திருத்தக்கதேவர் உவமை, விளக்கம், உரையாடல் ஆகியவற்றிலேயே இத்தெய்வங்களை அமைத்துக் காட்டுகின்றார். ஏற்கனவே தமிழ்மக்கட்கு அறிமுகமான தெய்வங்களையும் தெய்வக் கதைகளையும் குறிப்பிடின், கதை கேட்போர் விளங்கிக் கொள்ளமுடியும் எனக் கருதியே, இந்து சமயத் தொன்மத் தெய்வங்களை ஆசிரியர் கையாண்டிருத்தல் வேண்டும். வைணவர்கள் சிவனையும், சைவர்கள் திருமாலையும் தத்தம் தெய்ஙவங்களுக்கு அடுத்த தெய்வங்களாகக் கொள்ளுமாறே, சமணர்களும் தத்தம் கடவுளுக்கு அடுத்த நிலையை இந்து சமயக் கடவுளர்க்கு அளித்தனர்”[12] எனக் குறிப்பிடுகிறார்.

**பஞ்ச நமஸ்கார மந்திரம்**

துன்பகாலங்களில் மகளிர் ‘பஞ்ச நமஸ்கார’ மந்திரத்தை ஓதித் தம் துன்பத்தை விலக்கிக் கொள்வர். பஞ்ச நமஸ்கார மந்திரத்தின் விளக்கத்தை நச்சினார்க்கினியர், “ஓம் நமோ அரஹந்தாணம்”[13] எனக் குறிப்பிடுகிறார். இம்மந்திரம் வழித்துணை மந்திரம் எனப்படுகிறது. இம் மந்திரம் பற்றிய செய்தி சிலப்பதிகாரத்தில்,

**“மொழிப்பொருட் டெய்வம் வழித்துணை யாகென”[14]**

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. சிலப்பதிகாரத்தின் உரையாசிரியரான அடியார்க்கு நல்லார், “தெய்வமாவது பஞ்ச மந்திரம்; அ சி ஆ உ சா என்பன கொண்டு, என்பதனைக் கொள்ளவெனத் திருத்தத் துணையாக வென்றதனைக் கோவலன்

கண்ணகி கூற்றாக்கலாம்"[15] எனக் குறிப்பிடுகிறார். கவுந்தியடிகளுடன் மதுரை வந்த கோவலனும் கண்ணகியும் இவ்வழித்துணை மந்திரத்தைத் துணையாகக் கொண்டதை இதன்வழி அறியமுடிகிறது. சீவக சிந்தாமணியில், விசயையை மயிற்பொறியில் ஏற்றி அனுப்பும் போது சச்சந்தன், இப்பஞ்ச நமஸ்கார மந்திரத்தைக் கூறி அனுப்புகிறான். அவளும் அவ்வாறே பஞ்ச நமஸ்கார மந்திரத்தைக் கூறி மயிற்பொறியில் கிளம்பியமையை,

**"அன்புமிக் கவலித் தாற்றா வாருயிர்க் கிழத்தி தன்னை**
**இன்பமிக் குடைய சீர்த்தி யிறைவன தாணை கூறித்**
**துன்பமில் பறவை யூர்தி சேர்த்தனன் துணைவி சேர்ந்தாள்"**[16]

எனும் பாடற் கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

**இல்லற மகளிரும் நோன்புகளும்**

இல்வாழ்க்கை மேற்கொண்டு ஒழுகும் மகளிர்க்குரிய நோன்புகளைச் சமண ஆகமங்கள் விளக்கியுள்ளன. இல்வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள ஆண்களும் பெண்களும் மும்மணியைக் கடைப்பிடிப்பவர்களாக இருக்கவேண்டும். நற்காட்சி, நல்ஞானம், நல்லொழுக்கம் என்பன சமணசமயம் குறிப்பிடும் மும்மணிகளாகும். இவற்றைச் செய்தலையே 'அறம்' எனச் சமணச் சான்றோர் குறிப்பர். "மும்மணியைக் கடைப்பிடிப்பவர் இல்லறத்தார், துறவறத்தார் என இருவகைப்படுவர். கொலை, பொய், களவு, காமம், உடமைப்பற்று ஆகிய ஐந்தும் ஐம்பெரும் பாவங்களாகும். இவைகளை ஓரளவிற்கு விட்டவர் இல்லறத்தார் என்றும், முழுமளவும் விட்டவர் துறவறத்தார் எனவும் கூறப்படுவர்"[17] என இல்லறத்தார், துறவறத்தார்க்குரிய வாழ்வியல் நெறிமுறைகள் குறித்துச் சமண சமயம் குறிப்பிடுகிறது. இல்லற வாழ்க்கையை மேற்கொண்டு வாழ்பவர், ஓரளவிற்கேனும் இவற்றைக் கைக்கொண்டு வாழ்தல் வேண்டும் என்பதை இக்கருத்திலிருந்து அறியமுடிகிறது.

**சமண சமயம்**

சமண சமயம் இல்லற வாழ்க்கை மேற்கொண்டு வாழ்வதை எதிர்க்கவில்லை. இல்லற வாழ்க்கையே துறவு வாழ்க்கைக்கும், முக்தி நிலைக்கும் அடிப்படையாக அமைகிறது என்பதைச் சமண சமயம் ஏற்கிறது. இல்லற வாழ்க்கையை இனிதே வாழ்ந்த பின்னர்த் துறவு வாழ்க்கையை விரும்புதல் வேண்டும் என்பதைச் சமண சமயம் வலியுறுத்துகிறது. “இல்லறமே துறவறத்திற்கும் முக்திக்கும் முதற்காரணமாக அமைகிறது. பகவான் ஆதிநாதர், சாந்திநாதர், பரதச்சக்ரவர்த்தி இராமர் முதலிய மகான்களும் கூட முதலில் இல்லறத்தையே கடைப்பிடித்தவர்கள் ஆவர். ஒவ்வொரு இல்லறத்தாரும் துறவறத்தின்பால் நாட்டங்கொள்ள வேண்டும். துறவிகள்வழி அறமும் தானமும் அறியப்படுகின்றன. துறவிகளின் நிலைக்கும் அறம் மற்றும் தானத்திற்கு அடிப்படைக் காரணமாக இருப்பவர் இல்லறத்தாரே”[18] எனும் கருத்திலிருந்து இல்லற வாழ்க்கை குறித்த சமணத்தார் கொள்கையினை அறிய இயலும். இல்லறத்தார்க்குரிய குணவிரதம் குறித்து அச்சணந்தி அடிகள் சீவகனிடம்,

**“கொழுங்களி யுணர்வினாரைக் குணவதங் கொளுத்த லாமோ”**[19]

என்ற பாடல் வரியின்வழி அறியமுடிகின்றது.

## இல்லறத்தார் வழிபாட்டு முறைகள்

இல்லற வாழ்வு மேற்கொள்பவர்கள் இறையன்புடன் பகவானைத் தொழுதல் வேண்டும் என அறிவுறுத்தப்படுகின்றனர். அவ்வாறு வழிபாடு செய்வோர் உலக மக்களின் போற்றதலுக்கு உரியவராகவும் புனிதத் தன்மை உடையவராகவும் திகழ்வர் என்பதைச் சமணசமயம் எடுத்துரைத்துள்ளது. “ஜினபகவானை வணங்காதவர், பக்தி செலுத்தாதவர், பூஜை செய்யாதவர் வாழ்க்கை வீணே. அத்தகையோரின் வாழ்க்கை இழுக்கையே அவருக்குத் தரும். இல்லறத்தார் அதிகாலை எழுந்து பக்தியுடன் ஜினபகவானைத் தரிசிப்பது, திகம்பர முனிகளை

வணங்குவது, அவர்தம் அறவுரையைக் கேட்பது தினசரி செய்யும் அவசியப் பணியாகக் கொள்ள வேண்டும். அதன் பிறகு தான் மற்ற பணிகளில் ஈடுபாடு கொள்ளவேண்டும்''[20] என இல்லறத்தாரின் இறைவழிபாட்டு முறைகள் குறித்துச் சமணச் சான்றோர் விளக்கியுள்ளனர்.

மகனைப் பெற்ற தாய்மார், கன்னிப் பெண்கள், இல்லற மகளிர் முதலானோர் மேற்கொண்ட நோன்புகள் குறித்த செய்திகள் சீவகசிந்தாமணியில் இடம்பெற்றுள்ளன. இந்நோன்புகளிருக்கும் முறை, நோன்புகள் இருப்பதனால் உண்டாகும் பயன் முதலியன காப்பியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன.

### இல்லற மகளிர்

இல்லற மகளிர், மணம் மிக்க மலர்களாலும், சந்தனத்தாலும் அருகக் கடவுளை வணங்கியமையை,

**''விண்பொழி பூமழை வெல்கதிர் நேமிய**
**வண்புகழ் மாலடி வந்தனை செய்தாள்''**[21]
**''இம்பரி˙லாநறும் பூவொடு சாந்துகொண்**
**டெம்பெரு மானடிக் கெய்துகென் றேத்தி''**[22]

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. கணவனுடன் அருகக் கடவுளின் கோயிலுக்குச் சென்று வழிபாடு செய்த விசயை வாயிலாக இதனை அறியமுடிகிறது.

### அறவோர் வழிபாடு

இல்லற மகளிர் தம் துணைவருடன் அறவோரைப் போற்றி வழிபடுதல் சமணசமயம் சார்ந்த் வாழ்வியல் நெறியாகும். சீவகனின் வளர்புத் தாயான சுநந்தை தன் கணவனுடன் அறவோரைப் போற்றியதை,

**''கறவைகாண் கன்றின் வெ.்.கிக் கண்டடி பணிந்து காமர்**
**நறவயா வுயிர்க்கு மாலை நாற்றிய விடத்து ளேற்றி**

**அறவியாற் காறு மூன்று மமைந்தநா லமிர்த மேந்தப்**

**பறவைதா துண்ண வண்ணம் பட்டினிப் பிரிவு தீர்ந்தான்''**[23]

எனும் பாடல்வழி அறியமுடிகிறது. இப்பாடலில் இடம்பெற்றுள்ள 'ஆறும் மூன்றும் அமைந்த நாலமிர்ந்தம்' எனுந் தொடர்வாயிலாக அறவோரை ஒன்பது வகையினால் வழிபட்டு, உண்பன, திண்பன, உறிஞ்சுவன, பருகுவன எனும் நான்கு வகை உணவுகளை அளித்தல் வேண்டும் என்பதை அறியமுடிகிறது.

**''ஒன்பது வகையினோதிற் றுத்தமர்க் காகு மார்த்த**

**இன்பத மருளி யீத லிடையென மொழிப யார்க்கும்**

**துன்புற விலங்கு கொன்று சொரிந்துசோ றூட்டி னார்க்கும்**

**நன்பொருள் வழங்கி னார்க்கும் பயனமக் கறிய லாகா''**[24]

இவ்வொன்பது வகை குறித்து நச்சினார்க்கினியர், "எதிர்கொள லிடநனி காட்டல், கால்கழீஇ, அதிர்பட வருச்சனை யடியின் வீழ்தரல் மதுரநன் மொழியொடு மனமெய் தூயராய், உதிர்கநம் வினையென வுண்டி யேந்தினர்"[25] எனக் குறிப்பிடுகிறார். நச்சினார்க்கினியர் அளிக்கும் இவ்விளக்கத்திலிருந்து,

1. **எதிர்கொளல்**
2. **இடம் அளித்தல்**
3. **கால் கழுவுதல்**
4. **அடி போற்றுதல்**
5. **அர்ச்சித்தல்**
6. **இனிய மொழி கூறல்**
7. **தூய மனத்தவராதல்**
8. **தூய உடலினராதல்**
9. **வினை விலக வேண்டுதல்**

எனும் அறவோரைப் போற்றும் ஒன்பது முறைமைகளை அறியமுடிகிறது.

**சீவகன் தாய் விசயை**

புதல்வனைப் பெற்ற தாய்மார், தம் புதல்வர்களின் மேன்மைக்காகவும், நலத்திற்காகவும் நோன்புகள் இருந்தமையைச் சீவகனின் தாயான விசயை வாயிலாக அறியமுடிகிறது. சச்சந்தன், கட்டியங்காரனால் கொல்லப்பட்டதற்குப் பின்பு, இடுகாட்டில் குழந்தையைப் பெற்றெடுத்த விசயை, அக்குழந்தையைக் கந்துக்கடன் எடுத்துச் சென்ற பின்னர், கூனியாக வந்த சண்பகமாலை, விசயையை 'தண்டகாரணியம்' என்னும் காட்டிற்கு அழைத்துச் சென்று அங்குத் தவம் புரியத் தூண்டுகிறது. விசயை, காவிக்கல்லால் தோய்ந்த நுண்ணிய நூலால் செய்யப்பட்ட புடவையை உடுத்து, முதலில் மேற்கொண்ட நோன்பு மகனின் உயர்விற்காக என்பதனை,

**"உடுத்தாள் கற்றோய் நுண்கலிங்க முரவோன் சிறுவ னுயர்கெனவே"**[26]

எனும் பாடலடியால் அறியமுடிகிறது. இவ்வாறு நோன்பியற்றியபோது, விசயை தன் உடலில் அணிந்திருந்த பல்வேறு அணிகலன்களைக் களைந்தமையை,

**"அரும்பொன் மாலை யலங்கலோ டாரம் புலம்ப வகற்றினாள்"**[27]

**"அங்கண் முலையி னணிமுத்து மரும்பொற் பூணுமகற்றினாள்"**[28]

**"அஞ்சச் சிவந்த மெல்விரல்சூ ழரும்பொ னாழி யகற்றினாள்"**[29]

என்னும் பாடல் அடிகள் வாயிலாக அறியமுடிகிறது. இவ்வாறு நோன்பிருந்த விசயை, தன் உணவு முறையையும் மாற்றிக் கொள்கிறாள். அரண்மனையில் பொன் கலத்தில் பால்சோற்றை உண்டவள் தவப்பள்ளியில் தூய இலைக்கறி உணவினை உண்டமையை,

**"பாலுடை யமிர்தம் பைம்பொற் கலத்திடைப் பாவை யன்ன**
**நூலடு நுசுப்பி னல்லா ரேந்தவு நேர்ந்து நோக்காச்**
**சேலடி கண்ணி காந்தட் டிருமணித் துடுப்பு முன்கை**
**வாலட கருளிச் செய்ய வனத்துறை தெய்வ மானாள்"**[30]

என்ற பாடற்கருத்து உணர்த்துகிறது.

தவப்பள்ளியில் மகனின் மேன்மைக்காக நெடுநாள் நோன்பு மேற்கொண்ட விசயையின் நிலை,

**“மாசொடுமி டைந்துமணி நூற்றனைய வைம்பால்**
**பூசுதலு மின்றிப்பிணி கொண்டுபுறந் தாழ**
**வாசமலர் மறைந்தவழி வாமனடிக் கேற்றித்**
**தோசமறத் துதிகள் மனத்தோதித் தொழுதிருந்தாள்”**[31]

எனும் பாடல், நீராடாத விசயையின் நிலையை உணர்த்துகிறது. அவளின் மயிர் நீராடுதல் இன்மையால் சடையாகி முதுகில் தொங்கிற்று. யாரும் அறியாத ஒரு மறைவான இடத்திலிருந்து மணம் மிக்க மலர்களால் அருகப்பெருமானைப் போற்றித் துதித்தமையை இதன்வழி அறியமுடிகிறது.

## நட்பினைப் பிரிந்த தீவினைக்காக வழிபாடு

சுண்ணப்பொடி காரணமாகக் குணமாலையும் சுரமஞ்சரியும் தம்முள் வருத்தங்கொண்டு பிரிகின்றனர். எந்தவொரு ஆடவனையும் காணவிரும்பாத சுரமஞ்சரி, கன்னிமாடத்தை அடைகிறாள். இன்பத்திற்குக் காரணமான விளையாட்டு இருவருக்கும் துன்பத்தை ஏற்படுத்துகிறது. சுரமஞ்சரிக்கு ஏற்பட்ட அவலத்திற்காக வருந்திய குணமாலை, தன் நட்புப் பிரிவிற்கு கழுவாய் செய்ய எண்ணி அருகக் கடவுளை வழிபடுகிறாள். ஆயிரம் பொன் தாமரை மலர்களையும், பிற அழகிய மலர்களையும் வைத்து அருகக் கடவுளை வழிபட்டமையை,

**“தண்ணந் தீம்புன லாடிய தண்மலர்**
**வண்ண வார்தளிர்ப் பிண்டியி னாளடிக்**
**கெண்ணி யாயிர மேந்துபொற் றாமரை**
**வண்ண மாமல ரேற்றி வணங்கினாள்”**[32]

எனும் பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது. அருகக் கடவுள் வழிபாட்டின் போது வைத்து வணங்கவேண்டிய பொருள்கள் குறித்து, “மலரோ, பழமோ, ஏலம்,

இலவங்கம் போன்ற பொருட்கள் கிடைத்தால் அவற்றையும் பகவானுடைய படிமைக்கு முன்னர் வைத்து வணங்கலாம். இவ்வாறு வணங்கும் போது பஞ்ச பரமேட்டிகளின் பண்புகளை நினைவில் இருத்த வேண்டும்.''[33]

**காதலனைக் கணவனாகப் பெற தவம்**

குணமாலையைச் சீவகன் கட்டியங்காரனின் பட்டத்து யானையான 'அசனிவேகத்தின்' பிடியிலிருந்து காக்கின்றான். சீவகன் மீது பெருங்காதல் கொண்ட குணமாலை, பிரிவுத்துயரால் மிகவும் வருந்துகிறாள். அவனையே கணவனாக அடைந்திடவேண்டும் என விரும்புகிறாள். அரிய தவத்தைச் செய்தாவது அவனைப் பெறுவேன் எனக் குணமாலை குறிப்பிடுகிறாள்.

**"அந்தோ குணமாலைக் காதகா தென்றுலகம்**
**நொந்தாங் கழமுயன்று நோற்றானு மெய்துவனே"**[34]

என்ற வரிகள் புலப்படுத்தி நிற்கின்றது.

**கணவனின் துன்பம் களைதல்**

கட்டியங்காரனால் சிறைப்படுத்தப்பட்ட சீவகனின் நலன் வேண்டிக் காந்தருவதத்தை வழிபாடு செய்கிறாள்.

**"மணியியல் யவனச் செப்பின் மங்கலத் துகிலை வாங்கிக்**
**கணைபுரை கண்ணி யேற்ப வுடுத்தபின் செம்பொற் செப்பிற்**
**பிணையலு நறிய சேர்த்திப் பெருவிலை யாரந் தாங்கித்**
**துணைவனுக் குற்ற துன்பஞ் சொல்லிய தொடங்கினாள்"**[35]

எனும் பாடல், தூய வெள்ளாடையை அணிந்து, நறுமணம் மிக்க மலர்களையும் முத்து மாலையும் சூடிக் கொண்டு கணவனுக்கு நேர்ந்த துன்பம் நீக்கக் காந்தருவதத்தை வழிபாடு செய்தமையை இப்பாடல் புலப்படுத்துகிறது.

**"வீரனுற் றதுயர் மின்னென நீக்கிய மெல்லவே**
**நேரமன் னும்வரு கென்றுநின் றாணினைத் தாளரோ"**[36]

என்ற பாடல், தன் கணவன் உற்ற துயர் மின்னலைப் போன்று விரைந்து போக வேண்டி, விண்ணுலகத் தெய்வங்களைத் தன்பால் வருமாறு வேண்டுகிறாள். இருப்பினும் சீவகன் காந்தருவதத்தையின் மந்திர வலிமையால் தான், சிறையிலிருந்து விடுபட விரும்பாது, தன் நண்பன் சுதஞ்சணனை நினைத்து அவன் வாயிலாகச் சிறைத் துன்பத்தினின்று நீங்குகிறான். சீவகனைச் சுதஞ்சணன் வானில் கொண்டு செல்வதை அறிந்த காந்தருவதத்தை, அவனுக்கு நலம் உண்டாகட்டும் என விரும்பி, தான் அழைத்த தெய்வங்களை வழிபட்டு மீண்டும் அவ்விண்ணுலகத் தெய்வங்களை வழியனுப்பியதை,

**“சந்தமா லைத்தொகை தாழ்ந்துசாந் தங்கமழ் பூமியுள்**
**வந்தவிண் ணோர்களை வாழ்த்தியேத் திம்மலர் மாலைதூய்**
**எந்தைமார் களெழு கென்னவே கவிடுத் தாள்குரல்**
**சிந்தைசெய் யுஞ்சிற கர்க்கிளி தோற்குமந் தீஞ்சொலாள்”**[37]

என்ற பாடல் விளக்கி நிற்கின்றது.

**சுரமஞ்சரியின் காமதேவன் வழிபாடு**

முதிய அந்தணன் வேடத்தில் மாற்றுருக் கொண்டு வந்த சீவகனின் பாடலைக் கேட்டு மயங்கிய சுரமஞ்சரி, காமதேவன் கோயிலுக்குச் சென்று, காமனை வழிபட்டுச் சீவகனை அடைய விரும்பிய தன் உள்ளக்கிடக்கையை,

**“மாடம்புக் கநங்கற் பேணி வரங்கொவ னாளை யென்றாள்”**[38]

எனும் பாடல்வழி வெளிப்படுத்துகிறாள். காமதேவன் கோயிலுக்குச் சென்ற சுரமஞ்சரி, தனது இடது முழங்காலைக் கீழே ஊன்றி, கழுத்தை வலப்புறம் சாய்த்துத் தலையைத் தாழ்த்தி விழுந்தெழுந்து, பின்னர்த் தன் இரு கைகளாலும் காமனை வழிபட்டமையை,

**“பொன்னிலஞ் சென்னி புல்ல விடமுழந் தாளை யூன்றி**
**மின்னவிர் மாலை மென்பூங் குழல்வலத் தோளின் வீழக்**

**கன்னியங் கமுகின் கண்போற் கலனணி யெருத்தங் கோட்டித்**

**தன்னிரு கையுங் கூப்பித் தையலீ துரைக்கு மன்றே"[39]**

எனும் பாடற்கருத்தின் வழி அறியமுடிகிறது. தான் உள்ளத்தில் கருதிய செயல் நிறைவேறினால் காமனுக்குத் தான் வழங்கும் காணிக்கை குறித்து,

**"தாமரைச் செங்கட் செவ்வாய்த் தமனியக் குழையி னாயோர்**

**காமமிங் குடையேன் காளை சீவக னகலஞ் சேர்த்தின்**

**மாமணி மகர மம்பு வண்சிலைக் கரும்பு மான்றேர்**

**பூமலி மார்ப வீவ லூரொடும் பொலிய வென்றாள்"[40]**

எனக் குறிப்பிடுகிறாள். சீவகனைத் தான் பெற்றால், காமதேவனுக்கு மிகப்பெரிய மீன் கொடியும், அம்பும், கரும்பும், வில்லும், தேரும் தருவதாகச் சுரமஞ்சரி குறிப்பிடுவதைக் காணமுடிகின்றது.

## இல்ல வழிபாடு

கன்னிப்பெண்களின் அருகப்பெருமான் வழிபாடு குறித்து கேமசரி மேற்கொண்ட வழிபாட்டிலிருந்து அறிந்து கொள்ள முடிகிறது. தேன் நிறைந்த மலர்களைத் தூவி, நாவினால் வாழ்த்திப் பாடி வணங்குதல் வேண்டும் என்பதை,

**"வீங்கோத வண்ணனன் விரைததும்பு பூம்பிண்டித்**

**தேங்கோத முக்குடைக்கீழ்த் தேவர் பெருமானைத்**

**தேவர் பெருமானைத் தேனார் மலர்சிதறி**

**நாவி னவிற்றாதார் வீட்டுலக நண்ணாரே"[41]**

என்ற பாடற்கருத்து உணர்த்துகிறது. மூவுலகமும் பக்தியோடு போற்றிப் பாடும் அருகப் பெருமானைக் கேமசரி வாழ்த்திப் பாடுகிறாள்.

**"முத்துமிழு முந்நீர் மணிவண்ணன் மூன்றுலகும்**

**பத்திமையாற் பாடப் படுவான்றாள் பாடக்கேட்**

**டொத்தரம்பை யன்னா ளுவந்திவளொ டொப்பானோர்**

**வித்தகனை யின்னே பெறுக வெனவுரைத்தாள்"[42]**

எனும் பாடலில், ஏற்ற கணவனைப் பெறுதல் வேண்டி இத்தகைய வழிபாட்டினை மகளிர் மேற்கொண்டமையை அறியமுடிகிறது.

இல்லுறைத் தெய்வங்களுக்கு மகளிர் பூப்பலி செய்து வழிபடும் முறைமை குறித்து இலக்கணையாரிலம்பகம் வாயிலாக அறியமுடிகிறது.

**"விண்வி ளக்குவ போல்விரி பூந்துகள்**
**கண்வி ளக்கிக் கலந்தவெண் சாந்தினால்**
**மண்வி ளக்கி மலர்ப்பலி சிந்தினார்**
**பண்வி ளக்கிய பைங்கிளி யின்சொலார்"**[43]

எனும் பாடல், பைங்கிளியைப் போன்று இனிய சொற்களைப் பேசும் மகளிர், மணிகள் முதலியவற்றுடன், பூந்துகளைத் துடைத்து, வெண்சாந்தினால் நிலத்தை மெழுகி இல்லுறைத் தெய்வத்தை வழிபட்டமையைப் புலப்படுத்தி நிற்கின்றது.

அரண்மனையில் வாழும் அரசகுலப் பெண்கள் தெய்வங்களைப் பரவும் போது பலிச்சோறு கொடுத்து வணங்கும் வழிபாட்டு முறையை உடையவராய் இருந்துள்ளனர். அவ்வாறே இல்லுறை மகளிர் தம் மனைத் தூண்களில் உறையும் தெய்வங்களுக்குப் பலிச்சோறு இட்டு வழிபட்டுள்ளனர். இவ்வாறு வழிபடுவோர் வறுமையில் வாடும் வறியோர்க்கு சிறிய அளவேனும் சோற்றினை அளிப்பது சிறந்தது. என்பதனை,

**"நரம்பொலி பரந்த கோயி னன்னுதன் மகளிர் தூவும்**
**பெரும்பலிச் சோற்றி னீதல் பெரிதரி தாகு மேனும்**
**சுரும்பொலி கோதை யார்தம் மனைவயிற் றூண்டொ றூட்டும்**
**அரும்பலி யனைத்து மீயி னது பொருட் குன்று கண்டீர்"**[44]

எனும் பாடல்வழி அறியமுடிகிறது. தெய்வங்களுக்கு அளிக்கும் பலியை விட வறியோர்க்கு ஈதல் சிறந்தது என்ற கருத்தினை,

**"அற்றவர் வருத்த நீக்கி யாருயிர் கொண்டு நிற்கும்**
**துற்றவி ழீதல் செம்பொற் றுறக்கத்திற் கேணியாகும்"**[45]

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

**சண்பகமாலைத் தெய்வத்திற்குக் கோயில்**

சுடுகாட்டில் துன்புற்றுக் கிடந்த விசயை, தனக்குக் கூனி வடிவில் வந்து உதவிய செய்த சண்பகமாலைக்குச் சுடுகாட்டில் கோயில் அமைக்கிறாள். சீவகன் பிறந்த இடத்தையும் அறச்சாலையாக்குகிறாள். இவையாவும் சீவகன் கட்டியங்காரனைக் கொன்று ஆட்சிப் பொறுப்பேற்றவுடன் நிகழ்கின்றன.

**"தனியே துயருழந்து வீழ்ந்த சுடுகாட்டுள்**
**இனியா ளிடர்நீக்கி யேமஞ் சேர்த்தி யுயக்கொண்ட**
**கனியார் மொழியாட்கு மயிற்குங் காமர் பதிநல்கி**
**முனியாது தான்காண மொய்கொண் மாடத் தெழுதுவித்தாள்"**[46]

என இதனைத் திருத்தக்க தேவர் விவரிக்கிறார்.

**கணவனுடன் வழிபாடு**

சோலையில் குரங்கிடமிருந்து இனிய கனியைப் பறித்த ஏவலாளின் செயலைக் கண்ட சீவகன் உலக வாழ்வின் உண்மை நிலையினை உணர்கிறான். காமத்தையும் முதுமையையும் வெறுத்த அவன் உள்ளம் துறவின்பால் செல்கிறது. தன் இல்லறத் தொடர்பைத் துறக்க எண்ணிய சீவகன், மகளிர் அனைவரையும் அருகப் பெருமான் கோயிலுக்கு அழைத்துச் செல்கிறான். சீவகனுடன் சென்ற மனைவியர் எண்மரும் அருகப் பெருமானை வழிபட்டமையை,

**"நற்றவஞ் செய்த வீர ருளவழி நயந்து நாடும்**
**பொற்றதா மரையி னாளிற் பூஞ்சிகை முத்த மின்னக்**
**கொற்றவற் றொழுது சேர்ந்தார் கொம்பனார் வாமன் கோயில்**
**மற்றவன் மகிழ்ந்து புக்கு மணிமுடி துளக்கி னானே"**[47]

என்ற பாடற்கருத்தின் வழி அறியமுடிகிறது.

**விசயையின் துறவு உள்ளம்**

சீவகன் ஆட்சிப்பொறுப்பை ஏற்று, நல்லாட்சி புரிந்து வரும் நிலையில், விசயை, சீவகனை அழைத்து, நடந்த நிகழ்வுகளைத் தொகுத்துரைக்கிறாள். சச்சந்தன் ஆட்சிப் பொறுப்பை மறந்து காமவின்பத்தில் மயங்கிக் கிடந்தமையை எடுத்துரைத்து, சீவகனை நெறிப்படுத்துகிறாள். சீவகன் மனைவியர் எண்மரையும் அழைத்து ஒற்றுமையாக இருக்க வேண்டுகிறாள். பின்னர் தன் துறவு உள்ளத்தைச் சீவகனிடம் எடுத்துரைக்கிறாள். அதனைப் பொறாது வருந்திய சீவகனிடம்,

**"பிறந்துநாம் பெற்ற வாணா ளித்துணை யென்ப தொன்றும்**
**அறிந்தில் வாழ்து மென்னு மவாவினு ளழுந்து கின்றாம்**
**கறந்துகூற் றுண்ணு ஞான்று கண்புதைத் திரங்கி னல்லால்**
**இறந்தநாள் யாவர் மீட்பா ரிற்றெனப் பெயர்க்க லாமோ"**[48]

எனும் பாடல்வழி மனித வாழ்வியலை எடுத்துரைக்கிறாள். மனிதர்கள் தம் தீவினையால் தனித்தனியே பிரிந்து போவதன்றி ஓரிடத்திலேயே நிலைத்து வாழ்வதில்லை எனச் சீவகனிடம் குறிப்பிடுகிறாள். செல்வத்தின் நிலையற்ற தன்மையை,

**"முல்லை முகைசொரிந்தாற் போன்றினிய பாலடிசின் மகளி ரேந்த**
**நல்ல கருனையா னாள்வாயும் பொற்கலத்து நயந்துண் டார்கள்**
**அல்ல லடைய வடகிடுமி னோட்டகத்தென் றயில்வார்க் கண்டுஞ்**
**செல்வ நமரங்கா ணினைய்னமின் செய்தவமே நினைமின் கண்டீர்"**[49]

என்று எடுத்துரைக்கிறாள். நிலையற்ற செல்வத்தை நிலையானதென்று நினையாமல் தவத்தை நினையுங்கள் என அனைவருக்கும் அறிவுறுத்துகிறாள். விசயையுடன் சீவகனின் வளர்ப்புத் தாயான சுநந்தையும் துறவு மேற்கொள்ளத் துணிகிறாள். இருவரும் பல்லக்கில் ஏறித் துறவிடம் நோக்கிச் செல்கின்றனர். நகரில் உள்ள மகளிர் தம் கூந்தலில் சூடிய பூக்களைத் துறந்து தமது துயர நிலையை எடுத்துரைக்கின்றனர்.

பம்மையின் தவப்பள்ளியை நோக்கிச் சென்ற விசயை மற்றும் சுநந்தையுடன் ஆயிரம் சிவிகையில் மகளிர் உடன் செல்கின்றனர். அவர்களும் துறப்பதற்கு ஒருப்பட்டுச் சென்றவர் ஆவர். பம்மையின் தவப்பள்ளியை அடைந்த விசயையும சுநந்தையும் தம் துறவு உள்ளத்தை அவரிடம் எடுத்துரைக்கின்றனர்.

சமண ஆகமங்களில் கூறப்பட்டுள்ள முறைப்படி இருவரின் காலடிகளும் பாலால் கழுவப்படுகின்றன. அவர்களின் முலைகள் வெண்ணிற ஆடையால் கட்டப்படுகின்றன.

**“பாலினாற் சீறடி கழுவிப் பைந்துகில்**
**நூலினா னியன்றன நுனித்த வெண்மைய**
**காலனைக் கண்புதைத் தாங்கு வெம்முலை**
**மேல்வளாய் வீக்கினார் விதியி னென்பவே”**[50]

எனும் பாடல் வாயிலாக இதனை அறியமுடிகிறது.

**மகளிரின் துறவு**

தவப்பள்ளியில் இருந்த ஔவைமார், விசயை மற்றும் சுநந்தையின் தலை மயிர்களைக் களைகின்றனர். இந்நிகழ்வு,

**“மணியியல் சீப்பிடச் சிவக்கும் வாணுதல்**
**அணியிருங் கூந்தலை யெளவை மார்கடாம்**
**பணிவிலர் பறித்தனர் பரமன் சொன்னூற்**
**றுணிபொருள் சிந்தியாத் துறந்தன் மேயினார்”**[51]

என்ற பாடலில் இடம்பெற்றுள்ளது. நங்கைமார் இருவரும் மயிர் களையப்பட்டதற்குப் பின்னர் தோகை இழந்த மயில் போலத் தோன்றியமையை,

**“நங்கைமார்**
**தொன்மயிர் உகுத்தநன் மயிலிற் றோன்றினார்”**[52]

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. தவப்பள்ளியில் தன் தாய்மாரை வந்து வணங்கிய சீவகன், விசயையிடம் சில நாள்கள் அனைவரும் அந்நகரிலேயே

தங்கியிருக்க வேண்டுகிறான். ஆனால் உறவுப் பற்றை விடுத்த விசயை சீவகனுக்கு மறுமொழி கூற இயலாத நிலையில், பம்மையடிகள் சீவகனிடம்,

**“காதல னல்லை நீயுங் காவல நினக்கி யாமும்**
**ஏதில மென்று கண்டா யிருந்து நங்கை யென்ன”**[53]

என மறுமொழி பகர்கிறாள்.

விசயையின் துறவு வாழ்க்கையை மாற்ற இயலாத சீவகன், சுநந்தையிடம் அவளது துறவு உள்ளத்தை மாற்றுமாறு வேண்டுகிறான். அதற்குச் சுநந்தை கணவனை இழந்த நிலையில் தான் அரச வாழ்வை மேற்கொண்டால் அதனால் தனக்கு பழியே நேரும் எனக் குறிப்பிட்டுச் சீவகனை இனிதாக அரசாட்சி நடத்த வேண்டுகிறாள்.

**“சென்றதோ செல்க விப்பால் றிருமக ளனைய நங்கை**
**இன்றிவ டுறப்ப யானின் னருசுவந் திருப்பே னாயின்**
**என்றெனக் கொழியு மம்மா பழியென விலங்கு செம்பொற்**
**குன்றதனான் குளிர்ப்பக் கூறி கோயில்புக் கருளு கென்றான்”**[54]

என்ற பாடற்கருத்தால் இதனை அறியலாம்.

சீவகன் துறவு மேற்கொள்ளத் துணிந்த பின்னர்த் தன் எட்டு மனைவியர்க்கும் துறவின் மேன்மையை எடுத்துரைக்கிறான். முதுமைக்காலத்தில் மகளிரின் கொங்கைகள், பைபோல் தொங்கிக் கிடக்கும். அவர்தம் மழைக்கண்களும் இமை அழுகி ஒளிகெட்டு நிற்கும். மேனியின் அழகு குன்றி முதுமைப் பருவத்தினை மகளிர் எய்துவர். அத்தகைய கொடிய முதுமையை அடைவதற்கு முன்பே துறத்தல் நன்று என்பதைச் சீவகன்,

**“நீனிறங் கொண்ட வைம்பா னிழன்மணி யுருவ நீங்கிப்**
**பானிறங் கொண்டு வெய்ய படாமுலை பையிற் றூங்கி**
**வேனிற மழைக்கண் டாமு மிமைகுறைந் தழுகி மேனி**
**தானிறங் கரக்குங் காலந் தையலீர் மெய்ய தன்றே”**[55]

என எடுத்துரைக்கின்றான்.

துறவின் மேன்மையைத் தன் மனைவியர்க்கு எடுத்துரைத்த சீவகன் அவர்களையும் துறவு மேற்கொள்ள வேண்டுகிறான். மனைவியர் எண்மரும் சீவகனுடன் இணைந்து உலக வாழ்வைத் துறக்க விரும்புகின்றனர். முற்பிறவியில் தாம் செய்த தீவினை குறித்தும் எண்ணுகின்றனர்.

**“நாடக நயந்து காண்பார் நலங்கிளர் கண்கள் குன்றும்**
**ஆடகக் கலத்து ளான்பா லமிர்தினை நயந்துண் பாரை**
**நீடகம் வெகுண்டுங் கையாற் பிடித்துநீ றட்டி யிட்டோம்**
**கோடக மணிந்த கோல முடியினாய் துறந்து மென்றார்”**[56]

மனைவியர் எண்மரையும் விசயையின் தவப்பள்ளியில் சீவகன் விடுக்கிறான். அங்குச் சென்ற அவர்கள் தம் அணிகலன்களைத் துறந்து, தூய வெண்ணிற ஆடைகளைக் கொங்கைகளில் இறுக்கக் கட்டுகின்றனர். தமது கூந்தலை உகுத்துத் துறவிற்கு ஆயத்தமாகின்றனர். இதனை,

**“நறும்புகை நான நாவிக் குழம்பொடு பளிதச் சுண்ணம்**
**அறிந்தவ ராய்ந்த மாலை யணிந்தபைங் கூந்தலாய்பொன்**
**நிறந்தரு கொம்பு நீலக் கதிர்க்கற்றை யுமிழ்வ வேபோற்**
**செறிந்திருந் துகுத்துச் செம்பொற் குணக்கொடி யாயி னாரே”**[57]

என்ற பாடல் விளக்குகின்றது.

இவ்வாறு நோன்பியற்றிய சீவகனின் மனைவியர், ஒளிநிறைந்த தம் கண்களால் எறும்புகளுக்கும் ஒரு துன்பம் நேராமல் பாதுகாத்து நடந்தும், இருந்தும் நின்றும் தவத்தை முடிக்கின்றனர்.

**“வல்லவன் வடித்த வேல்போன் மலர்ந்துநீண் டகன்ற வாட்கண்**
**மெல்லவே யுறவி யோம்பி யொதுங்கியு மிருந்து நின்றும்**
**முல்லையஞ் சூட்டு வேயின் முரிந்துபோ நுசுப்பி னல்லார்**
**மல்லற்குன் றேந்தி யன்ன மாதவ முற்றி னாரே”**[58]

இவ்வாறு இவர்கள் மேற்கொண்ட நோன்பு ‘மாதவம்’ என அழைக்கப்படுகிறது. இத்தவத்தினை ‘அருந்தவம்’ என்ற பெயராலும் திருத்தக்க தேவர் குறிப்பிடுகிறார். இதனை,

**“ஒழுக்கிய லருந்தவத் துடம்பு நீங்கினார்**
**அழிப்பரும் பொன்னுடம் படைந்த தொப்பவே”**[59]

என்ற பாடலடிகள் வாயிலாக அறியலாம். பெண்பிறப்பு இழிவானது என்பது சமண சமயக் கொள்கையாகும். தன் சமகால வாழ்வில் நோன்பியற்றி உலக வாழ்வைத் துறந்த பெண்களுக்கு முக்தி கிடைக்கும் எனச் சமணசமயம் குறிப்பிடுகிறது. தானம், தவம், பூசை, மெய்த்தவம் முதலியனவற்றைச் செய்து ஆடவர்கள் வீடுபேற்றினை அடைவர். ஆனால் மகளிர் சமகாலப் பிறப்பில் வீடுபேற்றை அடைந்திட முடியாது என்பதனை வாமன முனிவர்,

**“விதியினால் கதிகள் நான்கின் மேவிநின் றார்கள் தம்முள்**
**மதியினால் பெரிய நீரார் மக்களாய் வந்து தோன்றி**
**விதியினால் தானம் பூசை மெய்த்தவம் செய்து வீட்டைக்**
**கதிகளைக் கடந்து செல்வார் காரிகை யார்கள் செல்லார்”**[60]

எனக் குறிப்பிடுகிறார்.

## மகளிரின் அறநெறி

முத்தி இலம்பகத்தில் சீவகனுக்கு அறம் உரைக்கும் சாரணர் கூற்றில் பெண்பிறப்பின் தன்மையைத் திருத்தக்க தேவர் எடுத்துரைத்துள்ளார். அறநெறியைப் பின்பற்றி வாழ்வோர் பெண்ணாகப் பிறவார் என்பதை,

**“செறியச் சொன்ன பொருடெளிந்தார் சேரார் விலங்கிற் பெண்ணாகார்”**

என்ற பாடலடி வாயிலாக எடுத்துரைத்துள்ளார். இதன் வாயிலாகப் பெண்பிறப்புக் குறித்துச் சமணசமயம் கொண்டிருந்த கொள்கை புலனாகிறது. “பெண்களுக்கு இந்தப் பிறவியில் (பெண் பரியாயத்தில்) முக்தி கிடைக்காது. எனவே சுக்லத்

தியானம் ஏற்பட முடியாது என்றாலும் நிராசை அடைய வேண்டியது இல்லை. தர்ம யோகத்தைப் பெண்களும் அடைய முடியும். இந்த தர்ம யோகத்தினால் பெண் பரியாயம் நாசம் அடையும். நிச்சயத்தில் தேவகதி கிடைக்கும். முறையாக முக்தியும் கிடைக்க ஏதுவாகிறது. இது ஜிநேந்திரரின் வாக்கு,"[61] என ஜைன தத்துவ நெறிகளை ஸ்ரீஆதிஸ்வரசுவாமி எடுத்துரைத்துள்ளார். 'சுக்லத் தியானம்' என்பது தியானத்தின் துவக்க நிலையாகும். அது வளர்ந்து முழுமை அடைதல் 'சுக்லத்' தியானம் எனப்படுகிறது.

பெண் பிறப்பை ஒழிக்க வேண்டுமாயின் இத்தகைய தவத்தைச் செய்திடல் வேண்டும் என்பதைச் சீவகனின் மனைவியர் மேற்கொண்ட நோன்பின் வாயிலாகத் திருத்தக்க தேவர் வலியுறுத்துகிறார்.

**"சூழ்பொற் பாவையைச் சூழ்ந்து புல்லிய**
**காழகப் பச்சை போன்று கண்டொறூஉம்**
**மாழை நோக்கினார் மேனி மாசுகொண்**
**டேழைப் பெண்பிறப் பிடியச் சிந்தித்தார்"[62]**

நோன்பு முற்றிய நிலையில் இருந்த மகளிரின் தோற்றம் இப்பாடலில் விளக்கப்பட்டுள்ளது. பொற்பாவை மீது கருஞ் சேற்றையுடைய தோல் போன்று மேனியெல்லாம் மாசு படிந்து அவர்கள் காணப்படுகின்றனர்.

**"ஆசை யார்வமோ டைய மின்றளியே**
**ஓசை போயுல குண்ண நோற்பின்**
**ஏசு பெண்ணொழித் திந்தி ரர்களாய்த்**
**தூய ஞானமாய்த் துறக்க மெய்தினார்"[63]**

என்ற பாடலில், ஆசை, பற்று, ஐயம் ஆகியன இன்றி, நோன்பியற்றிய மகளிர் புகழ் மிக்க தேவர் உலகில் உள்ளனவற்றை நுகரும்படி நோன்பியற்றுகின்றனர். 'பொல்லாது என்று கூறும் பெண்பிறப்பைக் கைவிட்டு இந்திரர்களாய் ஞானம் பெற்றுச் சுவர்க்கத்தை அடைகின்றனர்'.

“தீங்கைத் தருமென்று இழித்துக் கூறும் பெண்பிறப்பைக் கைவிட்டு இந்திரர்களாய் ஞானம் பெற்றுச் சுவர்க்கத்தை எய்தினாரென்க”[64] என நச்சினார்க்கினியர் குறிப்பர். இல்வாழ்க்கையில் ஐந்து அணுவிரதங்களைக் கடைப்பிடிக்கும் சீல ஒழுக்கத்தவராகி, உண்மையான தவத்தை உடைய முனிவர் முதலானோர்க்கு உணவு முதலிய தானங்களைச் செய்து, அருகக் கடவுளை வணங்கி, தங்கள் கணவனை மேலாக வாழ்ந்த கற்புடைய மகளிர், மறுபிறவியில் பெண் உருவத்தினின்று நீங்கி, மேலான தேவர்களாகப் பிறப்பர் என்பதை மேருமந்தர புராணம்,

**“விரதசீ லத்த ராகித் தானமெய்த் தவர்க்குச் செய்து**
**அருகனைச் சரண மூழ்கி ஆன்றவர்ச் சிறப்புச் செய்து**
**கருதிநற் கணவற் பேணும் கற்புடை மகளிர் இந்த**
**உருவத்தின் நீங்கிக் கற்பத் துத்தம தேவ ராவார்”**[65]

எனக் குறிப்பிடுகிறது.

இல்லற வாழ்க்கையை மேற்கொண்டு வாழ்கின்ற மகளிர் செய்கின்ற பாவங்கள் சீவகசிந்தாணியில்,

**“கொல்வாருங் கூட்டுட் செறிப்பாரு மாடவர்கள்**
**அல்லாரு நாய்வேட்ட மாடாத மாத்திரையே**
**அல்லாத பைங்கிளியும் பூவையு மாதியா**
**எல்லாங் கிளைபிரித்திட் டேமுறுநோய் செய்பவே”**[66]

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. ‘மகளிர் வேட்டைக்காக நாயுடன் வந்து உயிர்களைக் கொல்வதில்லை. மாறாக வீட்டினுள்ளிருந்து சமையலுக்காக உயிர்க்கொலை புரிகின்றனர். ஆசையுடன் வளர்க்கும் கிளி, நாகணவாய்ப்புள் முதலானவற்றைத் அவற்றின் இனத்திலிந்து பிரித்துக் கூட்டில் அடைத்து வைத்து அவை துன்புறுதலுக்குரிய தீமைகளைச் செய்கின்றனர். எனவே இத்தகைய தீவினைகள்

நீங்கப்பெற அவர்கள் தவமியற்ற வேண்டும் என்ற கருத்தினை இப்பாடற் கருத்திலிருந்து உய்த்தறியமுடிகிறது.

தேவருலகம் சென்ற சீவகனின் மனைவியர் அங்குத் தம் பெண் பிறப்பை ஒழித்து, தேவர்களாக மாறித் தேவ மகளிரைக் கூடி இன்பம் துய்க்கின்றனர்.

**“காம வல்லிகள் கலந்து புல்லிய**
**பூமென் கற்பகப் பொன்ம ரங்கள்போல்**
**தாம வார்குழற் றைய லார்முலை**
**ஏம மாகிய வின்ப மெய்தினார்”**[67]

இவ்வாறு இன்பமெய்திய அவர்கள் தேவமகளிர் கொண்ட ஊடலைத் தீர்க்கின்றனர். முற்பிறவியில் சீவகன் மீது ஊடல் கொண்ட அவர்கள் அவனைத் தலையால் வணங்கும்படி செய்த தீவினைக்காக இப்பிறவியல் தேவராகி, தெய்வ மகளிர் பாதத்தை வணங்கியமையை,

**“செய்த நீர்மையார் செயப்பட் டார்கடாம்**
**எய்தி யாவையு முணர்க வென்பபோல்**
**மைய வாங்குழன் மடந்தை குண்டலம**
**நைய நின்றெலா நாண நக்கவே”**[68]

என்ற பாடல் வாயிலாக அறியமுடிகிறது.

### பிற ஆடவரை விரும்பிய மகளிர்க்குரிய தண்டனைகள்

‘பிறன்மனை விழையாமை’ எனும் அதிகாரத்தில் திருவள்ளுவரும், நாலடியாரில் பொருட்பால் எனும் அதிகாரத்தில் சமண முனிவர்களும் பிறர் மனைவியை விரும்புதலால் ஆடவர்க்கு ஏற்படும் தீவினைகள் குறித்து விளக்கியுள்ளனர்.

இல்வாழ்க்கையில் கணவன் இருப்பப் பிற ஆடவரை விரும்பிய மகளிர் அடையும் துன்பங்கள் குறித்துத் திருத்தக்க தேவர் விளக்கியுள்ளார். இக்கருத்துகள் சமணசமயம் சார்ந்தனவாகவே உள்ளன.

**“குழற்சிகைக் கோதை சூட்டிக் கொண்டவ னிருப்ப மற்றோர்**
**நிழற்றிகழ் வேலி னானை நேடிய நெடுங்க ணாளும்**
**பிழைப்பி லாட்புறந் தந்தானுங் குரவரைப் பேணல் செய்யா**
**திழுக்கினாரி வர்கள்கண்டா யிடும்பை நோய்க் கிரைக ளாவார்”**[69]

இப்பாடலில், ‘தன் கூந்தலில் கணவன் சூட்டிய மாலையை அணிந்து கொண்டு, அவன் உயிருடன் இருக்கும் போதே அவனறியாமல், காம வேட்கை கொண்டு வேறொரு ஆடவனைத் தேடும் மகளிர் துன்பத்திற்கு இரையாவர் எனும் கருத்து விளக்கப்பட்டுள்ளது.

## தொகுப்புரை

விருத்தக் காப்பியமாக அமைந்துள்ள சீவகசிந்தமணி அடிப்படையில் ஒரு சமண சமயக் காப்பியம், என்பதை காப்பியத்தில் இடம்பெற்றுள்ள சமண சமயக் கருத்துகளைக் கொண்டு எடுத்துரைக்க முடிகிறது.

திருத்தக் தேவர் சமண சமயத் துறவி என்று அறியப்படுகிறது. தாம் சார்ந்த சமயத்தின் கொள்கைகளையும், அவற்றின் கோட்பாடுகளையும் பதிவு செய்யும் நோக்கில் சீவகசிந்தாமணி என்ற ஒப்பற்ற காப்பியத்தைப் படைத்தளித்துள்ளார் என்பது ஆய்வின் வழியாக அறியமுடிகிறது.

திருத்தக் தேவர் தான் இயற்றிய சீவகசிந்தாமணியில், சமண சமயத்தின் கொள்கைகளைக் காப்பியப் பாத்திரங்கள் வழியாக நிறுவியுள்ளதைக் காணமுடிகிறது.

காப்பியத்தில் சமண சமயக் கடவுள்கள் மற்றும் சமண சமயக் கொள்கைள் குறித்தான பதிவுகள் மட்டுமின்றி, பிற சமயக் கடவுள்கள் குறித்தான பதிவுகளும், வேதங்கள் மற்றும் புராண இதிகாசக் கருத்துக்களும் இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.

சமண சமயக் கொள்கைகள் மட்டுமின்றி பிற சமயக் கடவுள் மற்றும் கொள்கைகள் குறித்த பதிவிலிருந்து, இக்காப்பியத்தின் ஆசிரியர் சமயக் காழ்ப்புணர்ச்சி அற்றவர் என்பது புலனாகின்றது.

தமிழர்கள் ஆரியத்திற்கு முன்னதாகவே கடவுள் கொள்கை உடையவர்களாக இருந்துள்ளனர். ஐவகை நிலங்களுக்குரிய தெய்வங்களும், அவற்றிற்கான வழிபாட்டு முறைகளும், தமிழர்களின் தொன்மையான கடவுள் கொள்கையும் இக்காப்பியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

சமண சமயத்தை முதன்மை நோக்கமாகக் கொண்டு பாடப்பட்ட சீவகசிந்தாமணி காப்பியத்தில், கடவுள் வாழ்த்துப் பாடலாக சமண சமயக் கடவுளர் வணக்கம் இடம்பெற்றுள்ளது. கடவுள் வணக்கத்தில் துதி வணக்கங்களாக, சித்தசரணம், அருகசரணம், சாது சரணம் என்ற துதிச்சொற்கள் இடம்பெற்றுள்ளன.

சமண சமயத்தின் கடவுளான அருக தேவர் குறித்தான பதிவுகள் காப்பியத்தில் ஆங்காங்கே பதிவாக்கம் பெற்றுள்ளதைக் காணமுடிகிறது.

ஆரியத்திற்கு மாற்றான சிந்தனை கொண்ட சமயமாக சமண சமயம் விளங்குவதை அறியமுடிகிறது.

திருத்தக்க தேவர் காலத்திய சமூகத்தில் வைதீகம் பெரும் வளர்ச்சி பெற்றிருந்ததை அறியமுடிகிறது. தமிழ்க் கடவுளான முருகப் பெருமான் குறித்தான பல்வேறு செய்திகள் காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன.

கடவுளர்களின் வடிவ ஒப்பனை காப்பிய மாந்தர்களுக்கு ஒப்புமை செய்யப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. மகளிர் பாத்திரங்களுக்கு திருமகள் உவமிக்கப்பட்டுள்ளது போல், சிவன், திருமால் மற்றும் முருகன் ஆகிய கடவுளர்கள் சீவகனுக்கு உவமையாக்கப்பட்டுள்ளன. இவற்றிலிருந்து, தமிழ்க் கடவுளர்கள் ஆரியர்களின் வைதீகச் சமயத்திற்குள் நுழைந்தள்ளதை அறியமுடிகிறது.

மகளிர் தங்கள் துன்பங்களைப் போக்கிக் கொள்ள பஞ்ச நமஸ்கார வழிபாட்டினை மேற்கொண்டுள்ளனர். இல்லற மகளிர் சுகமான வாழ்விற்காக நோன்புகளையும் கடவுள் வழிபாடுகளையும் செய்துள்ளனர்.

தீவினைகள் தங்களை அணுகாமல் இருப்பதற்கு விரதங்களை மகளிர் மேற்கொண்டுள்ளதைக் காணமுடிகிறது.

காதலனைக் கணவானகப் பெறவேண்டும் என்று மகளிர் வரம் வேண்டியுள்ள செயலைக் காணமுடிகிறது. கணவனின் துன்பம் போக்க எண்ணிய மகளிர் கடவுளர்களுக்கு நோன்புகள் இருந்துள்ளனர்.

சுரமஞ்சரி சீவகன் கிடைக்க வேண்டி காமதேவனை வழிபாடு செய்து நோன்பு இருந்துள்ளதைக் காணமுடிகிறது. மகளிர் முக்தி நிலை அடைவதற்குரிய வழிமுறைகள் கூறப்பட்டுள்ளன. இத்தகைய சிந்தனை சமண சமயத்தின் வழிபட்டதாக அமைந்துள்ளது.

பிற ஆடவரை விரும்பும் மகளிர் மிகுந்த தண்டனைகளுக்கு ஆளாக்கப்பட்டுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. மகளிர் சமயம் சார்ந்த கொள்கைகளிலும், தங்களை ஈடுபடுத்திக் கொண்டுள்ளதைக் காப்பியத்தின் வழியாக அறியமுடிகிறது. காப்பியம் முழுவதும் சமணநெறிகள் கூறப்பட்டு இருந்தாலும் இறுதிப்பகுதியாக உள்ள முக்தி இலம்பகத்தில் சமணசமய நுண்பொருளை முறைபடுத்தித் தொகுத்தும் வகுத்துத் விரித்தும் கூறியிருப்பது போற்றுதற்குரியதாக அமைகின்றது.

சீவகசிந்தாமணிக் காலத்தில் சமய சாதி அமைப்புகள் தோன்றிவிட்டன. சீவகசிந்தாமணி அவற்றை அறிய செய்துவிட்டது சமணர்கள் தமிழுக்கு அளித்த நூல்கள் அனைத்தும் சொல்ல இயலா சிறப்புடையது. சமணத் தெய்வமாக அருகன்

இருந்ததை சீவகசிந்தாமணி மட்டும் இன்றி மற்ற காப்பியங்களும் எடுத்துக்கூறுவதை அறியமுடிகின்றது.

உயிர்க்கொலை செய்யாமை, புலால் மறுத்தல், உடம்பு, செல்வம், இளமை ஆகியவை நிலையற்றவை என்பதை சமண சமயம் போதிக்கிறது. காப்பிய நூல்களிலும் பல மாற்றங்களைக் கொண்டு மக்கள் மனதில் நீங்கா இடம் பெறும் வண்ணம் சிறப்பான ஓவியமாகச் சிந்தாமணி திகழ்வதை இவ்வியல் விளக்கி நிற்கின்றது.

# சான்றெண் விளக்கம்

1. ச. சோமசுந்தர பாரதியார், தமிழும் தமிழரும், பக்.36-37.
2. சீவகசிந்தாமணி, பா.1:2-3
3. நச்சினார்க்கினியர், (உ.ஆ.), சீவகசிந்தாமணி, ப.5
4. சீவகசிந்தாமணி, பா.1467
5. முல்லைப் பாட்டு, 1-3
6. சீவகசிந்தாமணி, பா.188:3-4
7. மேலது, பா.183
8. மேலது, பா.286:1-2
9. மேலது, பா.482:1-2
10. மேலது, பா.207
11. மேலது, பா.211
12. கா. கோ. வேங்கடராமன், சிந்தாமணியின் அகவடிவமும் அமைப்பு வடிவமும், ப.65
13. நச்சினார்க்கினியர், (உ.ஆ.), மு.நூ., ப.141
14. சிலப்பதிகாரம், 10:100
15. அடியார்க்கு நல்லார், (உ.ஆ.), சிலப்பதிகாரம், ப.236
16. சீவகசிந்தாமணி, பா.273:2-4
17. A. சிம்ம ஜைன் சாஸ்த்திரி, சமணர் வழிபாட்டு முறைகள், ப.41
18. மேலது,
19. சீவகசிந்தாமணி, பா.378:4
20. A. சிம்ம ஜைன் சாஸ்த்திரி, மு.நூ. ப.43

21. சீவகசிந்தாமணி, பா.220:3-4
22. மேலது, பா.221:1-2
23. மேலது, பா.1125
24. மேலது, பா.2828
25. நச்சினார்க்கினியர், (உ.ஆ.), மு.நூ., ப.1385
26. மேலது, பா.353:4
27. மேலது, பா.349:4
28. மேலது, பா.350:4
29. மேலது, பா.351:4
30. மேலது, பா.354
31. மேலது, பா.1784
32. மேலது, பா.910
33. கனக. அஜிதாதாஸ், சிரே. தன்யகுமார், (தொ.ஆ.), ஜைனம் ஓர் அறிமுகம், ப.25
34. சீவகசிந்தாமணி, பா.1036:3-4
35. மேலது, பா.1146
36. மேலது, பா.1146:2-3
37. மேலது, பா.1160
38. மேலது, பா.2052:4
39. மேலது, பா.2056
40. மேலது, பா.2057
41. மேலது, பா.1467
42. மேலது, பா.1470

43. மேலது, பா.2394

44. மேலது, பா.2926

45. மேலது, பா.2926:1-2

46. மேலது, பா.2603

47. மேலது, பா.2738

48. மேலது, பா.2616

49. மேலது, பா.2622

50. மேலது, பா.2634

51. மேலது, பா.2637

52. மேலது, பா.2638:3-4

53. மேலது, பா.2643:1-2

54. மேலது, பா.2647

55. மேலது, பா.2940

56. மேலது, பா.2989

57. மேலது, பா.2994

58. மேலது, பா.3119

59. மேலது, பா.325:1-2

60. மேருமந்திரபுராணம், பா.737

61. ஸ்ரீ ஆதிஸ்வரசுவாமி, ஜைன தத்துவம், ப.13

62. சீவகசிந்தாமணி, பா.1320

63. மேலது, பா.3121

64. நச்சினார்க்கினியர், (உ.ஆ.), சீவகசிந்தாமணி, ப.1507

65. மேருமந்திர புராணம், பா.739

# ஆய்வு நிறைவுரை

தமிழ் மொழி தொன்மையும், சிறப்பும் வாய்ந்த ஒன்றாக உள்ளது. தமிழ் மொழியில் பல்வகையான இலக்கியங்கள் தோற்றம் பெற்றுள்ளன. அவற்றுள் காப்பிய இலக்கிய வகையும் ஒன்றாகும்.

தமிழ் இலக்கிய வரலாற்றில் சீவகசிந்தமணி முதன்மையான விருத்தக் காப்பியமாகப் படைக்கப்பட்டுள்ளது. இக்காப்பியத்தைச் சமண சமயத் துறவியான திருத்தக்கத் தேவர் அருளியுள்ளார்.

சமண சமயக் கொள்கைகள் மற்றும் கோட்பாடுகளை எடுத்துரைக்கும் முகமாக சீவகசிந்தாமணி காப்பியம் அமையப்பெற்றுள்ளது. மேலும், இக்காப்பியத்தில் தமிழர்களின் வாழ்வியல் முறைகள், சமண ஒழுக்க நெறிகள், மற்றும் பழக்க வழக்கங்கள் ஆகியன பதிவாக்கம் பெற்றுள்ளன.

சீவகசிந்தாமணி காப்பியம் இன்பச்சுவையைக் குறிப்பிட்டு, பின்னால் முக்தி நிலையை அடையும் வீடுபேற்றினைக் குறித்துப் பேசுவதாக அமைந்துள்ளது. எனவேதான், இன்பச்சுவையில் காப்பியத் தலைவன் சீவகன் எட்டுப் பெண்களை காதல் செய்து திருமணம் முடிக்கின்றான். இதானல் இக்காப்பியம் ‘மணநூல்’ என்ற சிறப்பினையும் பெற்றுள்ளது.

பதினைந்து இலம்பகங்களைக் கொண்டமைந்துள்ள சீவகசிந்தமணியில், காப்பியத் தலைவன் சீவகனின் பிறப்பு முதல் முக்தி நிலை அடைவது வரையிலான பல்வேறு செய்திகள் பதிவாகியுள்ளன.

ஒவ்வொரு இலம்பகங்களிலும், பல்வேறு மகளிர்களின் தனித்தன்மைகள், பண்புநலன்கள், குணநலன்கள், திறன்கள் மற்றும் அவர்கள் மேற்கொண்ட ஒப்பனைகள், ஆடை அணிகலன்கள் எனப் பல்வேறு பதிவுகள் இடம்பெற்றுள்ளதை அறியமுடிகின்றன.

ஆதிநிலையில் தனித்துவமாக விளங்கிய பெண்கள், தந்தை வழிச்சமூக அமைப்பில், ஆண்களுக்குக் கீழ் நிலையில் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. இருந்தபோதிலும், பெண்கள் ஆண்களுக்கு இணையாகப் பல்வேறு பணிகளை மேற்கொண்டிருந்ததற்கான சான்றாதாரங்களைக் காப்பியத்தின் மூலம் அறியமுடிகிறது.

மகளிர், உழவுத் தொழில் முதல் அரண்மனைக் காவல் பணி வரையிலும் பல்வேறு பணிகளைச் செய்துள்ளனர். உழவுத் தொழிலில் ஈடுபடும் மகளிர்கள் ‘கடைசியர்’ என்ற பெயரில் அழைக்கப்பட்டுள்ளனர். இல்லறப் பெண்கள், வீட்டு வேலைகளையும், பசுக்களையும் பாதுகாத்து, அவற்றிலிருந்து பால்களையும், நெய்களையும், வெண்ணெய்களையும் தயார் செய்து விற்பனை மேற்கொண்டிருந்ததைக் காணமுடிகிறது. இவ்வகையில், பெண்கள் குடும்ப வருமானத்திற்கான அடிப்படை வேலைகளையும் செய்துள்ளதை அறியமுடிகிறது.

அரண்மனையில் இளவரசிக்குக் காவல் காக்கும் பெண்கள், வில், வாள் போன்ற திறன் மிக்க போர் பயிற்சிகள் பெற்று சிறந்து விளங்கியுள்ளனர். அக்காலத்திய மகளிர் தங்கள் கணவர் இறந்தபோது, சமுதாயத்தில் பின்பற்றப்படும் மரபு சார்ந்த நம்பிக்கையில் ஈடுபட்டுள்ளனர். குறிப்பாகக் கணவர் இறந்த பின்னால், தங்கள் அணிகலன்களையும், சாப்பாட்டு முறைகளிலும் மாற்றங்களை ஏற்படுத்திக் கொண்டனர். மன்னர்களின் மனைவியர், அரசன் இறந்தபோது தானும் இறந்துபடுவதையே விரும்பினர். அக்காலத்தியச் சமூகத்தில் பரத்தமை ஒழுக்கம் கடியப்படவில்லை. பரத்தையர்கள் தங்கள் உடலை விற்றுப் பொருளீட்டி வாழக்கையை நடத்தியுள்ளனர். மகளிர் தங்கள் வாழ்வியலுக்கு ஏற்ப வாழ்க்கையைக் கட்டமைத்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

மகளிர் தங்களது ஓய்வுநேரங்களில் பல்வேறு விளையாட்டுக்கள் விளையாடியுள்ளனர். பந்தடித்தல் என்னும் விளையாட்டு மகளிரின் குறிப்பிடத்தகுந்த விளையாட்டாக அமைந்துள்ளது.

மகளிர் வீரமுள்ள ஆண்களை மட்டுமே திருமணம் முடிக்க விரும்பியுள்ள நிலைப்பாட்டைக் காணமுடிகிறது. திருமணம் முடித்த மகளிருக்குப் பல்வேறு பரிசுப் பொருட்கள் வழங்கப்பட்டன. போரில் வெற்றி பெற்ற மன்னர்கள், தோல்வியற்ற மன்னர்களின் மகளிர்களைக் கைக்கொண்டு, தங்கள் நாடுகளில் கோவில் பணிகளில் ஈடுபடுத்தினர்.

கணவனது இறப்பினைத் துயராகக் கருதிய மகளிர், மங்களச் சடங்குகளிலும், ஈமச்சடங்குகளிலும், தங்களை ஈடுபடுத்திக் கொண்டனர். காப்பியத் தலைவனாகிய சீவகனைப் பருவ மகளிரும், எட்டுப் பெண்களும் காமனைப் போல் கருதி நேசித்துள்ளனர். மேலும், சீவகன் உலாவருகின்ற பொழுது பருவ மகளிரும், பரத்தையரும் நேசம் கொண்டு விரும்பியுள்ளதை சீவகசிந்தாமணிவழி அறியமுடிகின்றது.

எட்டுப் பெண்களும், சீவகனை வெவ்வேறு வகையான அடிப்படையில் காதல் கொண்டு திருமணம் முடித்துள்ளனர். காப்பியத்தில் குறிப்பிடப்பட்டுள்ள எட்டுப் பெண்களின் திருமணங்களும், யதார்த்த நிலைக்கு உட்பட்டனவாக அமையவில்லை. எட்டுப் பெண்களை மணமுடிக்கும் சீவகனின் நிலைப்பாடு, தமிழ் அகத்திணை மரபினைப் பிரதிபலிப்பதாக அமைந்துள்ளது.

சமண சமயக் கருத்துக்களைப் வெளிப்படுத்தும் நோக்கில் சீவசிந்தாமணி காப்பியம் அமைந்துள்ளதை அறியமுடிகிறது. காப்பியப் பாத்திரங்களின் வழியாக சமண சமயக் கருத்துக்களைத் திருத்தக்கத் தேவர் பதிவு செய்துள்ளதை ஆய்வின் வழியாக கண்டறியப்பட்டுள்ளது.

சமண சமயக் கொள்கைகள் மற்றுமின்றி அன்றைய காலத்தியச் சமூகத்தில் நிலவிய ஆரிய, வைதீகச் சமயங்கள் குறித்தான கடவுள் கொள்கை, வழிபாட்டு முறைகள் ஆகியனவும் காப்பியத்தில் பதிவாக்கம் பெற்றுள்ளன.

பிற ஆடவரை விரும்பும் மகளிர் மிகுந்த தண்டனைகளுக்கு ஆளாக்கப்பட்டுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. மகளிர் சமயம் சார்ந்த கொள்கைகளிலும், தங்களை ஈடுபடுத்திக் கொண்டுள்ளதைக் காப்பியத்தின் வழியாக அறியமுடிகிறது.

காப்பியத்தில் இடம்பெற்றுள்ள மகளிர் திருமகளுக்கு இணையாக ஒப்புமை செய்யப்பட்டுள்ளனர். அதுபோல், காப்பியத் தலைவனாகிய சீவகன் திருமால், சிவன் மற்றும் முருகனோடு ஒப்புமை செய்யப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

இவ்வகையில், சீவகசிந்தாமணி காப்பியத்தில் பதிவாக்கம் பெற்றுள்ள மகளிரின் வாழ்வியல் முறைகளை இவ்வாய்வின்வழி அறியமுடிகின்றது.

# சீவகசிந்தாமணியில் மகளிர்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

ப. மெர்சி கீர்த்தனா

பதிவு எண்: 1571/2016-2017

நெறியாளர்

முனைவர் சு. விஸ்வநாதன்

தமிழ் உயராய்வு மையம்

மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி, சிவகங்கை




**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தரமதிப்பீட்டில் A+(CGPA 3.64) தகுதியும் மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகம் மற்றும் தன்னாட்சித் தகுதியும் பெற்றது.)

காரைக்குடி - 630 003

டிசம்பர் - 2020

# இயல் -6

# மகளிரும் சமயவாழ்வும்

சீவக சிந்தாமணி ஒரு சமணக் காப்பியம். சமணசமயக் கொள்கை, கோட்பாடுகள் பல இந்நூலில் பொதிந்து கிடக்கின்றன. திருத்தக்க தேவர், சமணசமயக் கொள்கைகளைக் காப்பியத்தில் இடம்பெற்றுள்ள காப்பிய மாந்தர்கள் வாயிலாக ஏற்ற இடங்களில் எடுத்துரைத்துள்ளார். மனித வாழ்வியலுக்குத் தேவையான பல்வேறு நல்லொழுக்கங்கள் பற்றி காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன. சமண சமய நீதிநூல்களில் இடம்பெற்றுள்ள கருத்துக்கள் பல காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன. ஆடவர், மகளிர் ஆகிய இருதிறத்தாருக்கும் உரிய சமயக் கோட்பாடுகள் பலவற்றைத் திருத்தக்க தேவர் சீவகசிந்தாமணியின் வாயிலாக எடுத்துரைத்துள்ளார். வைதீக சமயம் சார்ந்த கடவுளர்கள் பற்றிய குறிப்புகள், புராணக் கதைகள், இதிகாசச் செய்திகள் முதலியன நூலின் ஏற்ற இடங்களில எடுத்தாளப்பட்டுள்ளன. சமண சமய வழிபாட்டு முறைகள், நோன்புகள் ஆகியனவற்றை எடுத்துரைக்கும் வகையில் இவ்வியல் அமைகின்றது.

தமிழ்க்காப்பிய வரலாற்றில் சமணர்களுடைய பங்களிப்பு சொல்லுவதற்கு இயலா சிறப்பு பெற்றது. தமிழில் உள்ள காப்பியங்களில் பெரும்பான்மையான காப்பியங்கள் சமணம் சார்ந்த காப்பிய நூலாக இருக்கின்றன. சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி, வளையாபதி ஆகிய மூன்று பெருங்காப்பியங்களும் சமணர்கள் நமக்கு அளித்த கொடையாக உள்ளது. இதில் சீவகசிந்தாமணியில் மகளிர் எவ்வாறு சமண சமயக் கருத்துக்களைப் பின்பற்றி வந்துள்ளனர் என்பதையும் பெண்களுக்குச் சமமான உரிமை அளிக்கப்பட்டு இருத்தலையும் இவ்வியலில் விரிவாகக் காணலாம்.

சீவகசிந்தாமணியில் சமணசமயம் எவ்வாறு இருந்துள்ளது என்பதையும் அதில் மகளிரின் பங்களிப்பு பற்றியும் அவர்களின் சமணத்தொண்டு சமணத்துறவு பற்றிய விதம், மகளிரின் பங்களிப்பு பற்றிய செய்திகளையும் காணலாம். சமண சமயத்தில் மகளிர் ஆற்றிய பங்கு குறிப்பிட்டு கூறக்கூடிய ஒன்றாக உள்ளது. ஐம்பெருங்காப்பியத்தில் சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி, வளையாபதி மூன்றும் சமணக் காப்பியங்களாக உள்ளன. இதில் கூறப்படும் காப்பியப் பெண்களைக் கருவியாகக் கொண்டு சமண சமயக் கொள்கை, கோட்பாடு மற்றும் சிறப்புத் தன்மைகளை இப்பாடல்வழி அறியமுடிகின்றது.

**சீவக சிந்தாமணியில் சமயக் கருத்துகள்**

பண்டைத் தமிழர்களின் கடவுள் கொள்கை வேதகாலக் கடவுளர்களோடு தொடர்புடையதாகவே இருந்துள்ளது. தொல்காப்பியம் முதலே இதற்குச் சான்றுகள் உள்ளன. “வேதகால ஆரியர் இந்திரன், சந்திரன், வருணன், வாயு போன்ற சிறு தெய்வங்களையும் பஞ்ச பூதங்களையும் வணங்கினர். பின்னரே அவர்களிடம் மும்மூர்த்திகளும் முப்பத்து முக்கோடி தேவர்களும் வழிபாடு பெறலாயினர். ஒரு பிரமக் கோட்பாடும் வரலாயிற்று.”[1] எனச் ச. சோமசுந்தர பாரதியார் குறிப்பிடுகிறார். இவர்தம் கூற்றின் அடிப்படையில், சிவன், விஷ்ணு, பிரம்மன் முதலான வேதகாலக் கடவுளர்கள் ஆரியர்களின் வழிபாட்டிற்குரியவர்களாகத் திகழ்ந்தமையை அறியமுடிகிறது. ஆரியர்கள் தமிழகத்திற்கு வருவதற்கு முன்னர் தமிழர்கள் தமக்கென ஒரு கடவுட் கொள்கையைக் கொண்டிருந்தனர் என்பதைக் காணமுடிகின்றது.

**சமண சமயக் கருத்துக்கள்**

சமணர்கள் தங்களுக்கு என்று ஒருசில கொள்கைகள் வகுத்து வந்துள்ளனர். கொள்கைகளை அனுசரித்து பின்பற்றி வந்துள்ளனர். சுமண சமயத்தின்

தலையாயக் கொள்கை ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும் என்பதாகும். ஆன்மாவின் இன்ப துன்பங்களுக்கு வினைகள் உரியதாகும் என்பது அடிப்படைக் கொள்கையாகும். வினைக் கோட்பாட்டை வாய்ப்புக்கிடைக்கும் இடங்கள் தோறும் திருத்தக்க தேவர் வலியுறுத்திச் செல்கின்றார். சீவக சிந்தாமணியின் தொடக்கத்தில் இடம்பெற்றுள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்கள் சித்தசரணம், அருகசரணம், சாது சரணம் என்னும் முறையில் அமைந்துள்ளன என்பதை,

**“ஓவாது நின்ற குணத்தொண்ணிதிச் செல்வ னென்ப**
**தேவாதி தேவ னவன் சேவடி சேர்து மன்றே”**[2]

எனும் சித்தசரணப்பாடலில், ‘தன்னை விட்டு நீங்காது நின்ற குணங்களை உடைய ஒண்ணிதிச் செல்வன்’ எனச் சித்தர்களைப் போற்றுகிறார் திருத்தக்க தேவர். சித்தன் என்பதற்கு, “காதி, அகாதியென்னும் இருவகைக் கருமங்களையும் வென்று அக்கினியிந்திரனால் உடம்பைத் துறந்து பரிநிர்வாணம் பெற்று மூவுலகத்து உச்சியிலிருப்பவன்”[3] என விளக்கம் தருகிறார் நச்சினார்க்கினியர்.

அருகக் கடவுளைப் போற்றிப் புகழும் பாடல்கள் காப்பியத்தில் ஆங்காங்கே இடம்பெற்றுள்ளன. முக்குடையின் கீழ் வீற்றிருக்கும் அருகப் பெருமானை மலர்களால் தூவி வழிபடாதார் வீட்டுலகை அடையமாட்டார் என்ற கருத்து,

**“வீங்கோதை வண்ணன் விரைததும்பு பூம்பிண்டித்**
**தேங்கோத முக்குடைக்கீழ் தேவர் பெருமானைத்**
**தேவர் பெருமானைத் தேனார் மலர்சிதறி**
**நாவி னவிற்றாதார் வீட்டுலகை நண்ணாரே”**[4]

என்ற பாடலில் இடம்பெற்றுள்ளது.

## வைதீக சமயக் கருத்துக்கள்

ஆரியக் கடவுட் கொள்கைக்கு முற்றிலும் மாறான கடவுட் கோட்பாட்டை உடையவர்கள் சமணர்கள். ஆரிய வழிபாட்டு முறைமைகளும், சமண வழிபாட்டு

முறைகளும் வேறு வேறானவை. இருப்பினும் தொல்காப்பியர் காலம் முதலே இத்தகைய வழிபாட்டு முறைகள் தமிழகத்தில் கலந்து விட்டன. இம்முழுமுதற் கடவுள்களைப் பற்றிய குறிப்புகள் பலவற்றைச் சங்க இலக்கியங்களிலும் காணமுடிகிறது.

**"நனந்தலை யுலகம் வளைஇ நேமியொடு**
**வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை**
**நீர்செல நிமிர்ந்த மாஅல் போல"[5]**

சக்கரத்தையும் வலம்புரிச் சங்கினையும் தன் பெரிய கைகளில் கொண்டு, திருமகளைத் தன் மார்பில் கொண்டுள்ள திருமால் பற்றிய குறிப்பினை முல்லைப்பாட்டின் வாயிலாக அறியமுடிகின்றது.

திருத்தக்க தேவர் காலத்தில் பண்டைத் தமிழகத்தில் வைதீக சமயமும் சிறப்புற்றுத் திகழ்ந்துள்ளது. இக்கடவுள்கள் பற்றிய செய்திகளும் புராணக் கதைகளும் சீவசிந்தாமணியில் இடம்பெற்றுள்ளன.

சச்சந்தனும் விசயையும் புணர்ச்சி இன்பத்தில் மகிழ்ந்திருந்தமையை சிவபெருமானும் உமையம்மையும் கொண்டிருந்த புணர்ச்சியின்பத்திற்கு நிகராகக் குறிப்பிடுகிறார் திருத்தக்க தேவர், இதனை,

**"இனந்தமக் கெங்கு மில்லா ரியைத்தன ரென்ப முக்கட்**
**சினந்திகழ் விடையி னானுஞ் செல்வியுஞ் சேர்ந்த தொத்தே"[6]**

என்ற பாடற்கருத்தின் வழியாக அறியமுடிகிறது. விசயை, திருமகளுக்கு நிகரான அழகினைக் கொண்டிருந்ததை,

**"அருமணி மரகதத் தங் ணாறிய**
**எரிநிறப் பொன்னித ழேந்து தாமரைத்**
**திருமக ளிவனெனத் திலக வெண்குடைப்**
**பெருமகன் கோயிலுட் பேதை வைகுமே"[7]**

என்ற பாடல், சைவ சமயக் கடவுளான முருகப் பெருமான் குறித்த பல்வேறு செய்திகள் சீவக சிந்தாமணியில் இடம்பெற்றுள்ளன. கிரவுஞ்ச மலையை முருகப் பெருமான் அழித்த வரலாற்றினை,

**“குன்றமார் பரிந்து வெள்வேற் குடுமிமா மஞ்ஞை யூர்ந்து**
**நின்றமால் புருவம் போல நெரிமுரி புருவமாக்கி”**[8]

எனும் பாடலடிகள் வாயிலாகவும், முருகப்பெருமான் வள்ளியை மணம் செய்தமையை,

**“கொழுங்கயற்கண் வள்ளி**
**நலனுகர்ந்தா னன்றே நறுந்தார் முருகன்”**[9]

எனும் பாடலடிகள் வாயிலாகவும் அறியமுடிகிறது.

புராணக் கதைகள் சில காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன. தேவகணிகையான திலோத்தமை காரணமாக பிரம்மதேவன் நான்கு முகங்களைப் பெற்று, விண்ணக வாழ்வை இழந்து, பின்னர் தவத்தால் பாவம் தீர்ந்த புராணக்கதை,

**“பெரும்பெயர்ப் பிரம னென்னும பீடினாற் பெரிய நீரான்**
**அரும்பிய முலையி னாளுக் கணிமுக நான்கு தோன்ற**
**விரும்பியாங் கவளை யெய்தான் விண்ணக மிழந்த தன்றித்**
**திருந்தினாற் கின்று காறுஞ் சிறுசொல்லாய் நின்ற தன்றே”**[10]

என்ற பாடலில் இடம்பெற்றுள்ளது. காமத்தின் இழிநிலையை விளக்கிக் கூறும் இடத்தில் வைதீகக் கடவுளர்களுக்கு நிகழ்ந்தனவற்றை ஏற்றவிடங்களில் திருத்தக்க தேவர் எடுத்தாள்கின்கிறார். அவ்வாறே பாண்டவர்கள், பாஞ்சாலி என்ற ஒரு பெண்ணை மணந்து பழி பெற்ற மகாபாரதக் கதையினை,

**“படுபழி மறைக்க லாமோ பஞ்சவ ரன்று பெற்ற**
**வடுவரை யாவர் பேர்ப்பார் வாய்ப்பறை யறைந்து தூற்றி**
**இடுவதே யன்றிப் பின்னு மிழுக்குடைத் தம்ம காமம்**
**நடுவுநின் றுலகமோம்ப னல்லதோ போலு மென்றான்”**[11]

என்ற பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

சீவகசிந்தாமணியில் இடம்பெற்றுள்ள முதன்மையான மகளிர் பாத்திரங்களைத் திருமகளின் அழகிற்கு ஒப்புமை காட்டும் திருத்தக்க தேவர், சீவகனின் வீரச்செயலை வெளிப்படுத்தும் போது வைதீகக் கடவுளர்களின் செயல்களை ஒப்புமை காட்டியுள்ளார். பல்வேறு கடவுளர் பற்றிய செய்திகளைக் காப்பியத்தில் திருத்தக்கதேவர் குறிப்பிட்டுள்ளமை குறித்து, கா.கோ. வேங்கடராமன், “திருத்தக்கதேவர் உவமை, விளக்கம், உரையாடல் ஆகியவற்றிலேயே இத்தெய்வங்களை அமைத்துக் காட்டுகின்றார். ஏற்கனவே தமிழ்மக்கட்கு அறிமுகமான தெய்வங்களையும் தெய்வக் கதைகளையும் குறிப்பிடின், கதை கேட்போர் விளங்கிக் கொள்ளமுடியும் எனக் கருதியே, இந்து சமயத் தொன்மத் தெய்வங்களை ஆசிரியர் கையாண்டிருத்தல் வேண்டும். வைணவர்கள் சிவனையும், சைவர்கள் திருமாலையும் தத்தம் தெய்ஙவங்களுக்கு அடுத்த தெய்வங்களாகக் கொள்ளுமாறே, சமணர்களும் தத்தம் கடவுளுக்கு அடுத்த நிலையை இந்து சமயக் கடவுளர்க்கு அளித்தனர்”[12] எனக் குறிப்பிடுகிறார்.

**பஞ்ச நமஸ்கார மந்திரம்**

துன்பகாலங்களில் மகளிர் ‘பஞ்ச நமஸ்கார’ மந்திரத்தை ஓதித் தம் துன்பத்தை விலக்கிக் கொள்வர். பஞ்ச நமஸ்கார மந்திரத்தின் விளக்கத்தை நச்சினார்க்கினியர், “ஓம் நமோ அரஹந்தாணம்”[13] எனக் குறிப்பிடுகிறார். இம்மந்திரம் வழித்துணை மந்திரம் எனப்படுகிறது. இம் மந்திரம் பற்றிய செய்தி சிலப்பதிகாரத்தில்,

**“மொழிப்பொருட் டெய்வம் வழித்துணை யாகென”**[14]

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. சிலப்பதிகாரத்தின் உரையாசிரியரான அடியார்க்கு நல்லார், “தெய்வமாவது பஞ்ச மந்திரம்; அ சி ஆ உ சா என்பன கொண்டு, என்பதனைக் கொள்ளவெனத் திருத்தத் துணையாக வென்றதனைக் கோவலன்

கண்ணகி கூற்றாக்கலாம்"[15] எனக் குறிப்பிடுகிறார். கவுந்தியடிகளுடன் மதுரை வந்த கோவலனும் கண்ணகியும் இவ்வழித்துணை மந்திரத்தைத் துணையாகக் கொண்டதை இதன்வழி அறியமுடிகிறது. சீவக சிந்தாமணியில், விசயையை மயிற்பொறியில் ஏற்றி அனுப்பும் போது சச்சந்தன், இப்பஞ்ச நமஸ்கார மந்திரத்தைக் கூறி அனுப்புகிறான். அவளும் அவ்வாறே பஞ்ச நமஸ்கார மந்திரத்தைக் கூறி மயிற்பொறியில் கிளம்பியமையை,

**"அன்புமிக் கவலித் தாற்றா வாருயிர்க் கிழத்தி தன்னை**
**இன்பமிக் குடைய சீர்த்தி யிறைவன தாணை கூறித்**
**துன்பமில் பறவை யூர்தி சேர்த்தனன் துணைவி சேர்ந்தாள்"**[16]

எனும் பாடற் கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

**இல்லற மகளிரும் நோன்புகளும்**

இல்வாழ்க்கை மேற்கொண்டு ஒழுகும் மகளிர்க்குரிய நோன்புகளைச் சமண ஆகமங்கள் விளக்கியுள்ளன. இல்வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள ஆண்களும் பெண்களும் மும்மணியைக் கடைப்பிடிப்பவர்களாக இருக்கவேண்டும். நற்காட்சி, நல்ஞானம், நல்லொழுக்கம் என்பன சமணசமயம் குறிப்பிடும் மும்மணிகளாகும். இவற்றைச் செய்தலையே 'அறம்' எனச் சமணச் சான்றோர் குறிப்பர். "மும்மணியைக் கடைப்பிடிப்பவர் இல்லறத்தார், துறவறத்தார் என இருவகைப்படுவர். கொலை, பொய், களவு, காமம், உடமைப்பற்று ஆகிய ஐந்தும் ஐம்பெரும் பாவங்களாகும். இவைகளை ஓரளவிற்கு விட்டவர் இல்லறத்தார் என்றும், முழுமளவும் விட்டவர் துறவறத்தார் எனவும் கூறப்படுவர்"[17] என இல்லறத்தார், துறவறத்தார்க்குரிய வாழ்வியல் நெறிமுறைகள் குறித்துச் சமண சமயம் குறிப்பிடுகிறது. இல்லற வாழ்க்கையை மேற்கொண்டு வாழ்பவர், ஓரளவிற்கேனும் இவற்றைக் கைக்கொண்டு வாழ்தல் வேண்டும் என்பதை இக்கருத்திலிருந்து அறியமுடிகிறது.

**சமண சமயம்**

சமண சமயம் இல்லற வாழ்க்கை மேற்கொண்டு வாழ்வதை எதிர்க்கவில்லை. இல்லற வாழ்க்கையே துறவு வாழ்க்கைக்கும், முக்தி நிலைக்கும் அடிப்படையாக அமைகிறது என்பதைச் சமண சமயம் ஏற்கிறது. இல்லற வாழ்க்கையை இனிதே வாழ்ந்த பின்னர்த் துறவு வாழ்க்கையை விரும்புதல் வேண்டும் என்பதைச் சமண சமயம் வலியுறுத்துகிறது. “இல்லறமே துறவறத்திற்கும் முக்திக்கும் முதற்காரணமாக அமைகிறது. பகவான் ஆதிநாதர், சாந்திநாதர், பரதச்சக்ரவர்த்தி இராமர் முதலிய மகான்களும் கூட முதலில் இல்லறத்தையே கடைப்பிடித்தவர்கள் ஆவர். ஒவ்வொரு இல்லறத்தாரும் துறவறத்தின்பால் நாட்டங்கொள்ள வேண்டும். துறவிகள்வழி அறமும் தானமும் அறியப்படுகின்றன. துறவிகளின் நிலைக்கும் அறம் மற்றும் தானத்திற்கு அடிப்படைக் காரணமாக இருப்பவர் இல்லறத்தாரே”[18] எனும் கருத்திலிருந்து இல்லற வாழ்க்கை குறித்த சமணத்தார் கொள்கையினை அறிய இயலும். இல்லறத்தார்க்குரிய குணவிரதம் குறித்து அச்சணந்தி அடிகள் சீவகனிடம்,

**“கொழுங்களி யுணர்வினாரைக் குணவதங் கொளுத்த லாமோ”**[19]

என்ற பாடல் வரியின்வழி அறியமுடிகின்றது.

## இல்லறத்தார் வழிபாட்டு முறைகள்

இல்லற வாழ்வு மேற்கொள்பவர்கள் இறையன்புடன் பகவானைத் தொழுதல் வேண்டும் என அறிவுறுத்தப்படுகின்றனர். அவ்வாறு வழிபாடு செய்வோர் உலக மக்களின் போற்றதலுக்கு உரியவராகவும் புனிதத் தன்மை உடையவராகவும் திகழ்வர் என்பதைச் சமணசமயம் எடுத்துரைத்துள்ளது. “ஜினபகவானை வணங்காதவர், பக்தி செலுத்தாதவர், பூஜை செய்யாதவர் வாழ்க்கை வீணே. அத்தகையோரின் வாழ்க்கை இழுக்கையே அவருக்குத் தரும். இல்லறத்தார் அதிகாலை எழுந்து பக்தியுடன் ஜினபகவானைத் தரிசிப்பது, திகம்பர முனிகளை

வணங்குவது, அவர்தம் அறவுரையைக் கேட்பது தினசரி செய்யும் அவசியப் பணியாகக் கொள்ள வேண்டும். அதன் பிறகு தான் மற்ற பணிகளில் ஈடுபாடு கொள்ளவேண்டும்”[20] என இல்லறத்தாரின் இறைவழிபாட்டு முறைகள் குறித்துச் சமணச் சான்றோர் விளக்கியுள்ளனர்.

மகனைப் பெற்ற தாய்மார், கன்னிப் பெண்கள், இல்லற மகளிர் முதலானோர் மேற்கொண்ட நோன்புகள் குறித்த செய்திகள் சீவகசிந்தாமணியில் இடம்பெற்றுள்ளன. இந்நோன்புகளிருக்கும் முறை, நோன்புகள் இருப்பதனால் உண்டாகும் பயன் முதலியன காப்பியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன.

### இல்லற மகளிர்

இல்லற மகளிர், மணம் மிக்க மலர்களாலும், சந்தனத்தாலும் அருகக் கடவுளை வணங்கியமையை,

**“விண்பொழி பூமழை வெல்கதிர் நேமிய**
**வண்புகழ் மாலடி வந்தனை செய்தாள்”**[21]
**“இம்பரி˙லாநறும் பூவொடு சாந்துகொண்**
**டெம்பெரு மானடிக் கெய்துகென் றேத்தி”**[22]

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. கணவனுடன் அருகக் கடவுளின் கோயிலுக்குச் சென்று வழிபாடு செய்த விசயை வாயிலாக இதனை அறியமுடிகிறது.

### அறவோர் வழிபாடு

இல்லற மகளிர் தம் துணைவருடன் அறவோரைப் போற்றி வழிபடுதல் சமணசமயம் சார்ந்த் வாழ்வியல் நெறியாகும். சீவகனின் வளர்புத் தாயான சுநந்தை தன் கணவனுடன் அறவோரைப் போற்றியதை,

**“கறவைகாண் கன்றின் வெ.ႆ.கிக் கண்டடி பணிந்து காமர்**
**நறவயா வுயிர்க்கு மாலை நாற்றிய விடத்து ளேற்றி**

**அறவியாற் காறு மூன்று மமைந்தநா லமிர்த மேந்தப்**
**பறவைதா துண்ண வண்ணம் பட்டினிப் பிரிவு தீர்ந்தான்”**[23]

எனும் பாடல்வழி அறியமுடிகிறது. இப்பாடலில் இடம்பெற்றுள்ள ‘ஆறும் மூன்றும் அமைந்த நாலமிர்ந்தம்’ எனுந் தொடர்வாயிலாக அறவோரை ஒன்பது வகையினால் வழிபட்டு, உண்பன, திண்பன, உறிஞ்சுவன, பருகுவன எனும் நான்கு வகை உணவுகளை அளித்தல் வேண்டும் என்பதை அறியமுடிகிறது.

**“ஒன்பது வகையினோதிற் றுத்தமர்க் காகு மார்த்த**
**இன்பத மருளி யீத லிடையென மொழிப யார்க்கும்**
**துன்புற விலங்கு கொன்று சொரிந்துசோ றூட்டி னார்க்கும்**
**நன்பொருள் வழங்கி னார்க்கும் பயனமக் கறிய லாகா”**[24]

இவ்வொன்பது வகை குறித்து நச்சினார்க்கினியர், “எதிர்கொள லிடநனி காட்டல், கால்கழீஇ, அதிர்பட வருச்சனை யடியின் வீழ்தரல் மதுரநன் மொழியொடு மனமெய் தூயராய், உதிர்கநம் வினையென வுண்டி யேந்தினார்”[25] எனக் குறிப்பிடுகிறார். நச்சினார்க்கினியர் அளிக்கும் இவ்விளக்கத்திலிருந்து,

1. **எதிர்கொளல்**
2. **இடம் அளித்தல்**
3. **கால் கழுவுதல்**
4. **அடி போற்றுதல்**
5. **அர்ச்சித்தல்**
6. **இனிய மொழி கூறல்**
7. **தூய மனத்தவராதல்**
8. **தூய உடலினராதல்**
9. **வினை விலக வேண்டுதல்**

எனும் அறவோரைப் போற்றும் ஒன்பது முறைமைகளை அறியமுடிகிறது.

**சீவகன் தாய் விசயை**

புதல்வனைப் பெற்ற தாய்மார், தம் புதல்வர்களின் மேன்மைக்காகவும், நலத்திற்காகவும் நோன்புகள் இருந்தமையைச் சீவகனின் தாயான விசயை வாயிலாக அறியமுடிகிறது. சச்சந்தன், கட்டியங்காரனால் கொல்லப்பட்டதற்குப் பின்பு, இடுகாட்டில் குழந்தையைப் பெற்றெடுத்த விசயை, அக்குழந்தையைக் கந்துக்கடன் எடுத்துச் சென்ற பின்னர், கூனியாக வந்த சண்பகமாலை, விசயையை 'தண்டகாரணியம்' என்னும் காட்டிற்கு அழைத்துச் சென்று அங்குத் தவம் புரியத் தூண்டுகிறது. விசயை, காவிக்கல்லால் தோய்ந்த நுண்ணிய நூலால் செய்யப்பட்ட புடவையை உடுத்து, முதலில் மேற்கொண்ட நோன்பு மகனின் உயர்விற்காக என்பதனை,

**"உடுத்தாள் கற்றோய் நுண்கலிங்க முரவோன் சிறுவ னுயர்கெனவே"**[26]

எனும் பாடலடியால் அறியமுடிகிறது. இவ்வாறு நோன்பியற்றியபோது, விசயை தன் உடலில் அணிந்திருந்த பல்வேறு அணிகலன்களைக் களைந்தமையை,

**"அரும்பொன் மாலை யலங்கலோ டாரம் புலம்ப வகற்றினாள்"**[27]
**"அங்கண் முலையி னணிமுத்து மரும்பொற் பூணுமகற்றினாள்"**[28]
**"அஞ்சச் சிவந்த மெல்விரல்சூ ழரும்பொ னாழி யகற்றினாள்"**[29]

என்னும் பாடல் அடிகள் வாயிலாக அறியமுடிகிறது. இவ்வாறு நோன்பிருந்த விசயை, தன் உணவு முறையையும் மாற்றிக் கொள்கிறாள். அரண்மனையில் பொன் கலத்தில் பால்சோற்றை உண்டவள் தவப்பள்ளியில் தூய இலைக்கறி உணவினை உண்டமையை,

**"பாலுடை யமிர்தம் பைம்பொற் கலத்திடைப் பாவை யன்ன**
**நூலடு நுசுப்பி னல்லா ரேந்தவு நேர்ந்து நோக்காச்**
**சேலடி கண்ணி காந்தட் டிருமணித் துடுப்பு முன்கை**
**வாலட கருளிச் செய்ய வனத்துறை தெய்வ மானாள்"**[30]

என்ற பாடற்கருத்து உணர்த்துகிறது.

தவப்பள்ளியில் மகனின் மேன்மைக்காக நெடுநாள் நோன்பு மேற்கொண்ட விசயையின் நிலை,

**“மாசொடுமி டைந்துமணி நூற்றனைய வைம்பால்**
**பூசுதலு மின்றிப்பிணி கொண்டுபுறந் தாழ**
**வாசமலர் மறைந்தவழி வாமனடிக் கேற்றித்**
**தோசமறத் துதிகள் மனத்தோதித் தொழுதிருந்தாள்”**[31]

எனும் பாடல், நீராடாத விசயையின் நிலையை உணர்த்துகிறது. அவளின் மயிர் நீராடுதல் இன்மையால் சடையாகி முதுகில் தொங்கிற்று. யாரும் அறியாத ஒரு மறைவான இடத்திலிருந்து மணம் மிக்க மலர்களால் அருகப்பெருமானைப் போற்றித் துதித்தமையை இதன்வழி அறியமுடிகிறது.

### நட்பினைப் பிரிந்த தீவினைக்காக வழிபாடு

சுண்ணப்பொடி காரணமாகக் குணமாலையும் சுரமஞ்சரியும் தம்முள் வருத்தங்கொண்டு பிரிகின்றனர். எந்தவொரு ஆடவனையும் காணவிரும்பாத சுரமஞ்சரி, கன்னிமாடத்தை அடைகிறாள். இன்பத்திற்குக் காரணமான விளையாட்டு இருவருக்கும் துன்பத்தை ஏற்படுத்துகிறது. சுரமஞ்சரிக்கு ஏற்பட்ட அவலத்திற்காக வருந்திய குணமாலை, தன் நட்புப் பிரிவிற்கு கழுவாய் செய்ய எண்ணி அருகக் கடவுளை வழிபடுகிறாள். ஆயிரம் பொன் தாமரை மலர்களையும், பிற அழகிய மலர்களையும் வைத்து அருகக் கடவுளை வழிபட்டமையை,

**“தண்ணந் தீம்புன லாடிய தண்மலர்**
**வண்ண வார்தளிர்ப் பிண்டியி னாளடிக்**
**கெண்ணி யாயிர மேந்துபொற் றாமரை**
**வண்ண மாமல ரேற்றி வணங்கினாள்”**[32]

எனும் பாடற்கருத்தின் வாயிலாக அறியமுடிகிறது. அருகக் கடவுள் வழிபாட்டின் போது வைத்து வணங்கவேண்டிய பொருள்கள் குறித்து, ‘‘மலரோ, பழமோ, ஏலம்,

இலவங்கம் போன்ற பொருட்கள் கிடைத்தால் அவற்றையும் பகவானுடைய படிமைக்கு முன்னர் வைத்து வணங்கலாம். இவ்வாறு வணங்கும் போது பஞ்ச பரமேட்டிகளின் பண்புகளை நினைவில் இருத்த வேண்டும்.”[33]

**காதலனைக் கணவனாகப் பெற தவம்**

குணமாலையைச் சீவகன் கட்டியங்காரனின் பட்டத்து யானையான ‘அசனிவேகத்தின்’ பிடியிலிருந்து காக்கின்றான். சீவகன் மீது பெருங்காதல் கொண்ட குணமாலை, பிரிவுத்துயரால் மிகவும் வருந்துகிறாள். அவனையே கணவனாக அடைந்திடவேண்டும் என விரும்புகிறாள். அரிய தவத்தைச் செய்தாவது அவனைப் பெறுவேன் எனக் குணமாலை குறிப்பிடுகிறாள்.

**“அந்தோ குணமாலைக் காதகா தென்றுலகம்**
**நொந்தாங் கழமுயன்று நோற்றானு மெய்துவனே”[34]**

என்ற வரிகள் புலப்படுத்தி நிற்கின்றது.

**கணவனின் துன்பம் களைதல்**

கட்டியங்காரனால் சிறைப்படுத்தப்பட்ட சீவகனின் நலன் வேண்டிக் காந்தருவதத்தை வழிபாடு செய்கிறாள்.

**“மணியியல் யவனச் செப்பின் மங்கலத் துகிலை வாங்கிக்**
**கணைபுரை கண்ணி யேற்ப வுடுத்தபின் செம்பொற் செப்பிற்**
**பிணையலு நறிய சேர்த்திப் பெருவிலை யாரந் தாங்கித்**
**துணைவனுக் குற்ற துன்பஞ் சொல்லிய தொடங்கினாள்”[35]**

எனும் பாடல், தூய வெள்ளாடையை அணிந்து, நறுமணம் மிக்க மலர்களையும் முத்து மாலையும் சூடிக் கொண்டு கணவனுக்கு நேர்ந்த துன்பம் நீக்கக் காந்தருவதத்தை வழிபாடு செய்தமையை இப்பாடல் புலப்படுத்துகிறது.

**“வீரனுற் றதுயர் மின்னென நீக்கிய மெல்லவே**
**நேரமன் னும்வரு கென்றுநின் றாணினைத் தாளரோ”[36]**

என்ற பாடல், தன் கணவன் உற்ற துயர் மின்னலைப் போன்று விரைந்து போக வேண்டி, விண்ணுலகத் தெய்வங்களைத் தன்பால் வருமாறு வேண்டுகிறாள். இருப்பினும் சீவகன் காந்தருவதத்தையின் மந்திர வலிமையால் தான், சிறையிலிருந்து விடுபட விரும்பாது, தன் நண்பன் சுதஞ்சணனை நினைத்து அவன் வாயிலாகச் சிறைத் துன்பத்தினின்று நீங்குகிறான். சீவகனைச் சுதஞ்சணன் வானில் கொண்டு செல்வதை அறிந்த காந்தருவதத்தை, அவனுக்கு நலம் உண்டாகட்டும் என விரும்பி, தான் அழைத்த தெய்வங்களை வழிபட்டு மீண்டும் அவ்விண்ணுலகத் தெய்வங்களை வழியனுப்பியதை,

**"சந்தமா லைத்தொகை தாழ்ந்துசாந் தங்கமழ் பூமியுள்**
**வந்தவிண் ணோர்களை வாழ்த்தியேத் திம்மலர் மாலைதூய்**
**எந்தைமார் களெழு கென்னவே கவிடுத் தாள்குரல்**
**சிந்தைசெய் யுஞ்சிற கர்க்கிளி தோற்குமந் தீஞ்சொலாள்"**[37]

என்ற பாடல் விளக்கி நிற்கின்றது.

**சுரமஞ்சரியின் காமதேவன் வழிபாடு**

முதிய அந்தணன் வேடத்தில் மாற்றுருக் கொண்டு வந்த சீவகனின் பாடலைக் கேட்டு மயங்கிய சுரமஞ்சரி, காமதேவன் கோயிலுக்குச் சென்று, காமனை வழிபட்டுச் சீவகனை அடைய விரும்பிய தன் உள்ளக்கிடக்கையை,

**"மாடம்புக் கநங்கற் பேணி வரங்கொவ னாளை யென்றாள்"**[38]

எனும் பாடல்வழி வெளிப்படுத்துகிறாள். காமதேவன் கோயிலுக்குச் சென்ற சுரமஞ்சரி, தனது இடது முழங்காலைக் கீழே ஊன்றி, கழுத்தை வலப்புறம் சாய்த்துத் தலையைத் தாழ்த்தி விழுந்தெழுந்து, பின்னர்த் தன் இரு கைகளாலும் காமனை வழிபட்டமையை,

**"பொன்னிலஞ் சென்னி புல்ல விடமுழந் தாளை யூன்றி**
**மின்னவிர் மாலை மென்பூங் குழல்வலத் தோளின் வீழக்**

**கன்னியங் கமுகின் கண்போற் கலனணி யெருத்தங் கோட்டித்**

**தன்னிரு கையுங் கூப்பித் தையலீ துரைக்கு மன்றே"[39]**

எனும் பாடற்கருத்தின் வழி அறியமுடிகிறது. தான் உள்ளத்தில் கருதிய செயல் நிறைவேறினால் காமனுக்குத் தான் வழங்கும் காணிக்கை குறித்து,

**"தாமரைச் செங்கட் செவ்வாய்த் தமனியக் குழையி னாயோர்**

**காமமிங் குடையேன் காளை சீவக னகலஞ் சேர்த்தின்**

**மாமணி மகர மம்பு வண்சிலைக் கரும்பு மான்றேர்**

**பூமலி மார்ப வீவ லூரொடும் பொலிய வென்றாள்"[40]**

எனக் குறிப்பிடுகிறாள். சீவகனைத் தான் பெற்றால், காமதேவனுக்கு மிகப்பெரிய மீன் கொடியும், அம்பும், கரும்பும், வில்லும், தேரும் தருவதாகச் சுரமஞ்சரி குறிப்பிடுவதைக் காணமுடிகின்றது.

## இல்ல வழிபாடு

கன்னிப்பெண்களின் அருகப்பெருமான் வழிபாடு குறித்து கேமசரி மேற்கொண்ட வழிபாட்டிலிருந்து அறிந்து கொள்ள முடிகிறது. தேன் நிறைந்த மலர்களைத் தூவி, நாவினால் வாழ்த்திப் பாடி வணங்குதல் வேண்டும் என்பதை,

**"வீங்கோத வண்ணனன் விரைததும்பு பூம்பிண்டித்**

**தேங்கோத முக்குடைக்கீழ்த் தேவர் பெருமானைத்**

**தேவர் பெருமானைத் தேனார் மலர்சிதறி**

**நாவி னவிற்றாதார் வீட்டுலக நண்ணாரே"[41]**

என்ற பாடற்கருத்து உணர்த்துகிறது. மூவுலகமும் பக்தியோடு போற்றிப் பாடும் அருகப் பெருமானைக் கேமசரி வாழ்த்திப் பாடுகிறாள்.

**"முத்துமிழு முந்நீர் மணிவண்ணன் மூன்றுலகும்**

**பத்திமையாற் பாடப் படுவான்றாள் பாடக்கேட்**

**டொத்தரம்பை யன்னா ளுவந்திவளொ டொப்பானோர்**

**வித்தகனை யின்னே பெறுக வெனவுரைத்தாள்"[42]**

எனும் பாடலில், ஏற்ற கணவனைப் பெறுதல் வேண்டி இத்தகைய வழிபாட்டினை மகளிர் மேற்கொண்டமையை அறியமுடிகிறது.

இல்லுறைத் தெய்வங்களுக்கு மகளிர் பூப்பலி செய்து வழிபடும் முறைமை குறித்து இலக்கணையாரிலம்பகம் வாயிலாக அறியமுடிகிறது.

**“விண்வி ளக்குவ போல்விரி பூந்துகள்**
**கண்வி ளக்கிக் கலந்தவெண் சாந்தினால்**
**மண்வி ளக்கி மலர்ப்பலி சிந்தினார்**
**பண்வி ளக்கிய பைங்கிளி யின்சொலார்”**[43]

எனும் பாடல், பைங்கிளியைப் போன்று இனிய சொற்களைப் பேசும் மகளிர், மணிகள் முதலியவற்றுடன், பூந்துகளைத் துடைத்து, வெண்சாந்தினால் நிலத்தை மெழுகி இல்லுறைத் தெய்வத்தை வழிபட்டமையைப் புலப்படுத்தி நிற்கின்றது.

அரண்மனையில் வாழும் அரசகுலப் பெண்கள் தெய்வங்களைப் பரவும் போது பலிச்சோறு கொடுத்து வணங்கும் வழிபாட்டு முறையை உடையவராய் இருந்துள்ளனர். அவ்வாறே இல்லுறை மகளிர் தம் மனைத் தூண்களில் உறையும் தெய்வங்களுக்குப் பலிச்சோறு இட்டு வழிபட்டுள்ளனர். இவ்வாறு வழிபடுவோர் வறுமையில் வாடும் வறியோர்க்கு சிறிய அளவேனும் சோற்றினை அளிப்பது சிறந்தது. என்பதனை,

**“நரம்பொலி பரந்த கோயி னன்னுதன் மகளிர் தூவும்**
**பெரும்பலிச் சோற்றி னீதல் பெரிதரி தாகு மேனும்**
**சுரும்பொலி கோதை யார்தம் மனைவயிற் றூண்டொ றூட்டும்**
**அரும்பலி யனைத்து மீயி னது பொருட் குன்று கண்டீர்”**[44]

எனும் பாடல்வழி அறியமுடிகிறது. தெய்வங்களுக்கு அளிக்கும் பலியை விட வறியோர்க்கு ஈதல் சிறந்தது என்ற கருத்தினை,

**“அற்றவர் வருத்த நீக்கி யாருயிர் கொண்டு நிற்கும்**
**துற்றவி ழீதல் செம்பொற் றுறக்கத்திற் கேணியாகும்”**[45]

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

**சண்பகமாலைத் தெய்வத்திற்குக் கோயில்**

சுடுகாட்டில் துன்புற்றுக் கிடந்த விசயை, தனக்குக் கூனி வடிவில் வந்து உதவிய செய்த சண்பகமாலைக்குச் சுடுகாட்டில் கோயில் அமைக்கிறாள். சீவகன் பிறந்த இடத்தையும் அறச்சாலையாக்குகிறாள். இவையாவும் சீவகன் கட்டியங்காரனைக் கொன்று ஆட்சிப் பொறுப்பேற்றவுடன் நிகழ்கின்றன.

**“தனியே துயருழந்து வீழ்ந்த சுடுகாட்டுள்**
**இனியா ளிடர்நீக்கி யேமஞ் சேர்த்தி யுயக்கொண்ட**
**கனியார் மொழியாட்கு மயிற்குங் காமர் பதிநல்கி**
**முனியாது தான்காண மொய்கொண் மாடத் தெழுதுவித்தாள்”**[46]

என இதனைத் திருத்தக்க தேவர் விவரிக்கிறார்.

**கணவனுடன் வழிபாடு**

சோலையில் குரங்கிடமிருந்து இனிய கனியைப் பறித்த ஏவலாளின் செயலைக் கண்ட சீவகன் உலக வாழ்வின் உண்மை நிலையினை உணர்கிறான். காமத்தையும் முதுமையையும் வெறுத்த அவன் உள்ளம் துறவின்பால் செல்கிறது. தன் இல்லறத் தொடர்பைத் துறக்க எண்ணிய சீவகன், மகளிர் அனைவரையும் அருகப் பெருமான் கோயிலுக்கு அழைத்துச் செல்கிறான். சீவகனுடன் சென்ற மனைவியர் எண்மரும் அருகப் பெருமானை வழிபட்டமையை,

**“நற்றவஞ் செய்த வீர ருளவழி நயந்து நாடும்**
**பொற்றதா மரையி னாளிற் பூஞ்சிகை முத்த மின்னக்**
**கொற்றவற் றொழுது சேர்ந்தார் கொம்பனார் வாமன் கோயில்**
**மற்றவன் மகிழ்ந்து புக்கு மணிமுடி துளக்கி னானே”**[47]

என்ற பாடற்கருத்தின் வழி அறியமுடிகிறது.

**விசயையின் துறவு உள்ளம்**

சீவகன் ஆட்சிப்பொறுப்பை ஏற்று, நல்லாட்சி புரிந்து வரும் நிலையில், விசயை, சீவகனை அழைத்து, நடந்த நிகழ்வுகளைத் தொகுத்துரைக்கிறாள். சச்சந்தன் ஆட்சிப் பொறுப்பை மறந்து காமவின்பத்தில் மயங்கிக் கிடந்தமையை எடுத்துரைத்து, சீவகனை நெறிப்படுத்துகிறாள். சீவகன் மனைவியர் எண்மரையும் அழைத்து ஒற்றுமையாக இருக்க வேண்டுகிறாள். பின்னர் தன் துறவு உள்ளத்தைச் சீவகனிடம் எடுத்துரைக்கிறாள். அதனைப் பொறாது வருந்திய சீவகனிடம்,

**“பிறந்துநாம் பெற்ற வாணா ளித்துணை யென்ப தொன்றும்**
**அறிந்தில் வாழ்து மென்னு மவாவினு ளழுந்து கின்றாம்**
**கறந்துகூற் றுண்ணு ஞான்று கண்புதைத் திரங்கி னல்லால்**
**இறந்தநாள் யாவர் மீட்பா ரிற்றெனப் பெயர்க்க லாமோ”**[48]

எனும் பாடல்வழி மனித வாழ்வியலை எடுத்துரைக்கிறாள். மனிதர்கள் தம் தீவினையால் தனித்தனியே பிரிந்து போவதன்றி ஓரிடத்திலேயே நிலைத்து வாழ்வதில்லை எனச் சீவகனிடம் குறிப்பிடுகிறாள். செல்வத்தின் நிலையற்ற தன்மையை,

**“முல்லை முகைசொரிந்தாற் போன்றினிய பாலடிசின் மகளி ரேந்த**
**நல்ல கருனையா னாள்வாயும் பொற்கலத்து நயந்துண் டார்கள்**
**அல்ல லடைய வடகிடுமி னோட்டகத்தென் றயில்வார்க் கண்டுஞ்**
**செல்வ நமரங்கா ணினைய்னமின் செய்தவமே நினைமின் கண்டீர்”**[49]

என்று எடுத்துரைக்கிறாள். நிலையற்ற செல்வத்தை நிலையானதென்று நினையாமல் தவத்தை நினையுங்கள் என அனைவருக்கும் அறிவுறுத்துகிறாள். விசயையுடன் சீவகனின் வளர்ப்புத் தாயான சுநந்தையும் துறவு மேற்கொள்ளத் துணிகிறாள். இருவரும் பல்லக்கில் ஏறித் துறவிடம் நோக்கிச் செல்கின்றனர். நகரில் உள்ள மகளிர் தம் கூந்தலில் சூடிய பூக்களைத் துறந்து தமது துயர நிலையை எடுத்துரைக்கின்றனர்.

பம்மையின் தவப்பள்ளியை நோக்கிச் சென்ற விசயை மற்றும் சுநந்தையுடன் ஆயிரம் சிவிகையில் மகளிர் உடன் செல்கின்றனர். அவர்களும் துறப்பதற்கு ஒருப்பட்டுச் சென்றவர் ஆவர். பம்மையின் தவப்பள்ளியை அடைந்த விசயையும சுநந்தையும் தம் துறவு உள்ளத்தை அவரிடம் எடுத்துரைக்கின்றனர்.

சமண ஆகமங்களில் கூறப்பட்டுள்ள முறைப்படி இருவரின் காலடிகளும் பாலால் கழுவப்படுகின்றன. அவர்களின் முலைகள் வெண்ணிற ஆடையால் கட்டப்படுகின்றன.

**"பாலினாற் சீறடி கழுவிப் பைந்துகில்**
**நூலினா னியன்றன நுனித்த வெண்மைய**
**காலனைக் கண்புதைத் தாங்கு வெம்முலை**
**மேல்வளாய் வீக்கினார் விதியி னென்பவே"**[50]

எனும் பாடல் வாயிலாக இதனை அறியமுடிகிறது.

**மகளிரின் துறவு**

தவப்பள்ளியில் இருந்த ஔவைமார், விசயை மற்றும் சுநந்தையின் தலை மயிர்களைக் களைகின்றனர். இந்நிகழ்வு,

**"மணியியல் சீப்பிடச் சிவக்கும் வாணுதல்**
**அணியிருங் கூந்தலை யௌவை மார்கடாம்**
**பணிவிலர் பறித்தனர் பரமன் சொன்னூற்**
**றுணிபொருள் சிந்தியாத் துறந்தன் மேயினார்"**[51]

என்ற பாடலில் இடம்பெற்றுள்ளது. நங்கைமார் இருவரும் மயிர் களையப்பட்டதற்குப் பின்னர் தோகை இழந்த மயில் போலத் தோன்றியமையை,

**"நங்கைமார்**
**தொன்மயிர் உகுத்தநன் மயிலிற் றோன்றினார்"**[52]

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. தவப்பள்ளியில் தன் தாய்மாரை வந்து வணங்கிய சீவகன், விசயையிடம் சில நாள்கள் அனைவரும் அந்நகரிலேயே

தங்கியிருக்க வேண்டுகிறான். ஆனால் உறவுப் பற்றை விடுத்த விசயை சீவகனுக்கு மறுமொழி கூற இயலாத நிலையில், பம்மையடிகள் சீவகனிடம்,

**“காதல னல்லை நீயுங் காவல நினக்கி யாமும்**
**ஏதில மென்று கண்டா யிருந்து நங்கை யென்ன”**[53]

என மறுமொழி பகர்கிறாள்.

விசயையின் துறவு வாழ்க்கையை மாற்ற இயலாத சீவகன், சுநந்தையிடம் அவளது துறவு உள்ளத்தை மாற்றுமாறு வேண்டுகிறான். அதற்குச் சுநந்தை கணவனை இழந்த நிலையில் தான் அரச வாழ்வை மேற்கொண்டால் அதனால் தனக்கு பழியே நேரும் எனக் குறிப்பிட்டுச் சீவகனை இனிதாக அரசாட்சி நடத்த வேண்டுகிறாள்.

**“சென்றதோ செல்க விப்பால் றிருமக ளனைய நங்கை**
**இன்றிவ டுறப்ப யானின் னருசுவந் திருப்பே னாயின்**
**என்றெனக் கொழியு மம்மா பழியென விலங்கு செம்பொற்**
**குன்றதனான் குளிர்ப்பக் கூறி கோயில்புக் கருளு கென்றான்”**[54]

என்ற பாடற்கருத்தால் இதனை அறியலாம்.

சீவகன் துறவு மேற்கொள்ளத் துணிந்த பின்னர்த் தன் எட்டு மனைவியர்க்கும் துறவின் மேன்மையை எடுத்துரைக்கிறான். முதுமைக்காலத்தில் மகளிரின் கொங்கைகள், பைபோல் தொங்கிக் கிடக்கும். அவர்தம் மழைக்கண்களும் இமை அழுகி ஒளிகெட்டு நிற்கும். மேனியின் அழகு குன்றி முதுமைப் பருவத்தினை மகளிர் எய்துவர். அத்தகைய கொடிய முதுமையை அடைவதற்கு முன்பே துறத்தல் நன்று என்பதைச் சீவகன்,

**“நீனிறங் கொண்ட வைம்பா னிழன்மணி யுருவ நீங்கிப்**
**பானிறங் கொண்டு வெய்ய படாமுலை பையிற் றூங்கி**
**வேனிற மழைக்கண் டாமு மிமைகுறைந் தழுகி மேனி**
**தானிறங் கரக்குங் காலந் தையலீர் மெய்ய தன்றே”**[55]

என எடுத்துரைக்கின்றான்.

துறவின் மேன்மையைத் தன் மனைவியர்க்கு எடுத்துரைத்த சீவகன் அவர்களையும் துறவு மேற்கொள்ள வேண்டுகிறான். மனைவியர் எண்மரும் சீவகனுடன் இணைந்து உலக வாழ்வைத் துறக்க விரும்புகின்றனர். முற்பிறவியில் தாம் செய்த தீவினை குறித்தும் எண்ணுகின்றனர்.

**"நாடக நயந்து காண்பார் நலங்கிளர் கண்கள் குன்றும்**
**ஆடகக் கலத்து ளான்பா லமிர்தினை நயந்துண் பாரை**
**நீடகம் வெகுண்டுங் கையாற் பிடித்துநீ ரட்டி யிட்டோம்**
**கோடக மணிந்த கோல முடியினாய் துறந்து மென்றார்"**[56]

மனைவியர் எண்மரையும் விசயையின் தவப்பள்ளியில் சீவகன் விடுக்கிறான். அங்குச் சென்ற அவர்கள் தம் அணிகலன்களைத் துறந்து, தூய வெண்ணிற ஆடைகளைக் கொங்கைகளில் இறுக்கக் கட்டுகின்றனர். தமது கூந்தலை உகுத்துத் துறவிற்கு ஆயத்தமாகின்றனர். இதனை,

**"நறும்புகை நான நாவிக் குழம்பொடு பளிதச் சுண்ணம்**
**அறிந்தவ ராய்ந்த மாலை யணிந்தபைங் கூந்தலாய்பொன்**
**நிறந்தரு கொம்பு நீலக் கதிர்க்கற்றை யுமிழ்வ வேபோற்**
**செறிந்திருந் துகுத்துச் செம்பொற் குணக்கொடி யாயி னாரே"**[57]

என்ற பாடல் விளக்குகின்றது.

இவ்வாறு நோன்பியற்றிய சீவகனின் மனைவியர், ஒளிநிறைந்த தம் கண்களால் எறும்புகளுக்கும் ஒரு துன்பம் நேராமல் பாதுகாத்து நடந்தும், இருந்தும் நின்றும் தவத்தை முடிக்கின்றனர்.

**"வல்லவன் வடித்த வேல்போன் மலர்ந்துநீண் டகன்ற வாட்கண்**
**மெல்லவே யுறவி யோம்பி யொதுங்கியு மிருந்து நின்றும்**
**முல்லையஞ் சூட்டு வேயின் முரிந்துபோ நுசுப்பி னல்லார்**
**மல்லற்குன் றேந்தி யன்ன மாதவ முற்றி னாரே"**[58]

இவ்வாறு இவர்கள் மேற்கொண்ட நோன்பு ‘மாதவம்’ என அழைக்கப்படுகிறது. இத்தவத்தினை ‘அருந்தவம்’ என்ற பெயராலும் திருத்தக்க தேவர் குறிப்பிடுகிறார். இதனை,

**“ஒழுக்கிய லருந்தவத் துடம்பு நீங்கினார்**
**அழிப்பரும் பொன்னுடம் படைந்த தொப்பவே”**[59]

என்ற பாடலடிகள் வாயிலாக அறியலாம். பெண்பிறப்பு இழிவானது என்பது சமண சமயக் கொள்கையாகும். தன் சமகால வாழ்வில் நோன்பியற்றி உலக வாழ்வைத் துறந்த பெண்களுக்கு முக்தி கிடைக்கும் எனச் சமணசமயம் குறிப்பிடுகிறது. தானம், தவம், பூசை, மெய்த்தவம் முதலியனவற்றைச் செய்து ஆடவர்கள் வீடுபேற்றினை அடைவர். ஆனால் மகளிர் சமகாலப் பிறப்பில் வீடுபேற்றை அடைந்திட முடியாது என்பதனை வாமன முனிவர்,

**“விதியினால் கதிகள் நான்கின் மேவிநின் றார்கள் தம்முள்**
**மதியினால் பெரிய நீரார் மக்களாய் வந்து தோன்றி**
**விதியினால் தானம் பூசை மெய்த்தவம் செய்து வீட்டைக்**
**கதிகளைக் கடந்து செல்வார் காரிகை யார்கள் செல்லார்”**[60]

எனக் குறிப்பிடுகிறார்.

**மகளிரின் அறநெறி**

முத்தி இலம்பகத்தில் சீவகனுக்கு அறம் உரைக்கும் சாரணர் கூற்றில் பெண்பிறப்பின் தன்மையைத் திருத்தக்க தேவர் எடுத்துரைத்துள்ளார். அறநெறியைப் பின்பற்றி வாழ்வோர் பெண்ணாகப் பிறவார் என்பதை,

**“செறியச் சொன்ன பொருடெளிந்தார் சேரார் விலங்கிற் பெண்ணாகார்”**

என்ற பாடலடி வாயிலாக எடுத்துரைத்துள்ளார். இதன் வாயிலாகப் பெண்பிறப்புக் குறித்துச் சமணசமயம் கொண்டிருந்த கொள்கை புலனாகிறது. “பெண்களுக்கு இந்தப் பிறவியில் (பெண் பரியாயத்தில்) முக்தி கிடைக்காது. எனவே சுக்லத்

தியானம் ஏற்பட முடியாது என்றாலும் நிராசை அடைய வேண்டியது இல்லை. தர்ம யோகத்தைப் பெண்களும் அடைய முடியும். இந்த தர்ம யோகத்தினால் பெண் பரியாயம் நாசம் அடையும். நிச்சயத்தில் தேவகதி கிடைக்கும். முறையாக முக்தியும் கிடைக்க ஏதுவாகிறது. இது ஜிநேந்திரரின் வாக்கு,"[61] என ஜைன தத்துவ நெறிகளை ஸ்ரீஆதிஸ்வரசுவாமி எடுத்துரைத்துள்ளார். 'சுக்லத் தியானம்' என்பது தியானத்தின் துவக்க நிலையாகும். அது வளர்ந்து முழுமை அடைதல் 'சுக்லத்' தியானம் எனப்படுகிறது.

பெண் பிறப்பை ஒழிக்க வேண்டுமாயின் இத்தகைய தவத்தைச் செய்திடல் வேண்டும் என்பதைச் சீவகனின் மனைவியர் மேற்கொண்ட நோன்பின் வாயிலாகத் திருத்தக்க தேவர் வலியுறுத்துகிறார்.

**"சூழ்பொற் பாவையைச் சூழ்ந்து புல்லிய**
**காழகப் பச்சை போன்று கண்டொறூஉம்**
**மாழை நோக்கினார் மேனி மாசுகொண்**
**டேழைப் பெண்பிறப் பிடியச் சிந்தித்தார்"[62]**

நோன்பு முற்றிய நிலையில் இருந்த மகளிரின் தோற்றம் இப்பாடலில் விளக்கப்பட்டுள்ளது. பொற்பாவை மீது கருஞ் சேற்றையுடைய தோல் போன்று மேனியெல்லாம் மாசு படிந்து அவர்கள் காணப்படுகின்றனர்.

**"ஆசை யார்வமோ டைய மின்றளியே**
**ஓசை போயுல குண்ண நோற்பின்**
**ஏசு பெண்ணொழித் திந்தி ரர்களாய்த்**
**தூய ஞானமாய்த் துறக்க மெய்தினார்"[63]**

என்ற பாடலில், ஆசை, பற்று, ஐயம் ஆகியன இன்றி, நோன்பியற்றிய மகளிர் புகழ் மிக்க தேவர் உலகில் உள்ளனவற்றை நுகரும்படி நோன்பியற்றுகின்றனர். 'பொல்லாது என்று கூறும் பெண்பிறப்பைக் கைவிட்டு இந்திரர்களாய் ஞானம் பெற்றுச் சுவர்க்கத்தை அடைகின்றனர்'.

“தீங்கைத் தருமென்று இழித்துக் கூறும் பெண்பிறப்பைக் கைவிட்டு இந்திரர்களாய் ஞானம் பெற்றுச் சுவர்க்கத்தை எய்தினாரென்க”[64] என நச்சினார்க்கினியர் குறிப்பர். இல்வாழ்க்கையில் ஐந்து அணுவிரதங்களைக் கடைப்பிடிக்கும் சீல ஒழுக்கத்தவராகி, உண்மையான தவத்தை உடைய முனிவர் முதலானோர்க்கு உணவு முதலிய தானங்களைச் செய்து, அருகக் கடவுளை வணங்கி, தங்கள் கணவனை மேலாக வாழ்ந்த கற்புடைய மகளிர், மறுபிறவியில் பெண் உருவத்தினின்று நீங்கி, மேலான தேவர்களாகப் பிறப்பர் என்பதை மேருமந்தர புராணம்,

**“விரதசீ லத்த ராகித் தானமெய்த் தவர்க்குச் செய்து**
**அருகனைச் சரண மூழ்கி ஆன்றவர்ச் சிறப்புச் செய்து**
**கருதிநற் கணவற் பேணும் கற்புடை மகளிர் இந்த**
**உருவத்தின் நீங்கிக் கற்பத் துத்தம தேவ ராவார்”**[65]

எனக் குறிப்பிடுகிறது.

இல்லற வாழ்க்கையை மேற்கொண்டு வாழ்கின்ற மகளிர் செய்கின்ற பாவங்கள் சீவகசிந்தாணியில்,

**“கொல்வாருங் கூட்டுட் செறிப்பாரு மாடவர்கள்**
**அல்லாரு நாய்வேட்ட மாடாத மாத்திரையே**
**அல்லாத பைங்கிளியும் பூவையு மாதியா**
**எல்லாங் கிளைபிரித்திட் டேமுறுநோய் செய்பவே”**[66]

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. ‘மகளிர் வேட்டைக்காக நாயுடன் வந்து உயிர்களைக் கொல்வதில்லை. மாறாக வீட்டினுள்ளிருந்து சமையலுக்காக உயிர்க்கொலை புரிகின்றனர். ஆசையுடன் வளர்க்கும் கிளி, நாகணவாய்ப்புள் முதலானவற்றைத் அவற்றின் இனத்திலிந்து பிரித்துக் கூட்டில் அடைத்து வைத்து அவை துன்புறுதலுக்குரிய தீமைகளைச் செய்கின்றனர். எனவே இத்தகைய தீவினைகள்

நீங்கப்பெற அவர்கள் தவமியற்ற வேண்டும் என்ற கருத்தினை இப்பாடற் கருத்திலிருந்து உய்த்தறியமுடிகிறது.

தேவருலகம் சென்ற சீவகனின் மனைவியர் அங்குத் தம் பெண் பிறப்பை ஒழித்து, தேவர்களாக மாறித் தேவ மகளிரைக் கூடி இன்பம் துய்க்கின்றனர்.

**“காம வல்லிகள் கலந்து புல்லிய**
**பூமென் கற்பகப் பொன்ம ரங்கள்போல்**
**தாம வார்குழற் றைய லார்முலை**
**ஏம மாகிய வின்ப மெய்தினார்”**[67]

இவ்வாறு இன்பமெய்திய அவர்கள் தேவமகளிர் கொண்ட ஊடலைத் தீர்க்கின்றனர். முற்பிறவியில் சீவகன் மீது ஊடல் கொண்ட அவர்கள் அவனைத் தலையால் வணங்கும்படி செய்த தீவினைக்காக இப்பிறவியல் தேவராகி, தெய்வ மகளிர் பாதத்தை வணங்கியமையை,

**“செய்த நீர்மையார் செயப்பட் டார்கடாம்**
**எய்தி யாவையும் முணர்க வென்பபோல்**
**மைய வாங்குழன் மடந்தை குண்டலம**
**நைய நின்றெலா நாண நக்கவே”**[68]

என்ற பாடல் வாயிலாக அறியமுடிகிறது.

**பிற ஆடவரை விரும்பிய மகளிர்க்குரிய தண்டனைகள்**

‘பிறன்மனை விழையாமை’ எனும் அதிகாரத்தில் திருவள்ளுவரும், நாலடியாரில் பொருட்பால் எனும் அதிகாரத்தில் சமண முனிவர்களும் பிறர் மனைவியை விரும்புதலால் ஆடவர்க்கு ஏற்படும் தீவினைகள் குறித்து விளக்கியுள்ளனர்.

இல்வாழ்க்கையில் கணவன் இருப்பப் பிற ஆடவரை விரும்பிய மகளிர் அடையும் துன்பங்கள் குறித்துத் திருத்தக்க தேவர் விளக்கியுள்ளார். இக்கருத்துகள் சமணசமயம் சார்ந்தனவாகவே உள்ளன.

**“குழற்சிகைக் கோதை சூட்டிக் கொண்டவ னிருப்ப மற்றோர்**
**நிழற்றிகழ் வேலி னானை நேடிய நெடுங்க ணாளும்**
**பிழைப்பி லாட்புறந் தந்தானுங் குரவரைப் பேணல் செய்யா**
**திழுக்கினாரி வர்கள்கண்டா யிடும்பை நோய்க் கிரைக ளாவார்”**[69]

இப்பாடலில், ‘தன் கூந்தலில் கணவன் சூட்டிய மாலையை அணிந்து கொண்டு, அவன் உயிருடன் இருக்கும் போதே அவனறியாமல், காம வேட்கை கொண்டு வேறொரு ஆடவனைத் தேடும் மகளிர் துன்பத்திற்கு இரையாவர் எனும் கருத்து விளக்கப்பட்டுள்ளது.

## தொகுப்புரை

விருத்தக் காப்பியமாக அமைந்துள்ள சீவகசிந்தமணி அடிப்படையில் ஒரு சமண சமயக் காப்பியம், என்பதை காப்பியத்தில் இடம்பெற்றுள்ள சமண சமயக் கருத்துகளைக் கொண்டு எடுத்துரைக்க முடிகிறது.

திருத்தக் தேவர் சமண சமயத் துறவி என்று அறியப்படுகிறது. தாம் சார்ந்த சமயத்தின் கொள்கைகளையும், அவற்றின் கோட்பாடுகளையும் பதிவு செய்யும் நோக்கில் சீவகசிந்தாமணி என்ற ஒப்பற்ற காப்பியத்தைப் படைத்தளித்துள்ளார் என்பது ஆய்வின் வழியாக அறியமுடிகிறது.

திருத்தக் தேவர் தான் இயற்றிய சீவகசிந்தாமணியில், சமண சமயத்தின் கொள்கைகளைக் காப்பியப் பாத்திரங்கள் வழியாக நிறுவியுள்ளதைக் காணமுடிகிறது.

காப்பியத்தில் சமண சமயக் கடவுளர்கள் மற்றும் சமண சமயக் கொள்கைள் குறித்தான பதிவுகள் மட்டுமின்றி, பிற சமயக் கடவுளர்கள் குறித்தான பதிவுகளும், வேதங்கள் மற்றும் புராண இதிகாசக் கருத்துக்களும் இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.

சமண சமயக் கொள்கைகள் மட்டுமின்றி பிற சமயக் கடவுள் மற்றும் கொள்கைகள் குறித்த பதிவிலிருந்து, இக்காப்பியத்தின் ஆசிரியர் சமயக் காழ்ப்புணர்ச்சி அற்றவர் என்பது புலனாகின்றது.

தமிழர்கள் ஆரியத்திற்கு முன்னதாகவே கடவுள் கொள்கை உடையவர்களாக இருந்துள்ளனர். ஐவகை நிலங்களுக்குரிய தெய்வங்களும், அவற்றிற்கான வழிபாட்டு முறைகளும், தமிழர்களின் தொன்மையான கடவுள் கொள்கையும் இக்காப்பியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

சமண சமயத்தை முதன்மை நோக்கமாகக் கொண்டு பாடப்பட்ட சீவகசிந்தாமணி காப்பியத்தில், கடவுள் வாழ்த்துப் பாடலாக சமண சமயக் கடவுளர் வணக்கம் இடம்பெற்றுள்ளது. கடவுள் வணக்கத்தில் துதி வணக்கங்களாக, சித்தசரணம், அருகசரணம், சாது சரணம் என்ற துதிச்சொற்கள் இடம்பெற்றுள்ளன.

சமண சமயத்தின் கடவுளான அருக தேவர் குறித்தான பதிவுகள் காப்பியத்தில் ஆங்காங்கே பதிவாக்கம் பெற்றுள்ளதைக் காணமுடிகிறது.

ஆரியத்திற்கு மாற்றான சிந்தனை கொண்ட சமயமாக சமண சமயம் விளங்குவதை அறியமுடிகிறது.

திருத்தக்க தேவர் காலத்திய சமூகத்தில் வைதீகம் பெரும் வளர்ச்சி பெற்றிருந்ததை அறியமுடிகிறது. தமிழ்க் கடவுளான முருகப் பெருமான் குறித்தான பல்வேறு செய்திகள் காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன.

கடவுளர்களின் வடிவ ஒப்பனை காப்பிய மாந்தர்களுக்கு ஒப்புமை செய்யப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. மகளிர் பாத்திரங்களுக்கு திருமகள் உவமிக்கப்பட்டுள்ளது போல், சிவன், திருமால் மற்றும் முருகன் ஆகிய கடவுளர்கள் சீவகனுக்கு உவமையாக்கப்பட்டுள்ளன. இவற்றிலிருந்து, தமிழ்க் கடவுளர்கள் ஆரியர்களின் வைதீகச் சமயத்திற்குள் நுழைந்தள்ளதை அறியமுடிகிறது.

மகளிர் தங்கள் துன்பங்களைப் போக்கிக் கொள்ள பஞ்ச நமஸ்கார வழிபாட்டினை மேற்கொண்டுள்ளனர். இல்லற மகளிர் சுகமான வாழ்விற்காக நோன்புகளையும் கடவுள் வழிபாடுகளையும் செய்துள்ளனர்.

தீவினைகள் தங்களை அணுகாமல் இருப்பதற்கு விரதங்களை மகளிர் மேற்கொண்டுள்ளதைக் காணமுடிகிறது.

காதலனைக் கணவானகப் பெறவேண்டும் என்று மகளிர் வரம் வேண்டியுள்ள செயலைக் காணமுடிகிறது. கணவனின் துன்பம் போக்க எண்ணிய மகளிர் கடவுள்களுக்கு நோன்புகள் இருந்துள்ளனர்.

சுரமஞ்சரி சீவகன் கிடைக்க வேண்டி காமதேவனை வழிபாடு செய்து நோன்பு இருந்துள்ளதைக் காணமுடிகிறது. மகளிர் முக்தி நிலை அடைவதற்குரிய வழிமுறைகள் கூறப்பட்டுள்ளன. இத்தகைய சிந்தனை சமண சமயத்தின் வழிபட்டதாக அமைந்துள்ளது.

பிற ஆடவரை விரும்பும் மகளிர் மிகுந்த தண்டனைகளுக்கு ஆளாக்கப்பட்டுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. மகளிர் சமயம் சார்ந்த கொள்கைகளிலும், தங்களை ஈடுபடுத்திக் கொண்டுள்ளதைக் காப்பியத்தின் வழியாக அறியமுடிகிறது. காப்பியம் முழுவதும் சமணநெறிகள் கூறப்பட்டு இருந்தாலும் இறுதிப்பகுதியாக உள்ள முக்தி இலம்பகத்தில் சமணசமய நுண்பொருளை முறைபடுத்தித் தொகுத்தும் வகுத்துத் விரித்தும் கூறியிருப்பது போற்றுதற்குரியதாக அமைகின்றது.

சீவகசிந்தாமணிக் காலத்தில் சமய சாதி அமைப்புகள் தோன்றிவிட்டன. சீவகசிந்தாமணி அவற்றை அறிய செய்துவிட்டது சமணர்கள் தமிழுக்கு அளித்த நூல்கள் அனைத்தும் சொல்ல இயலா சிறப்புடையது. சமணத் தெய்வமாக அருகன்

இருந்ததை சீவகசிந்தாமணி மட்டும் இன்றி மற்ற காப்பியங்களும் எடுத்துக்கூறுவதை அறியமுடிகின்றது.

உயிர்க்கொலை செய்யாமை, புலால் மறுத்தல், உடம்பு, செல்வம், இளமை ஆகியவை நிலையற்றவை என்பதை சமண சமயம் போதிக்கிறது. காப்பிய நூல்களிலும் பல மாற்றங்களைக் கொண்டு மக்கள் மனதில் நீங்கா இடம் பெறும் வண்ணம் சிறப்பான ஓவியமாகச் சிந்தாமணி திகழ்வதை இவ்வியல் விளக்கி நிற்கின்றது.

# சான்றெண் விளக்கம்

1. ச. சோமசுந்தர பாரதியார், தமிழும் தமிழரும், பக்.36-37.
2. சீவகசிந்தாமணி, பா.1:2-3
3. நச்சினார்க்கினியர், (உ.ஆ.), சீவகசிந்தாமணி, ப.5
4. சீவகசிந்தாமணி, பா.1467
5. முல்லைப் பாட்டு, 1-3
6. சீவகசிந்தாமணி, பா.188:3-4
7. மேலது, பா.183
8. மேலது, பா.286:1-2
9. மேலது, பா.482:1-2
10. மேலது, பா.207
11. மேலது, பா.211
12. கா. கோ. வேங்கடராமன், சிந்தாமணியின் அகவடிவமும் அமைப்பு வடிவமும், ப.65
13. நச்சினார்க்கினியர், (உ.ஆ.), மு.நூ., ப.141
14. சிலப்பதிகாரம், 10:100
15. அடியார்க்கு நல்லார், (உ.ஆ.), சிலப்பதிகாரம், ப.236
16. சீவகசிந்தாமணி, பா.273:2-4
17. A. சிம்ம ஜைன் சாஸ்த்திரி, சமணர் வழிபாட்டு முறைகள், ப.41
18. மேலது,
19. சீவகசிந்தாமணி, பா.378:4
20. A. சிம்ம ஜைன் சாஸ்த்திரி, மு.நூ. ப.43

21. சீவகசிந்தாமணி, பா.220:3-4
22. மேலது, பா.221:1-2
23. மேலது, பா.1125
24. மேலது, பா.2828
25. நச்சினார்க்கினியர், (உ.ஆ.), மு.நூ., ப.1385
26. மேலது, பா.353:4
27. மேலது, பா.349:4
28. மேலது, பா.350:4
29. மேலது, பா.351:4
30. மேலது, பா.354
31. மேலது, பா.1784
32. மேலது, பா.910
33. கனக. அஜிதாதாஸ், சிரே. தன்யகுமார், (தொ.ஆ.), ஜைனம் ஓர் அறிமுகம், ப.25
34. சீவகசிந்தாமணி, பா.1036:3-4
35. மேலது, பா.1146
36. மேலது, பா.1146:2-3
37. மேலது, பா.1160
38. மேலது, பா.2052:4
39. மேலது, பா.2056
40. மேலது, பா.2057
41. மேலது, பா.1467
42. மேலது, பா.1470

43. மேலது, பா.2394

44. மேலது, பா.2926

45. மேலது, பா.2926:1-2

46. மேலது, பா.2603

47. மேலது, பா.2738

48. மேலது, பா.2616

49. மேலது, பா.2622

50. மேலது, பா.2634

51. மேலது, பா.2637

52. மேலது, பா.2638:3-4

53. மேலது, பா.2643:1-2

54. மேலது, பா.2647

55. மேலது, பா.2940

56. மேலது, பா.2989

57. மேலது, பா.2994

58. மேலது, பா.3119

59. மேலது, பா.325:1-2

60. மேருமந்திரபுராணம், பா.737

61. ஸ்ரீ ஆதிஸ்வரசுவாமி, ஜைன தத்துவம், ப.13

62. சீவகசிந்தாமணி, பா.1320

63. மேலது, பா.3121

64. நச்சினார்க்கினியர், (உ.ஆ.), சீவகசிந்தாமணி, ப.1507

65. மேருமந்திர புராணம், பா.739

# ஆய்வு நிறைவுரை

தமிழ் மொழி தொன்மையும், சிறப்பும் வாய்ந்த ஒன்றாக உள்ளது. தமிழ் மொழியில் பல்வகையான இலக்கியங்கள் தோற்றம் பெற்றுள்ளன. அவற்றுள் காப்பிய இலக்கிய வகையும் ஒன்றாகும்.

தமிழ் இலக்கிய வரலாற்றில் சீவகசிந்தமணி முதன்மையான விருத்தக் காப்பியமாகப் படைக்கப்பட்டுள்ளது. இக்காப்பியத்தைச் சமண சமயத் துறவியான திருத்தக்கத் தேவர் அருளியுள்ளார்.

சமண சமயக் கொள்கைகள் மற்றும் கோட்பாடுகளை எடுத்துரைக்கும் முகமாக சீவகசிந்தாமணி காப்பியம் அமையப்பெற்றுள்ளது. மேலும், இக்காப்பியத்தில் தமிழர்களின் வாழ்வியல் முறைகள், சமண ஒழுக்க நெறிகள், மற்றும் பழக்க வழக்கங்கள் ஆகியன பதிவாக்கம் பெற்றுள்ளன.

சீவகசிந்தாமணி காப்பியம் இன்பச்சுவையைக் குறிப்பிட்டு, பின்னால் முக்தி நிலையை அடையும் வீடுபேற்றினைக் குறித்துப் பேசுவதாக அமைந்துள்ளது. எனவேதான், இன்பச்சுவையில் காப்பியத் தலைவன் சீவகன் எட்டுப் பெண்களை காதல் செய்து திருமணம் முடிக்கின்றான். இதானல் இக்காப்பியம் ‘மணநூல்’ என்ற சிறப்பினையும் பெற்றுள்ளது.

பதினைந்து இலம்பகங்களைக் கொண்டமைந்துள்ள சீவகசிந்தமணியில், காப்பியத் தலைவன் சீவகனின் பிறப்பு முதல் முக்தி நிலை அடைவது வரையிலான பல்வேறு செய்திகள் பதிவாகியுள்ளன.

ஒவ்வொரு இலம்பகங்களிலும், பல்வேறு மகளிர்களின் தனித்தன்மைகள், பண்புநலன்கள், குணநலன்கள், திறன்கள் மற்றும் அவர்கள் மேற்கொண்ட ஒப்பனைகள், ஆடை அணிகலன்கள் எனப் பல்வேறு பதிவுகள் இடம்பெற்றுள்ளதை அறியமுடிகின்றன.

ஆதிநிலையில் தனித்துவமாக விளங்கிய பெண்கள், தந்தை வழிச்சமூக அமைப்பில், ஆண்களுக்குக் கீழ் நிலையில் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. இருந்தபோதிலும், பெண்கள் ஆண்களுக்கு இணையாகப் பல்வேறு பணிகளை மேற்கொண்டிருந்ததற்கான சான்றாதாரங்களைக் காப்பியத்தின் மூலம் அறியமுடிகிறது.

மகளிர், உழவுத் தொழில் முதல் அரண்மனைக் காவல் பணி வரையிலும் பல்வேறு பணிகளைச் செய்துள்ளனர். உழவுத் தொழிலில் ஈடுபடும் மகளிர்கள் 'கடைசியர்' என்ற பெயரில் அழைக்கப்பட்டுள்ளனர். இல்லறப் பெண்கள், வீட்டு வேலைகளையும், பசுக்களையும் பாதுகாத்து, அவற்றிலிருந்து பால்களையும், நெய்களையும், வெண்ணெய்களையும் தயார் செய்து விற்பனை மேற்கொண்டிருந்ததைக் காணமுடிகிறது. இவ்வகையில், பெண்கள் குடும்ப வருமானத்திற்கான அடிப்படை வேலைகளையும் செய்துள்ளதை அறியமுடிகிறது.

அரண்மனையில் இளவரசிக்குக் காவல் காக்கும் பெண்கள், வில், வாள் போன்ற திறன் மிக்க போர் பயிற்சிகள் பெற்று சிறந்து விளங்கியுள்ளனர். அக்காலத்திய மகளிர் தங்கள் கணவர் இறந்தபோது, சமுதாயத்தில் பின்பற்றப்படும் மரபு சார்ந்த நம்பிக்கையில் ஈடுபட்டுள்ளனர். குறிப்பாகக் கணவர் இறந்த பின்னால், தங்கள் அணிகலன்களையும், சாப்பாட்டு முறைகளிலும் மாற்றங்களை ஏற்படுத்திக் கொண்டனர். மன்னர்களின் மனைவியர், அரசன் இறந்தபோது தானும் இறந்துபடுவதையே விரும்பினர். அக்காலத்தியச் சமூகத்தில் பரத்தமை ஒழுக்கம் கடியப்படவில்லை. பரத்தையர்கள் தங்கள் உடலை விற்றுப் பொருளீட்டி வாழக்கையை நடத்தியுள்ளனர். மகளிர் தங்கள் வாழ்வியலுக்கு ஏற்ப வாழ்க்கையைக் கட்டமைத்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

மகளிர் தங்களது ஓய்வுநேரங்களில் பல்வேறு விளையாட்டுக்கள் விளையாடியுள்ளனர். பந்தடித்தல் என்னும் விளையாட்டு மகளிரின் குறிப்பிடத்தகுந்த விளையாட்டாக அமைந்துள்ளது.

மகளிர் வீரமுள்ள ஆண்களை மட்டுமே திருமணம் முடிக்க விரும்பியுள்ள நிலைப்பாட்டைக் காணமுடிகிறது. திருமணம் முடித்த மகளிருக்குப் பல்வேறு பரிசுப் பொருட்கள் வழங்கப்பட்டன. போரில் வெற்றி பெற்ற மன்னர்கள், தோல்வியற்ற மன்னர்களின் மகளிர்களைக் கைக்கொண்டு, தங்கள் நாடுகளில் கோவில் பணிகளில் ஈடுபடுத்தினர்.

கணவனது இறப்பினைத் துயராகக் கருதிய மகளிர், மங்களச் சடங்குகளிலும், ஈமச்சடங்குகளிலும், தங்களை ஈடுபடுத்திக் கொண்டனர். காப்பியத் தலைவனாகிய சீவகனைப் பருவ மகளிரும், எட்டுப் பெண்களும் காமனைப் போல் கருதி நேசித்துள்ளனர். மேலும், சீவகன் உலாவருகின்ற பொழுது பருவ மகளிரும், பரத்தையரும் நேசம் கொண்டு விரும்பியுள்ளதை சீவகசிந்தாமணிவழி அறியமுடிகின்றது.

எட்டுப் பெண்களும், சீவகனை வெவ்வேறு வகையான அடிப்படையில் காதல் கொண்டு திருமணம் முடித்துள்ளனர். காப்பியத்தில் குறிப்பிடப்பட்டுள்ள எட்டுப் பெண்களின் திருமணங்களும், யதார்த்த நிலைக்கு உட்பட்டனவாக அமையவில்லை. எட்டுப் பெண்களை மணமுடிக்கும் சீவகனின் நிலைப்பாடு, தமிழ் அகத்திணை மரபினைப் பிரதிபலிப்பதாக அமைந்துள்ளது.

சமண சமயக் கருத்துக்களைப் வெளிப்படுத்தும் நோக்கில் சீவசிந்தாமணி காப்பியம் அமைந்துள்ளதை அறியமுடிகிறது. காப்பியப் பாத்திரங்களின் வழியாக சமண சமயக் கருத்துக்களைத் திருத்தக்கத் தேவர் பதிவு செய்துள்ளதை ஆய்வின் வழியாக கண்டறியப்பட்டுள்ளது.

சமண சமயக் கொள்கைகள் மற்றுமின்றி அன்றைய காலத்தியச் சமூகத்தில் நிலவிய ஆரிய, வைதீகச் சமயங்கள் குறித்தான கடவுள் கொள்கை, வழிபாட்டு முறைகள் ஆகியனவும் காப்பியத்தில் பதிவாக்கம் பெற்றுள்ளன.

பிற ஆடவரை விரும்பும் மகளிர் மிகுந்த தண்டனைகளுக்கு ஆளாக்கப்பட்டுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. மகளிர் சமயம் சார்ந்த கொள்கைகளிலும், தங்களை ஈடுபடுத்திக் கொண்டுள்ளதைக் காப்பியத்தின் வழியாக அறியமுடிகிறது.

காப்பியத்தில் இடம்பெற்றுள்ள மகளிர் திருமகளுக்கு இணையாக ஒப்புமை செய்யப்பட்டுள்ளனர். அதுபோல், காப்பியத் தலைவனாகிய சீவகன் திருமால், சிவன் மற்றும் முருகனோடு ஒப்புமை செய்யப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

இவ்வகையில், சீவகசிந்தாமணி காப்பியத்தில் பதிவாக்கம் பெற்றுள்ள மகளிரின் வாழ்வியல் முறைகளை இவ்வாய்வின்வழி அறியமுடிகின்றது.